A

# POETICAL VERSION IN TAMIL OF THE

# HOLY SCRIPTURES.

---

**PART, I.**

GENESIS AND EXODUS XX

---

EDITED BY THE

REV. C C MACARTHUR C. M. S.

# திருவாக்குப்புராணம்.

இஃது

கிறிஸ்துசமய வித்தியாசாலை மாணாக்கரும் பிறரும்
சத்தியவேதநூலைக் கற்றுக்கொள்வதற்குபயோகமாக
மேக்காதர்ஐயரால்
புராணநடையாகச் செய்விக்கப்பட்டது.

---

முதலாம்பங்கு

---

JAFFNA.

PRINTED FOR THE EDITOR BY RIPLEY & STRONG.

1866.

---

Should any profit arise from the sale of this Work it will be applied in aid of the Native Pastorate Endowment Fund of the Jaffna Church Missionary Society.

# திருவாக்குப் புராணம்.



துள்ளு தெண்டிரைத் தொல்கடற் பாரினுட்
கள்ள மற்ற கருத்துமெய்ஞ் ஞானிகள்
வள்ள லென்று வழுத்து மொருபொருள்
உள்ள முற்றென் னுணர்வினு ணிற்பதே.



## கடவுள் வாழ்த்து.

---

### பிதாவுக்குத்துதி.

மன்னுயிர்த் தொகுதி பாவ வழியினை யொருவித்துய்ய
நன்னெறிப் படருமாறு ஞானபோ தகத்தை நல்கத்
தன்னொரு மகவை மேனாட் சற்குரு வாகத்தந்து
பன்னருங் கருணை பூத்த பரமனைப் பணிதல் செய்வாம்.

### குமாரனுக்குத்துதி.

யாவருந் தெளிதற் கெட்டா வியல்பினோ டுள்ளத்தன்பு
மேவலாற் புவியின் மாந்தர் வேடமாய்ப் பாவம் போக்கற்
காவதோர் பலியாய் நன்மோட் சானந்த வழியாய் நின்ற
தேவசற் குணன்பொற்பாதஞ் சிந்தையாற்றொழுதுவாழ்வாம்.

### பரிசுத்தாவிக்குத்துதி.

மாயமாம் பிரபஞ்சத்தின் மயக்கறுத் தன்பர் தம்மைத்
தூயதா முணர்வோ ராக்கித் துன்றிய கருணை யோடும்
மேயபே ரின்பமுத்தி வீடுறு நெறிய ராகக்
காயவாங் குணங்கணல்கு மாவியைத் துதித்தல் செய்வாம்.

### திரியேகமூர்த்திக்குத்துதி.

தந்தையென நின்றுலகில் மகவைத் தந்துந்
தனயனென வீடேற்ற முலகோர்க் கீய்ந்தும்
கோதகலுஞ் சீர்ப்பரிசுத் தாவி யென்னக்
குலவுதொண்ட ரான்மாவைப் புனிதஞ் செய்தும்

# திருவாக்குப்புராணம்.

மேசகுபே ரின்பமூர்த்தி வாழ்வு நல்கும்
மெய்ஞ்ஞான திரியேக விமல னாகும்
நாதனுறு திருப்புகழை யென்று மே தி
நாவாலும் பாவாலும் நவிற்று வாமே.

## அவையடக்கம்.

முற்பர னருளால்மோசே முதற்பலர் மொழிந்த ஞானச்
சொற்பயில் சரிதந் தனனுட் டுன்றிய பொருளை யோர்ந்து
நற்றமிழ்ப் பாவினாலே நானுரைத் திடுதல் பானுற்
பொற்புறு மறிஞருக்குப் புன்னகை விளைக்கு மாதோ.

எப்பெரும்பொருட்குமேலாம் இறையவன்செயல்கடம்மைச்
செப்பிய வாற்றினாலே சிறியனேன் கவிசநக் குற்ற
மொப்பறு கலைஞரோதா ருட்பொரு ளோர்வராமால்
இப்பியிற் பிறந்து மொண்முத் திகழ்ந்திடற் பாலதாமோ.

## பதிகம்.

ஆதியிலே யெய்பெருமான் விண்ணும் மண்ணு
மகற்றிலுள்ள சராசரங்க ளனைத்தினோடுந்
தீதிலரா யதமேவை தமையுமாறு
தினங்களுக்குட் படைத்ததுவு மேழாநாளை
மேதினியோர் தனைநினைத்தற் கோய்வுநாளா
விதித்ததுவும் நரனையெவற் றினுக்குமேலாய்
போதிலகு சினைவிடவி யேதேன்காவுட்
பூவையொடும் வாழ்தியெனப் புகன்றிட் டாங்கே.

நின்றவொரு தாருவினிற் கனியை யுண்ணு
நெறியவர்க்குப் பணித்ததுவும் நெடுநா ளன்னோர்
அன்றமல னுரைத்தமொழி கடவா ரய்ப்பின்
அப்பணியை யலகையின்வஞ் சனையால்மீறித்
துன்றுபெரும் பாவிகளா யுலகிலின்றுந்
தொலையாத கொடுஞ்சாபந் தொடரக் கீழ்பாற்
சென்றுதுய ரொடும்பரவி யெம்பிரான்றன்
திருவாக்குத் தத்தமுட னருள்பெற் றுய்ந்தே.

அதமேவை யொடுங் கூடிக் காயீனாபே
லாதியாம் பிள்ளைகள்பெற் றதுவு மன்போ
டிதமாகப் பலிகடவுட் கீந்தவாற்று
லிளையோனைக் காயீன்செற் றதுவும்பாரிற்
கதமேவு நரர்பெருகிப் பாவஞ்செய்த
காரணத்தால் நோவாவோ டெண்மர்மாந்தர்
விதமாமற் றுயிர்வகையிற் சிலவு மல்லால்
மேவனைத்தும் பிரளயத்தால் வீயச் செய்து.

# பதிகம்.

நோவாவின் புத்திரருக் கெங்கோனாசி
நுவன்றதுவு மவர்மரபோர் தழைத்துப் போந்து
பாவேலின் கோபுரத்தைச் சமைத்த காலை
பாடைதடுமாறி யெண்ணம் பாழா யோர்பால்
மேவாது புவியிலெங்குஞ் சிதறி வாழ்ந்து
மிகுதீமை விளைத்ததனால் விமல மூர்த்தி
ஓவாநற் குணத்தினனா பிரகாமெனனும்
உத்தமனைக் கானானூ ருறவிதீந்த.

வரமுமுலோத் தின்வாழ்வு மிசும வேலின்
வரலாறும் வந்தியாய் முதிர்ந்த சாராள்
உரமருவு மீசாக்காங் குமரன் றன்னை
யுதவியது மாபிரகா மோர்தன் சேயைப்
பரனுவக்கப் பலியீதற் கிசைந்ததாறி
பலவுமத்தன் பால்வரங்க ளீசாக் செய்திச்
சிரமுறுமே சாயாக்கோப் பெனுமிரண்டு
சிறுவரையீன் றதுமேசா செய்த யாவும்.

ஏசாவின் முதற்பிறப்பி னுரிமை வௌவி
இறையருளபெத் தேலிலடைந் தியாக்கோப் பேருந்
தேசாரும் வனிதையரை யிலாபான் பாலிற்
சென்றுமணம் புரிந்திருந்து மாதுலற்குப்
பேசாது தனதூர்போம் நெறியில் மீண்டும்
பெம்மானைத் தரிசித்தோ ரிரவு முற்றுங்
கூசாது மல்லாடி வரங்கள் பெற்றுக்
கொண்டிசிர வேலெனுமப் பேர் குலவு மாறும்.

உருபன்முதற் புத்திரர்தஞ் செயலு மன்னோர்
யோசேப்பை விற்றதுவு மவனெகிப்தின்
நிருபன்விறற் பிரதானிக் கடிமை யாகி
நிறைகடந்தாங் கவன்றேவி நிகழ்த்தும் பொய்யால்
மருவுசிறைச் சாலையிடை நெடுநாள் வைகி
மன்னவற்குக் கனாவருத்தம் வகுத்த தாலெம்
பெருமனருள் பெற்றுயர்ந்தந் நாட்டை யாளும்
பேறுடைய வதிகாரம் பெற்ற நாளில்.

பஞ்சமிகக் கானானிலாகி வெய்ய
பசியதனா லவன்றுணைவர் தாமுன் செய்த
வஞ்சனையின் முடிபறியார் வருத லோடும்
மற்றவர்க டனைத்தெரிய வகுத்துக் காட்டி
அஞ்சுமவ ருளந்தெளியத் தயைகள் செய்திட்
டவ்விடத்திற் றந்தையையு மடையப் பண்ணி
விஞ்சுபுக ழந்நாட்டில் வளங்கள் சான்று
விளங்கியகோ சேனகரில் மிகுவாழ் வீந்து.

# திருவாக்குப்புராணம்.

மகிழ்வினுட னங்கேர்க்கண் வாழ்ந்த காலில்
மக்களுக்கும் யோசேப்பின் மைந்த ருக்குந்
துகளறுமா சிகள்சொல்லி யாக்கோப் பாங்கே
துஞ்சியதும் யோசேப்பு துணைவ ரோடும்
இகழ்வரிய நண்பினுடன் வைகிப் பின்ன
ரிறைவனருள் மொழிப்படியே கானா னாட்டிற்
புகழ்பெறவீ சிரவேலர் போகும் வண்ணம்
புகன்றன்னோன் புவிவாழ்வை யகன்ற வாறும்.

அன்னகரில் யோசேப்பை யறியா வேந்தன்
அரசுபுரிந் தீசிரவேல் மரபி னோருக்
கின்னல்புரிந் தாண்குழவி பிறக்குங் காறு
மெறிதிரைநீ ரிடைபுதைப்பித் திட்ட நாளில்
தன்னிகரில் மோசேயாந் தநயன் றோன்றத்
தாயவனை மூன்றுதிங்கள் மறைத்துக் காத்துப்
பின்னரசன் றனதாணைக் கஞ்சி நாணற்
பேழையில்வைத் தாற்றினிடை பேணி யுய்த்தே.

மறைந்தனளோர் சாரிருப்ப மன்ன னீன்ற
வனிதைநதி குடைநசையால் மருங்கி னேகி
அறைந்ததிரைப் பேராற்றங் கரையி னாண
லகத்தினிலக் குமரனைக்கண் டவன்றே சத்தின்
நிறைந்தவெழிற் குளமகிழ்ந்து கொடுபோய்த தன்னின்
னேயமுடன் வளர்த்ததுவு நெடுநா ளாங்கே
உறைந்தபின்றன் குலத்தொருவன் றனக்காங் கல்லூ
ருளனொருவ னுறுவருத்தம் புரிதல் காணா.

செயிர்த்தவனைத் தடிந்ததுவு மவ்வா றந்தத்
தேயத்தோர் பலரறிந்தா ரெனத்தன் னுள்ளத்
தயிர்த்ததனால் மீதியா னகருக் கோடி
அணிகிளருஞ் சிப்போரா ளென்னு மின்னை
உயிர்க்குநிகர் மனையவளாக் கொண்டே யங்கா
னுறைந்ததுவு முட்புதரி னொளிர்செந் தீயுட்
பயிர்ப்பில்குணத் தவனுக்குக் காட்சி யாகிப்
பரனுவந்து யேகோவா வெனுந் தன் நாமம்.*

உரைத்ததுவுந் தனதுசனஞ் சிறையில் வைகி
யுழக்கின்ற துயர்களைவா னுளங்கொண் டையன்
வரைத்தடந்தோள் மோசேயை யெகிப்து நாட்டின்
மன்னனிடந் தூதனுப்ப மற்றத் தூதன்
கரைக்கடங்கா வுவகையெனுங் கடலு ளாழ்ந்து
கடிதேகி யாரோனுந் துணைவ னோடும்
நிரைக்கதிர்மா முடிப்பார்வோன் பாற்போய்த் தேவ
னிகழ்த்தியசொற் படி சிறையை விடுநீ யென்ன.

# பதிகம்.

மலையயாய் லாறுடையயான வடாமை யால
மிக்கவொரு பதுவாதை விளைத்தங் காட்டை
ஐயனனி வருத்தலவ னஞ்சி யந்த
அருஞ்சிறையை விட்டதுவு மகாணற் சிந்து
மையமுற நீர்பிளந்து வழியாய் நிற்க
மாமேகத் தறிபகலிற் கனகுற் போதிற்
செய்யவன்னித் தம்பமுமாய்த் துணையா யத்தன்
செலவிசிர வேற்சனங்கள் சென்ற காலை. ௧௪

மீண்டுமவர் தமைச்சிறையு ளமைப்பா னெண்ணி
விறல்வேந்தன் மனக்கடின முடன் றருக்கித்
தாண்டுபரித் தேரிவுளி மிருப தாதி
தற்சூழத் தொடர்ந்து செய்ய கடலுட் சார
நீண்டபுனல்பரன்செயலி னெறியை மூடி
நின்றதினாற் சேனையுடன் கிருபன்றானும்
மாண்டதுவு மீசிரவேல் மரபோ ரந்த
வாரிதியின் க றி மகிழ்ச்சி யோடும். ௧௫

சீனவனந் தனிலடைந்த நன்னீர் மற்று
சிறைக்குறும்பூள் தேவருளா லடைந்த துங்கார்
வானணவுஞ் சீனுமால் வரை யிலேகன்
மகிமையுடன் றரிசனையா யருளிச் செய்த
ஞானமுறுங் கற்பனையீ ரைந்தும் வேறு
நவின்றருளும் பிரமாணம் நானு பேத
மானவைபெற் றதுமோசே யேகோ வாவால்
அழைக்கப்பட் டச்சிமயத் தணுகி யாங்கே. ௧௬

புரிந்தவையும் நாற்பதுநா ளவன்மற் றந்தப்
பொருப்பினிட மிருந்ததுவு மீசி ராவேல்
தெரிந்துபரன் றனைத்தொழநற் கூடா ரத்தைச்
செய்விதியும் பணிமுட்டும் பலிக ளாதி
பரிந்திடுபூ சனாமுறையுஞ் சாட்சி யின்கற்
பலகைகளும் பெற்றதுவு மையென் றாளும்
விரிந்தவெற்பி லுவனிருப்பச் சனம்பொன் றாலே
விழைந்துகன்றுக் குட்டியின் விக் கிரகஞ் செய்து. ௧௭

பணிந்ததுவும் பருப்பதநின் றிழிந்து மோசே
பாளயத்தி லணுகியவர் செயல்மே லையந்
துணிந்திருகற் பலகையையுந் தகர வீசிச்
சுளித்ததுவு மவன்செபத்தாற் றேவன் கோபம்
தணிந்ததுவு மவனமலன் மகிமை கண்டு
தருக்கியது மாரோனு மகாரும் பட்ட
மணிந்துகுரு வபிடேகம் பெற்ற துந்தே
வன்மகிமை கூடாரத் தமர்ந்த வாறும். ௧௮

பலிவகைகா ணிக்கைகளின் முறையுஞ் செய்யும்
பாவத்தி னிவிர்த்திகளு முணவுக் காகும்
பொலிவுறுமா மிசமாகு சங்க டம்மைப்
போக்குவிதி விகாரம்பண் டிகைகள் பொல்லார்
மெலிவடையுந் தண்டனைவிக் கிரக நீக்கல்
மெய்மார்க்க வழிபாடு நெறியின் றோர்க்கு
நலிவறுமா சியுமொழிந்தோர் தமக்குச் சாபம்
நாடுதலும் பிறவுமங்கே நவின்ற வாறும். ௧௯

கணக்கிடப்பட் டவ்வனத்தை யிகந்து பாரான்
கானகத்தி சிரவேலர் படர்ந்த தும்பின்
பிணக்குமுற முறையிட்டு செய்து சில்லோர்
பேரழலான் மடிந்ததுவு மோசே தேவ
வணக்கமிகப் புரிந்தொழிந்தோர் தமையக் காவில்
மாயாமற் காத்ததுவு மீரைந் தொற்றர்
இணக்கமறக் கானனிற் செய்தி சொல்லி
யெய்தியதோர் கலகமுமற் றிருவ ருண்மை. ௨௰

வகுத்தசத ரலவ்விரு வருடனைந் நான்கு
வயதின்கீ ழானோர்க டாமு மல்லால்
மிகுத்தவர்க ளிறுதிபெறு மளவும் யாரும்
வெங்கானத் துழலவையன் விதித்த துங்கோன்
வெகுத்தகல கம்புரிந்த கோரு ங்கப்பார்
விழுங்கியதும் வேறிருவர் தம்மைச் செந்தீ
செகுத்ததுவு மோசேக்கு மாரோ னுக்குஞ்
செய்ததொரு விரோதத்தா லந்த நாளில். ௨௧

பதினாலா யிரத்தெழுநூ றுட்கள் வாதைப்
பட்டழிய வொழிந்தோர்கள் ஆரோன் றூப
மதினாலுய்ந் ததுமோசே தன்கைத் தண்டால்
அதிர்வுறச்சற் பாறையினை யடித்துக் கானில்
நதியாதி நீர்க்கிடனின் மேரி பாவி
னறும்புனலீந் ததுமாரோன் தேவ பூசை
விதியாயுங் குருப்பட்டஞ் சுதனுக் கீந்து
மேதினிவாழ் வொருவியது மாராத் தின்கண். ௨௨

உற்றிடுங்கா ஞனியரை வதைத்த துங்கா
னூடிசிர வேலர்குறை கூறி யோர்காட்
பற்பலர்வெந் தழல்வாய்ப்பாம் பதனால் வாதைப்
பட்டதுவு மனத்தாப மடைந்து நோக்கி
மற்றவருய்ந் திடுமாறோர் கஞ்சப் பாந்தள்
வைத்திடப்பட் டதுமரிலும் பரவு மிக்குத்
தற்றிகொ ணகத்தவர்பல் பிரயா ணங்க
டொலைத்ததுவுஞ் சீகோனு மோகு மென்னும். ௨௩

# பதிகம்.

வேர்ந்தமைச் செருக்கதுவும் பாலாக் கெம்போன்
விரைந்திசிர வேலர்தம்பாற் பீலே யாமைப்
போந்துசபித் திடுதியெனப் போக்கச் தேவன்
புகன்றமொழி கடந்தவன்செல் செறியி லத்தன்
னந்தவதி சயக்காட்சி யதனு லன்றேன்
ஏகியவர்க் காசிபுகன் றதுஞ்சித் தீமிற்
சாந்தமறப் புரிந்தபவர் தன்னு லெண்மூ
வாயிரவர் தமதாவி வாதை யாலே. உச

இறந்ததுவும் யோசுவா காலேப் பென்னு
மிருவரல்லால் மேனுளி லெகிப்து நாடு
துறந்துவனம் புகுந்தமுதி யோர்கள் வீடித்
தொலைந்தபினீ சிரவேலர் தொகையுந் தீரா
மறந்திசழ்மீ தியானர்முடி வதும்பின் சென்ற
வழிநடையுங் காணனர் முடிவு மிக்குச்
சிறந்திடுசீ ரிலேவியர்கள் புரங்க ளோடு
சேருமடைக் கலப்புரமுந் தெரித்த வாறும். உரு

இறையவனறன பணியதனு லலகைபது நாட்டுக்
இறைவனிடந் தூதுசென்றோ [illegible]சி ராவேல்
சிறையகன்ற பின்னிகழ்ந்த பலவுந் தேவன்
தெரித்தபிர மாணமுடன் மீட்டுங் கூறி
பொறையினிரட் சகன்வரவும் பிறவு மாங்கே
புகன்றவருக் கந்நாளிற் றிடனுஞ் செப்பி
அறைதிகழும் கேபோவெற் படைந்து காணு
னணிநாடுங் கண்டிகவாழ் வகன்ற வாறும். உசு

தான்முதல்வ னெப்பொருட்கு மானேன் மோசே
சகதலவாழ் வொருவியபின் னவனுக் காக
நூன்புதல்வன் யோசுவா வென்போன் றன்னை
நோனர்க ளுளம்வெருவத் தெரிந்த தும்விண்
மீன்பொருவுந் தொகுதிகொளீ சிரவேற்சேனை
மிகவுமவற் கமைந்ததுவு மிருவ ரொற்றர்
வான்மருவு மணிமாடக் கானன் மூதூர்
வயினேகி மீண்டுமறு செய்தி கொண்டு. உஎ

வந்து புகன் றதுஞ்சனங்கால் கனையா வண்ணம்
வழிநடந்து கானனூர் மருவு மாறு
சிந்துபுனல் வகிர்ந்து நெறியோர் தானென்னுஞ்
செழுநதி யீந்திடச் சேரா ரெவருமுன்னம்
கொந்துடைப்புக்கதுமன்னு வுணவினேவும்
நூன்புதல்வனெரிகோவின் வெளியிற்றன்முன்
முந்துதெய்வச்சேனையதிபதிதனக்கு
மொழிந்தபடி மொய்த்தபெருஞ்சேனையோரும். உஅ

(வேறு.) மதிற்புரவமடைபட்ட வெரிகோவை வளைத்தார்த்துவரவலங்கம்
அதிர்ப்புறவங் கெழாகாளதிசயமா வீழ்ந்ததுவு மங்குளோரைச்
சதிப்புறக்கொன் றழித்ததுவு மிராசாப்பைத்தவிர்த்ததுவுந் தக்கவாயீப் [உக
பதிப்புறஞ்சேர்ந் தப்புரமும் பார்த்திபனும் படைப்பொருது பகையுந்தீர்த்து

வலிபெற்றுவிளங்குமவ ருடன்மலையப் பலவேந்தர் மனங்கொள்போழ்தில்
மெலியுள்ளமுடன்கிப யோனியரீ சிரவேல்பால் மேவலோரா
வொலிதற்ற சமர்க்கவரோ டிருத்தாச ரைவரெழ யோசுவாவெம் [ல். ௩௰
புலியிற்பொங்கமெளம்புங் கடைந்தவரைப் புரந்துபகை பொன்றப்போரி

லுழக்கிவர வொருபாலில் ஒருபாலிற் பரன்செயலா லுயர்வானின்று
முழக்கினெடுங்கன்மழையும பொழிந்ததனால்மொய்யனிக முடிவுகாணத்
தழற்குசெருமுடிவளவுந் தபனனையுஞ்சசியையும்விண டனினிற்பித்துச்
சழக்கினராமுடிவிருப ரைவரையும்நூன்குமரன் றடிந்தவாறும். ௩௧

அதிர்ந்துவரும்படையரசர் பலர்கெட்டுமுரிந்தோட வடுபோராற்றி
எதிர்ந்துபொருந்திறல்செழுமே ஞச்சிபருக்கிறுதிவிளைத் ததுமங்கெங்கும்
முதிர்ந்தவலி யுடன்முடுகி யவன்கவர்ந்தநாடுகளும் முன்னாள்மோசே
வெதிர்ந்தபகை தொலைத்துவென்றநாடுகளும் விகிதமாப் பகுசெய்து. ௩௨

எத்திசையும்புகழ்விளங்க யேகோவாவருள்பெற்றுய்ந் தீசிராவேற்
புத்திரரினுடன்கெழுமிப் பொரு ழவாங்குப் பொருந்திகெஞ்சிற்
குத்திரமினூன்சுதனெச்சரித்தவர்க்குப் போதனைகள் கொடுததுப்பின்னர்
இத்தரையிங்கிதமொருவி யெம்பெருமான்பதமருவியிருந்தவாறும். ௩௩

சிறந்தவியா யாதிபரீ சிரவேலையாண்டெதிர்ந்த செவ்வாம் வாரி
வறந்திட்ப்போர்புரிந்ததுவும் வலிகெழுமெப்பிருயிமர் பலர்வன்ஞாட்பில்
இறந்ததுவுந் தம்மனே ரிழுக்கடையக் கொடும்பாவ மியற்றிமிக்க
அறந்தவறித்தமர்களினுற்பென்யமீன்குலத்தவர்க ளழிந்தவாறும். ௩௪

உருத்தெனுமின் வரலாறுஞ் சாமுவேல் சரிதமுமிக்குரைசாலேலி
திருத்தகுபுத் திரரிவர்கள் செய்கைகளுஞ் செகமுதலாவனைத்துமீன்ற
கருத்தனரு சான்வதுவே பெருமைதமக்கென வுளத்திற் கருதார்தம்முன்
ஒருத்தனைத்தட்காவலனு வுதவுகெனவீசிரவேலொருங்குவேண்ட. ௩௫

தற்பரன்கீ சருள் மகவைத் தராபதியா வீந்ததுமச் சவுலாசீய
கொற்றவன்வீந் ததும்பின்பு கோலியாத் தைக்கடிந்தோன் கோமானுகி
மற்றவற்கா மணிமகுடம் புனைந்திறையோனுவக்குநெறி வழுவாதோனாய்ப்
பற்றலர்களுயிர்பருகிப் பார்புரந்து பரலோகம் படர்ந்தவாறும். ௩௬

ஈசாயீன் றருள்சுதனின் பின்பவன்சேய் சாலோமோனென்னுமேந்தல்
தேசார்மா முடிபுனைந்து தவிதிறைவனேர்ந்தபடி தேவன்றன்னை
ஆசாகா முறைதொழுதற் காலயமொன்றாக்கியது மதற்கண்காளில்
மாசாகாத்திரியேகன் காட்சிகொடுத் தருள்மாரி வழங்குமாறும். ௩௭

விலக்கப்பட்டிருந்தகுலக் கன்னியரைத் தவிதிறைசேய் வேட்டம்மாதர்
கலக்கட்பட் டவருவப்பத் தனக்குறுவான் றுணையாகும் காதன்மேலன்

# பதிகம்.

புலக்கப்பொய்த்தேவரின் பின்னுனஞ்சாய்த்தபோதமலனுருப்பானெஞ்சங்
கலக்கப்பட் டதுமவன்றன் காலத்தின் பின்புகத னிரேகாபேயாம். கூ

திருமருடம் புனேக்ராசு செலுத்துகையிற் பென்யமீன் யூதாவென்று
மிருமரபோ ரல்லாத வீசிரவேற் புத்திரருக் கேரோ பேயாம்
திருபதியாய் நின்றதும்பின் பக்குலங்க டமையாண்ட திருபர்தத்தம்
பொருவரிய சரிதமுடன் புங்கவன்பா லருளடைந்தவெலியாவாதி. கக

தீர்க்கதரி சிகள்செயலுந் தீத்தொழிலா லிசிரவேல் சிதறுமாறும்
மூர்க்கமுடன் தீமைசெய்த யூதரையெம் பெருமான்றன் முனிவுதூண்டப்
போர்க்குவலிகெழுநேபு காதநேசரெனும்நாமப் பொருவில்வேந்தன் [சுO
ஆர்க்குமனிகினியுடன்சென் றடிமைகளாக்கொண்டேன தணிகன்றுட்டில்

அடையவிளைத் தொழிந்தவருக் கதிபதியாச் சிதேக்கி யாவாகாம
முடையவனே யுதவியது மவன்கடவு ளுளம் வெறுப்ப வுலப்பிறிய
நடையவனுய் வாழ்ந்ததுமக் கரபாலன் றனக்கரசு நல்கிநின்ற [ந்தகாலே.
மிடையதிமாண்புடைப்பாபேல் வேந்தனேமேற் கொண்டுறைநான்விழை

அப்பாபே னகர்க்கிறைவ னெருசலேம் புரத்தைத்தன் னனிகமோடேற்
றெப்பாலும் வளேந்தரச னிருவிழியுங் குருடாக்கி மகார்கொன்றேது
மொப்பாகாநகரையழித் திழிஞர்சிலர்த்தீமையொழித்தங் கொழிந்துளோரை
தப்பாமற் சிறைப்படுத்தி நிதிகவர்ந்து பிரபுக்க ளானோர் தம்மை. சஉ

வீட்டிக்கே தலியாவை மீதியா னவர்தலைவ னுக்கிமீண்டும்
காட்டிற்கே கியதுமந்த நலிசிறையி லாண்டெழுபா னண்ணியூதர்
ஈட்டிற்கேதம்பொருந்தியிருந்ததுவும் பேர்சியர்கோன்கோரேசன்போன்
மீட்டுந்தே வாலயத்தை யியற்றுமெனத் தேவருளால் விளமபலோடும். சக

அந்தமொழிப்படிபழைய ஆலயத்தின் பணிமுட்டு அனேத்தும்பெற்றுப்
பந்தமுற யூதசன மெருசலேம் பதியணுகிப் பரனின்கோட்டம்
முந்துமுறைப்படியியற்றப் பகைவர்பொருதெழுதிரு முகத்தைக்கண்டு
விந்தைசெறிஅர்த்தசடாயெனுங்கொற்ற வேந்து தகைந் ததுவுமீணடும். சச

தேவனருள் பெறுந்தீர்க்க தரிசிகள்சொற் படிதொடங்கச் சேரலார்கள்
காவலனுந் தரியுவுக்குக் கடிதனுப்ப திருபத்தைக் கண்டவ்வள்ளல்
ஓவலற வாராய்ந்து கோரேசு மேனுளி லுதவாநின்ற
தாவறுகட் டளேகண்டாங் குத்தரவு தந்ததனுற் றடைவேறின்றி.

ஆலயத்தை யாக்கியது மதிகாரப் பத்திரம்பெற் றெருச லேமிற்
சீலமுற்ற வெஸ்றுப்போய்த் தேவனேயேத் தியதும்பின் செய்தவாறுபு
ஞாலமுற்று புகழுடையுந் நகரினிடை கேகேமி யூவு நண்ணிக்
கோலமிக்க மதிலெழுப்பிக் கொண்டதுவு மனந்தரமாங் குற்றயாவும். சஅ

ஏர்கிளரு மதிவதனத் தெஸ்தரென்பா ளகாசுவே ரிறையில் லாளாய்ப்
பார்புகழ வாழ்ந்ததுமப் பார்த்திபனுக் கமச்சனும் பழிசே ராமான்
சேர்திகழு மொத்தேகாய் தனேப்பணியா தியாயத்தாற் சலஞ்சாதித்தவ்
வூர்மகிழ விறந்ததுவும் மொத்தேகா யரசனு லுயர்ந்த வாறும். சஎ

# திருவாக்குப்புராணம்.

மேனாளில் யேகோவா மேலன்ப னாய்யோபை வெம்பிசாசந்
தானவ னுடன்சோதித் ததும்யாவுந் தான்றோற்றுஞ் சலிப்பிலாது
வானாதி தந்தபரன் மலரடியை மறந்திலனாய் மற்றத தேவற்
சானாத நண்புபடைத் தருஞ்செல்வ மிகப்பெற்றாங் கமர்ந்த வாறும். ௪௮

பத்தர்களா யுயர்ந்தமுன்னோர் பரம்பொருட்குக் கீர்த்தனையாப்பாட லுற்ற
துதிநியமாஞ் சங்கீதத் தொகுதியுநன் னீதிமொழித் தொகையு மிக்க
உத்தமமாம் பிரசங்கி யின்முறையு முந்நதமாம் பாட்டும் பல்கால்
அத்தனடி யவர்வாக்கால் அறைவித்த தீர்க்கதரி சனங்களோடு. ௪௯

தலம்புகழ்தங் குலச்சிறுமைக் கேரேமி யாவுள்ளந் தாங்கானாகிப்
புலம்புவதும் பாபேலார் பூபாலன மறந்தகனாப் புகலகேட்ப
நலம்புனையுந் தானியே லுரைத்தருத்தம் நவின்றநவும் நண்பா யந்த
உலம்புரைதிண் புயவேந்த னாதவுதயை மிகவும்பெற்றுயர்ந்தவாறும். ௫௦

துலங்குசுவர்ப் புறத்துவிர றோன்றிவரைந் ததற்கருத்தந் தானியேல்முன்
நலம்பெறச்சொற் றதும்நினிவே நகரத்தார் பாவத்தால் நந்தாதொண்மை
பலம்பெறச்சொற்றீதியெனபகர்ந்தபிரான்பணிகடந்துயோனாநன் னாங்[ன்
கலம்பெருங்காற்றினிலுலைய கடவுள்செயலதுவென்னக்கண்டங்கன்னோ

தான்மயற்சிந் தனையாற்செய் தவறதனா லத்துயரஞ் சார்ந்துநிற்க [டோர்
ஒன்றுயக்கம் பலர்க்குமென இசைதெறிசீரிடைத தன்னை யிடுவித்தாண்
மீன்வயிற்றில் மூன்றுதின மிருந்துபிழைத் ததுவுநினி வேயிற்போதந்
தேன்புயல்பெய்தெனப்பொழிந்துதேவமுனி வவற்ககலச்செய்தவாறும்.

கற்சிலையிற் புயநேபு காத்நேச ரெனுமரசன் றான்கற் பித்த
பொற்சிலையைத்தொழாமையினாற்பொங்கழலினிடைசினந்துபோடுவித்த
சிற்சிலருந் தேவனடி தொழுததனாற் சிங்கதநின் கெபியுட் சேர்த்த
நற்சிலைய துதிநாவான் றானியெலு முய்ந்துநல நண்ணுமாறும். ௫௩

யேகோவா பலவாற்றா லீந்ததிரு வாக்கதுபோல் யேசுநாதன்
பூசோவாழ் பவரேத்தப் புன்மனுவி னுருவெடுத்தப் புவியைப்போற்றச்
சேசோவா மனர்தலகை திகைத்தேங்கப் பெத்திலகேம் நகரிற்சென்ற
மாசோவா மதிவதனி மரியம்மை திருவயின்வந்தடைந்து தோன்றி. ௫௪

புல்லணையிற் கிடந்ததனைப் புதுமையையெம் பிரான்றூதர் புகலமேய்ப்பர்
வல்லசுவி சேடமதாக் கேட்டனுகி வணங்கியதுங் குணபானின்று
கல்லவுடுக் குறிகண்டு நாடிவரு மறிஞர்களா லோர்ந்தே ரோது [௫௫
கொல்லவுளங் கொண்டதுணர்ந் தியூதர்குலப் பதியாமக் குமரன்றன்னை.

வணங்கியெழுஞ் சாஸ்திரிகள்வல்லனுறையிடந்தனக்கு வருக்கக்கேட்ட
திணங்கமழும் வாள்[illegible]ந்தம் கோதார்க ணீங்கியதும் திருபனஞ்சித்
தணர்தருளான் யூதேயா தனிற்சாரீ ராண்டினுளாந் தநயர்தம்மைச்
சுணங்கலறக் கொலப்பணிப்பத் தூயவனாம் யோசேப்பு தேவதூதன். ௫௬

சொன்னபடி யெழுந்தந்தப் பதியதனை யொருவித்தன் றுணைவியான
அன்னமரியுடனந்த மகவையுங்கொண் டன்றெகிப்தினடைந்துவாழ்ந்தம்

மன்னனிறந் ததன்பின்பு கலிலேயா வளநாட்டில் நசரேத்தாமந்
நன்னகரி னிடைவாழ்வு நண்ணிவளர்ந் தேவகிறிஸ்துநாதனோங்கி. ௭

பன்னிரண்டாம் வயதாகிப் பஸ்காவை யாசரிக்க யெருசலேமில்
அன்னைதந்தை யுடன்னுகி யறிஞர்குழாத் திருப்பவவ ரறியார்போய்மீண்
டின்னலுறத் தேடியுற்ற போதிசைத்த வாசகமு மெலிசபேத்தாம்
மின்னிடையாள் வயிற்றோன்றி விமலனுக்கு முற்றூதனாகிமேய. ௮

யோவானென் றுரைசெழுபே ருடையான்மா னிடவடிவ முவந்துதாங்கி
பூவானெல் லாம்புரக்கும் புங்கவன்வந் தனனென்னாப் புரிவினோடும்
நாவானற் சுவிசேட நவின்றதுவும் யோர்தான்மா நதிதீரத்தில்
தேவானோன் றானுமன்று சேர்ந்தங்கு செறிந்தநரர் செய்கைபோல. ௯

சகரியா வின்குமரன் றன்கரத்தாற் சலத்தினா லிஸ்நானத்தைப்
புகரறப்பெற் றதுமாவி புறவம்போல் விண்ணின்று பொருவிலான்மேல்
தகவினுட னிறங்கிவந்து தங்கியது மிவனமக்குத் தருமன்பான
மகவிவனி லன்பினம்யா மெனவானிலசரீரி வழுத்துமாறும். ௧௦

ஆவியினா லிரட்சகனா ராரணிய மடைந்ததுந்தீ யலகையென்னும்
பாவியினாற் சோதிக்கப் பட்டுநாற் பதுநாளாப் பசியினோடும்
மேவியவன் றன்னைவென்று மேலவன்றன் றூதர்பணி விடைகள்செய்யக்
கோவியன்பார் மதிக்கவைகிக் கலிலேயாவளநாட்டிற் குறுகிப்பின்னர். ௧௧

சென்றுசென்றாங் காலயங்க டம்மிலுப தேசித்தச் செழுநன்னாட்டி
லொன்றுகின்ற கானவூ ருற்றுநரர் பலர்குழுமு மொருகல்யாண
மன்றினன்று முந்திரிகை யிரசமதா வைத்திடுமூ விருசாடிவனத்தையாக்கி
என்றுநின்ற தன்றேவ தத்துவத்தை வெளியாக்கி யெருசலேமில். ௧௨

மன்னுதிரு வாலயத்தில் வாணிகஞ்செய் வலைதமாற்று மாறுந் தன்பாற்
சென்றிரவில் வருநீக்கோ தேமுவினுக் குபதேசஞ் செய்த துஞ்சீர்
துன்றுகலி லேயாவின் றொல்கடலில் மீன்வேட்டைத் தொழிலராக
அன்றுகண்ட பேதுருவோ டந்திரே யாவாகு மநுசன்றன்னை. ௧௩

அடிமைக்கொண் டகலுலகையில் யாக்கோபு யோவானு மவரோடத்தின்
வடிமைத்தெண் டிரைக்கடலில் வலைதிருத்திவதிந்தவரா மவரைப்பாவ
மிடிமைக்சண் டாதழைத்தங் காட்கொள்ளுமாறுமொருவியன்கோவிற்கண்
செடிமெத்துண் டோளுராற் றீண்டப்பட் டனுகினற்கத் தீமை தீர. ௧௪
[றின்றி

செய்ததுவுஞ்சனநெருக்காற் றிருமுனண்ணவொணாமையினாற்செயல்வே
வெய்திலிறப் பைப்பிரித்து வீட்டுளுய்த்த திமிர்வாத வியாதி யாளன்
உய்திடநோய் தீர்த்ததுவு முன்பவமும் பொறுத்த றுரைத்தகாலை
மொய்திரளுட் பரிசெயரும் வேதபாரகருமந்த மொழியைக் கேட்டு. ௧௫

தேவநிந்தை யிதுவென்னச் சிந்தித்த தோர்ந்தையன் செப்பலுற்ற
தாவதந்த வுரையுமத்தே யுலையடிமை யாக்கியது மெருசலேமில்
கூவமண்டை முப்பத்தெட் டாண்டுழந்த நொடுநோயன் குணமதாகி [௧௬
மேவவன்று புரிந்ததுந்தன் பின்சென்ற யாவரையும் விழித்தன்னோருள்.

# திருவாக்குப்புராணம்.

பன்னிருவர்தமைத்தெரிந்துபரிவொடப்போஸ்த்தலராம்பேர்பகர்ந்துசீவிர்
தன்னியுல கெங்கணும்போய்ச் சுவிசேட போதனைசெய் தொழிலராதி
ரென்னவுரைத் தெய்தியநோய் தீர்க்கவும்பே யோட்டிடவு மீடேற்றெய்து
மன்னவதி காரமீந் ததுமலையிற் பிரசங்க மறைந்த வாறும். ௬௭

கப்பருணா கூம்பதியிற் கருணையினு லேகியதன் கடவுள்சென்ற
தப்புரம்வாழ் நூற்றுவருக் கதிகாரி பரிந்துதன தடிமைக்குற்ற
செப்பரிய திமிர்வாதத் தீயபிணி தீர்க்கவெனச் சென்றுவேண்டும்
ஒப்பரிய விசுவாச முவந்தங்கோ யொழியவரமுதவுமாறும். ௬௮

பிற்றையநாள் காயீனும் பெரும்பதிசென் றங்கிறந்தோன் பிரிந்தவாவி
பெற்றிடவீந் ததுமிந்தப் பிரபலமாம் பெரும்புதுமை யோவானுக்காங்
குற்றுணர்த்தச் சீடரவ ணுற்றரைநம் மிறைபாலுய்த் துறுவானீயோ
மற்றொருவன்வரவினைக்காத்திருக்குவமோவெனக்கேட்க வள்ளலோதும்·

உத்தரமுஞ் சீமோனென் றோதுமொரு பரிசெயன்சா ருணவுகொள்ளும்
அத்தருண மோர்பூவை யண்ணலைப்பூ சித்தாங்க ணடைந்தபேறும்
பித்தலைகைபிடித்தகுருட் டுமேலுக்குச் சுகமருளப் பேல்சேபூலால் [றும்.௭௦
இத்தொழில்செய் தனனென்ன இயம்பினருக் கெதிர்மாற்றமிசைத்தவா

தாயுந்தன் றுணைவருமித் தகையாவா ரென்றெடுத்துச் சாற்றுமாறும்
மேயன்று துணைவனுக்குந் தனக்குமுள்ள நிதிபகிர வேண்டலுற்ற
சாய்கின்றகற்பனைகேட் டவனுக்காங் கருள்மொழியு மமலமூர்த்தி
சேய்துன்று பலநிலத்திற் றெளித்தவித்தி னுவமையினுட் சிறந்ததான. ௭௧

அருத்தமதைச் சீடர்களுக் கருளிச்செய் ததுமுவமை யாகவாங்கே [ற
பொருத்தமுற மோக்கத்தினியல்புகளை யெடுத்துரைத்துட் பொருந்தாநின்
திருத்தமுறும் பொருள்களையுந் தெரித்ததுவும் வேதபா ரகனுங் குள்ளோ
ஞெருத்தன்கண் டெங்கணுநீசென் றாலுமுனைப்பிரியேனெனக்கேட்டோ
தும். ௭௨

எதிர்மொழியுமீன் றோனைப்புரைத்துப்பின்சென்றிடுவேனென்றானுக்கும்
பதியுழிச்சென் றுணர்த்திவந்து பின்செல்வே னெனத்தனக்குப்பகர்ந்தோ
னுக்கும்
துதிபொழியச் சொற்றவையும் நாவாயிற் றுயிலமயந் துன்று முந்நீர்
நதிவளியா லலைபுரள விழித்தெழுந்து நாவினுற் றடுத்த வாறும். ௭௩

வத்திரந்தொட் டாறிரண்டு வருடமுமற் றொன்றானு மாறுப் பூப்பின்
அத்திரம்போல் விழியொருத்தி அன்றுசுகம்பெற்றதுவு மாவிபொன்றுஞ்
சித்திரஞ்சேர் மதிமுகத்துச்சிறும்யுயிர்மீண்டுமுறச் சென்றுதேவ [வே.௭௪
புத்திரன்செய் திட்டதுவும் பொதுவனில்லா வாடுகள்போற் குலைவுற்றுங்

பலவிடத்து மீசிரவேல் வைகியதற் குளமுருகிப் பரிந்தன்னோர்க்கு
நலமுறப்போ தனைகள்செயப் பன்னிருவர்க்குபதேசம் நவின்றுநாளும்
தலமிசையற் புதங்கள்செயத் தக்கவதி காரமீந் தனுப்புமாறும்
வலமுறுமேரோதிறைதன் றுணைவன்மனை வெளவியதால் மற்றச்செய்கை.

# பதிகம்.

நீதியலா தறவென்று மிசழ்த்தியசற் குனம்வெருண்டு மிருபனுக்கே
கோதியலாயோவானைக் கொடுஞ்சிறையில்வைத்திருந்தாக்கேரோதேயான்
ஒதியலா துதவுகென கடித்தமக ளுரைப்பவொருப் பட்டன்னுனைக்
காதியலா தனபுரிந்து சிரப்பரிசில் களிக்கவீந் திட்ட வாறும்.

அங்கதுகேட் டவ்விடம்விட் டட விபிடம்யேசவெழுந் தருளியன்று
பங்குறவைந் தப்பமிரு மீனுடனை யாயிரர்க்கும் பாலகர்க்கும்
மங்கையர்க்கும் பசியறவீந் தீரறுகூ டையிற்சேட மலியச் செய்த
துங்கமுற மதிசயமுந் தொண்டர்களை நாவாயிற் றரிதமாக.

ஏறிமறு கரையடைதி ரெனப்பணிப்ப வவரவ்வா றேகுங் காலை.
மாறியதிர் பெருங்காற்றால் மரக்கலமங் குலையமன மறுகும் போழ்தில்
வீறியல்கெற்படைந்துசெபஞ்செய்ததின்பின் மீண்டிரவில்காலாஞ்சாமத்
தேறியநீர்க் கடலில்நடந் ததமனுர் தம்முன்ன ருறுகைகாணு.

ஆவேச மிதுவென்ன வஞ்சுதலு மவர்க்கபயங் கொடுத்த வாறும்
கோவேசின் சீடர்களா சௌசவிதி கடந்துணவு கொளல் மோசேயின்
மாவேத முறைக்குவழு வாகுமென வழுதினர்கள் மனத்தில் வெஞ்சத்
தேவேசி லெதிர்மாற்றஞ் செப்பியதுஞ் சின்மீனோ டேழப்பத்தால்.

சேர்த்திடுநா லாயிரர்க்கும் மகளிருக் சஞ் சிறுவருக்கும் பசியை யையன்
தீர்ந்திடச்செய் தோரேழு கூடைகளிற் றின்றுகழித் திட்ட சேடம்
ஆர்ந்திடச்செய் யதிசயமும் வானின்றோ ரடையாளங் காட்டுகென்றோ
தேர்ந்திடச்சொன்மாற்றமுந்தான் மரித்துயிர்த்தல்சீடருக்குச்செப்புமாறும்

ஆறுதினஞ் சென்றதன்பின் பையன்பே தருயாக்கோப் யோவானோடும்
வீறுபெறு மொருவெற்பி லணுகியவர் விம்மிதத்த ராகக் காண
மாறுருவ மானதுவும் மோசேயு மெலியாவும் மருவிப் பேச
ஈறுமுத வில்லாதோ னிருந்தபொழு தொளியுள்ள வெழிலியொன்று.

தோற்றியது மசரீரி யிவனன்பாஞ் சுதனமக்கா மிவன்மே லேயாம்
மாற்றரியகண்புளமால் மற்றிவன்சொற் கேண்மினென வங்ஙனின்று
சாற்றியதுமதுகேட்டுச் சோர்ந்துவிழுந் தாசரைத்தன் கையாலண்ணல்
தேற்றியெழுந்திருமினெனச் செப்புதலுமவர்சோகந் தெளிந்தவாறும்.

மரிப்பதுந்தான் மூன்றுநா ளுயிர்ப்பதுவும் மறுபடியுஞ் சீடருக்குத்
தெரிப்பதுவுமதிசெயமாத்திரைக்கடலுட்பிடித்தவொரு செழுமீன்வாயில்
வரிப்பணங்கொண் டிறுத்ததுவும் வானுலகிற் பெரியவன்யாரெனக்கேட்
டாற்குத்
தரிப்பறச்சொற்றிடுமொழியும் வேறுமெழுபதுபேர்கடமையக்காளில்.

அருடனையுற்றுறவழைத்திட் டாங்கப்போஸ்தலர்க்கி யனையாருள்ளம்
தெருடனைப்பெற்றதிசயங்கள் செயவும்வர மீந்ததுவுஞ்செசுக்தொட்ட
குருடனைக்கண்டவனுக்குப் பார்வையினைக்கொடுத்ததுவுங்கொஞ்சப்பே
ரோ
மருடனைத்தீர்ந்திரட்சிக்கப் படுபவரென்றுனுக்கு வகுத்துச்சொன்ன.

# திருவாக்குப்புராணம்.

மாற்றமுந்தன் வழியொன்றால் வீடடைத லுவமையினால் வகுத்தவாறும்
தோற்றமுறும் பயனுதவா வத்திமரத் தின்னிலைமை சொற்றதுஞ்சீ
ரேற்றமிகு நிதியினனு மிலாசருவா மிரவலனு மிறந்து பெற்ற [௮௫
பேற்றையுரைத் திட்டதுவுங் கெட்டகுமா ரன்கதையைப் பேசுமாறும்.

தாங்களேநெறியினரென்றெண்ணினர்க்குச்சாற்றியதோருவமையுஞ்சீ [ம்
ரோங்குமாசிகளடையச் சிறுரைக்கொண்டுறவொட்டார்க்கோதும்பேச்சு
பாங்கிற்போய் நித்தியசீ வனையடையத் தான்செய்யும் பரிசே தென்றாற்
காங்கத்தன் றுயர்விளைக்க வறைந்தவெதிர் மாற்றமும்பெத் தானியாவில்.

மரியாட்கும் மாத்தாட்குந் துணைவனுமாய் மாநண்பிற் றனையெந்நாளும்
பிரியாத விலாசருவாம் பேரினன்மாய்ந் தீரிருநா ளானபின்பு
தரியாதுட் கவல்பவர்கள் மகிழ்ச்சிபெறக் கூஉயவனைச் சரீரத்தாவி
யுரியாளுக்கியதுமோ ரேழைப்பெண் ணிடுதரும முவந்த வாறும். ௮௭

நீதியங்கா வொருபெரியோன் செழுநிதியஞ் சிலர்க்களித்துச்சென்றாளின்
பின் [னென்
ஊதியங்கொண் டவர்க்குதவும் பயனுநய னுறலறமண் ணுள்வைத்தே
றோதியங்கு நின்றானுக் குய்த்தபெருந் தண்டமுமா முவமைதன்னைச்
சூதியங்கா வுளத்தொண்டர்க்கிம் மானுவேலருளாற் சொற்றவாறும். ௮௮

ஐயிரண்டு கன்னிகளி னுவமையுமோர் பிரபுதன தாந்தோட் டத்துட்
செய்யபயன் கொளத்தூது செலுத்தியதா முவமையுஞ்செப் பியதும்யேசு
துய்யதெய்வ தூதுவர்சூழ் வரமகிமை யாசனத்திற் றோன்றி யிந்த
வையகத்தோர் யாவரையும் நியாயந்தீர்த் திடுமுறைமை வகுத்தவாறும். ௮௯

பெத்தானி யாவிலொரு பேதைவிலை யுயர்சுகந்த தைலந்தன்னை
மெத்தாவ லுடனிறைவன் சிரத்தூற்ற வதைவெறுத்து விளம்புஞ் சீடர்க்
கத்தாற்றான் மரித்தடக்கப் படுவதனுக் கடையாளங் காட்டு மாறும்
தொத்தாகும் பன்னிருவ ரொடும்பசுக்கா வாசரிக்கத் தொடங்கலுற்ற. ௯0

போதங்கூ வாதுசெய்தார் பெரியனென்றப் போஸ்தலர்கள் புகலவன்னோர்
பாதங்க ளறுமபுனலாற் றான்விளக்கித் தாழ்மையினைப் பயிற்றிப்பின்பவ்
வேதங்க ளகலுளத்தார்க் கெனைக்காட்டிக் கொடுப்பவனிங் குளனென்றைய
னோதங்கன் யானோவென் றியூதாசு வுசாவவா மென்ன லோடும். ௯௧

பாதகனு மவனெழுந்து நீங்கியதும் பசுக்காவின் பின்பத் தெய்வப்
போதகனுங் கப்பத்தை யெடுத்தன்று சீர்வதித்துப் பொருவிலுங்கட்
காதரவாம் பலியாகு மென்னங்க மாகுமிது நீவிர் நெஞ்சின்
மீதகலா தெனைநினைக்கு மடையாள மென்றருத்து வித்து மீண்டு. ௯௨

பாத்திரத்தைநயக்காச்சிந் திரத்தவுடம் படிக்கையென்னுப் பருகச்செய்து
நேத்திரத்தை யேறெடுத்துச் செபஞ்செய்து கெதுசமனை நீள்காவுட்டான்
மாத்திரந்தன் சீடரில்மூ வரையொருசா ரிருத்திப்போய் வான்பி தாவைத்
தோத்திரஞ்செய் ததுந்தேவ தூதனண்ணித் தேற்றியதுந் தொண்டராங்கே.

மிஞ்சுதுயில் கொளக்கண்டு விழிப்பித்துத் திரும்பவுமங் கிருகால் மேவி
விஞ்சுதிர வேர்வையுடன் செபஞ்செய்து மீண்டுமவர் துயிலைமாற்றி
வஞ்சகனிங் கெனைக்காட்டிக் கொடுப்பதற்கு வருகின்றா னொருதீயோரால்
துஞ்சுதற்குக் காலமணித் தானதெழுஞ் செலற்கென்னச் சொற்ற வாறும்.

ஓதாசை யெட்டுமெட்டும்புகழ்க் குருவைக் காட்டுவலென் றற்றுள்ளத்தின்
மீதாசை பொடுமூப்ப ராசாரி மாரிவர்க்கு விளம்பி யன்று
யூதாசை யாறுவெள்ளிப் பணமும்பெற் றகராறுப்ப வுடனுஞ்செய்துங்
காதாசை யுடையவர்க்குத் தாயவனை முத்தமதாற் காட்டக் கட்டி. ௯௫

அன்றுமுன்னவர்விடுப்ப வவன்காய்பாவிடங்கொண்டேக வன்மூப்பர்க்கு
முன்றுவுய்த் சதுமவர்கள் சங்கத்தா ருடன்கூடி முடிவி லானைமேல்
அன்றுளிற் கொலைபுரிதற் காங்குற்றங் காணாமற் றிறவங்கியுத [௯௬
சொன்றானென் றொருகுற்றஞ் சூட்டிவெகு நிந்தனைக டுணிந்துசெய்து.

பின்னைநாள் வைகலின்பி லாத்தின்முன் கொண்டகப்பித்தார்நித்தன்
தன்னையாள குய்த்த வனைச் சிலுவையி னி லறைகவெனச் சாற்றக்கேட்டு
என்னைநீ ரிங்கிவன்மே லோதுகுற்ற மென்னவவர் யாதும் பேசார்
மன்னைநீ யின்றிவனைச் சிலுவையினி லறைதியென வருந்திக்கேட்க. ௯௭

இவ்விரத்தப்பழியென்மே லில்லையெனக் கைகழுவி யிறைவன் றேனை
அவ்விரக்க மற்றவர்கைக்களித்தறைமின் சிலுவையிலென் றதுமப்போது
செவ்விரத்த நிறவங்கி யுடுத்தியொரு முண்முடியைச் சிரசிற்சூட்டித் [௯௮
தெவ்வரதன் றன்னையன் றுசெய்யவொண்ணா நிந்தனைகள் பலவுஞ்செய்து.

செய்யவங்கி தனைக்களைந்து சிலுவைதலை மீதுவைத்துக் கொல்கொதாவிற்
றுய்யவனைச் செறித்தவனைச் சுமத்திவந்த சிலுவையினிற் சோரரோடும்
வெய்யவர்க ளறைந்ததுவும் விமலனுக்குப் புரிந்தபழி விரைந்துதூண்ட
உய்யவின்றி யூதாசென் றேதுகுருத் துரோகிநான் றொழியுமாறும். ௯௯

கொள்ளைபுரிபரபாவைக்கொடியோர்கள்விலக்கியதுங்கொலையுண்மற்றை
கள்வனின்மேலெங்கோமான்கருணையுளம்வைத்ததுவு மாயைகண்டாங்
குள்ளமிகு மன்புடைய யோவானைக் கொப்புவித்தில் வுலகீடேற
வள்ளல்பல வதிசயங்கள் சிறந்தோங்க மனுவுருவ மொருவுமாறும். ௧௦௦

அர்த்தமனமானபொழு தறிமத்தி யாநகர்வாழ் யோசேப்பர்ந்த
வித்தகனார் திருவுடலை மேயவொரு புதுக்குழியி னுட்சேமித்து
வைத்ததுவுங் கொடியோர்கள் காவலிட்டும் மனந்திகைக்க மூன்றுநாளில்
உத்தமனுங் குயிர்த்தெழுந்து பற்பலருங் காணவங்கங் குற்றவாறும். ௧௦௧

பாடுபட்ட நாள்முதலா நாற்பதுநாட் பரலோகத் தியல்பை யுள்ளத்
தாடுபட்டு மகிழ்சிறப்பத் தொண்டர்களுக் கோதியதி சயங்கள்காட்டி
ஈடுபட்ட சுவிசேட முலகிலெங்கும் போதியுமென் றியம்பியெங்கோன்
பீடுபட்ட சீடர்களுக்காவியருள் பெருவார்க்குக்கொடுத்துப்பின்னர். ௧௦௨

ஆங்கிவர்கள் கண்காண அந்தரத்தில் மேகத்தில் மறைந்தோ னாகி
நீங்கியது மற்றதனை நின்றுற்றுப் பார்க்குமந்த நெறியா ளர்க்குப்

# திருவாக்குப்புராணம்.

பாங்கினில்வெள் ளுடையிருவர்படர்ந்துகலி லையரேகீர் பார்த்தவண்ணம்
ஓங்கியமே லவன்மீண்டுமுலகத்தில் வருவனென வுரைத்தவாறும். ௧௦௩

குருபரன்வா னடைந்ததன்பின்கோதிலாநெறியினராய்க்குலாவுமப்பன்[ப்
னொருவரங்குமத்தியாவென்போன்றன்னை யூதாசுக்காகச்சேர்த்ததுவுமாவி
பெருவரம்பெற்றதுமவர்பல் பாஷைகளிற் பேசியதும்பின்புநாளும் [௧௦௪
பொருவருமற்புதங்கள்செய்துபல்லோர்க்கும்புரிவுடனஞ்ஞானமபோக்கி

வெய்யகொடு மைகள்பலநும் விளைத்தாலும் விடாராகி விழைவினோடுஞ்
செய்யசுவி சேடநெறியுபதேசஞ் செய்ததுவும் ஸ்தேவான்றன்னைக்
கையர்பலர் கோரமுடன்கல்லெறிந்து கொன்றதுவுங்கடவுட் டொண்டர்
கையவிடர் புரியவதி காரம்பெற் றெழுந்துசவுல் கடந்த போழ்தில். ௧௦௫

உலகத்தை மீட்கவந்த வுத்தமனண் பகலி லதிசயமா வுற்றுக்
கலகத்தை விளைக்கச்சென் றவனுக்குக் காட்சியாய்க் கடியசெய்கை
விலகத்துய்யவனுக்கியடிமைக்கொண்டதுமிகறவன்விண்டசொற்போற்
பலகத்துப் பரசமய விருளழிய மெய்ந்நெறியைப் பகர்ந்தவாறும். ௧௦௬

அடிபட்டுஞ் சிறையிருந்து மாசரிடத் தகப்பட்டுந் தவிரா ராகி
முடிபட்ட திருத்தொண்டர் போதனையால் மூதலகை வஞ்சத் தாலே
படிபட்ட தீதகல வந்தபிரா னடியவராய்ப் பாவப் பாரம் [௧௦௭
பொடிபட்டுப்புவியினர்கள்சபைபலவாய்ப்பொலிந்துசிறந்திருந்தவாறும்

யேசுவெனுந் திருநாமந்தனையேத்துஞ் சபைகளுக்கேற் றிடுமாசாரம்
பேசுகின்ற நிருபங்க ளுடனுலக முடிவினிகழ் பெற்றி யாதி
மாசுதவிர் மேசியா வெளிப்படுத்து விசேடமுமற் றவையுமாவி [௧௦௮
வீசுதிரு வருள்கொண்டு மோசேயை முதலாய்மெய் யுணர்வோர்மேனாள்.
[லைந்துபோக
தொழுதகுமெய்ந் நெறிதுலங்கச் சூழ்ந்திடும்பொய்ந் நெறியனைத்துந் தோ
எழுதினரிங் கிதுபற்பல் பாஷைகளினிருந்துதமி ழினுமீண் டுற்றுங்
கெழுதகுநற் பாமுறையினின்மையினாற் புராணமதாய்க் கிளருமாறு
பழுதறுமிக்கவர்முன்னென் னறியாமைவெளியாக்கிப்பாடினேனே. ௧௦௯

செருவாக்கும் பரசமயத் திமிரமறுத் திலகுதிவா கரனாய் மற்றிங்
கொருவாக்குமிகரறநின்றுலவிதன்பேரவனென்னிலொருதன்சேயைக்
குருவாக்கி மாந்தர்களுக் கீடேற்றங் கொடுத்தவருட் கோமான்றந்த [௧௧௦
திருவாக்குப் புராணமெனத் திரைக்கடல்சூழ் மாநிலத்திற் சிறந்ததாமே.

(வேறு.) எள்ளருந்தமிழ்ப் பாவினி விந்நூல்
வெள்ளவேலை யுலகினர் வேண்டவே
யுள்ளமெய்ந்நெறி யோதுமெய்க் காதராம்
வள்ளனீள்ள மகிழ்ந்திட வாய்த்ததே. ௧௧௧

பதிகம் முற்றும்.

# திருவாக்குப் புராணம்.

## GENESIS

## ஜநநகாண்டம்

### க. உற்பத்திப்படலம்.

Genesis Chap. 1. The creation.

*அனைத்துலகுந் திருவாக்கால் அளித்தகில சராசரமும் அருட்சித்தத்தே*
*நினைத்துளவப் படியமைத்துக் காத்தழிக்குந் தனிமுதலாம் நிகரிலாதான்*
*றனைத்துதிசெய் தெண்ணுகின்ற தகுங்கருமஞ்சித்திபெறத் தருகவென்றே*
*இனைத்தெனவொப் போதரிய இணைமலர்த்தாள் சிரத்தேந்தி இறைஞ்சுவா மே.*

*(வேறு.) ஆதி யந்தமற் றற்புத் மூர்த்தியாம்*
*நீதி யன்பொடு நித்தியமேமுதல்*
*ஓதி நின்ற உயர்குண னாதியம்*
*போதில் வானமும் பூமியு நல்கினான்.*

*(வேறு.) ஆயதோர் தன்மைத் தாகி அமைந்தவிவ் வகில மேனாள்*
*மேயசீர் வடிவ மின்றி வெறுமையாய் வதிந்த தாழ்ந்த*
*தோயமே லிருந்த தாங்கே துணங்கறல் புனலின் மீது*
*தூயமா தேவஆவி உலவியே தொக்க தம்மா.*

*அன்னதோர் காலந் தன்னில் அளப்பருங் குணத்து மூர்த்தி*
*துன்னரு மொளியுண் டாகச் சொற்றன னாய தம்மா*
*மின்னிய ஒளிக்கு மற்றை இருளுக்கும் விகற்பஞ் செய்து*
*பன்னுமவ் வொளியை மேலோன் பகலெனப் பகர்ந்திட் டானே.*

*இருளினை இரவா மென்ன இயம்பின னிவற் றியக்கால்*
*மருளுறு மாலைப் போதும் மல்கிருள் பருகித் தோன்றுந்*
*தெருளுறு காலைப் போதுஞ் செறிந்தன செயலி னாலே*
*உருளுறு வைகல் வட்டத் துதித்தது முதலா நாளே.*

*விரிபுனல் நடுவா காய விரிவுண்டாய் நீர்க்கும் நீர்க்கும்*
*பிரிவினை யாக்கு கென்றெம் பிரானருள் செய்ய லோடுந்*
*தெரிவுறு ககன வீதி சிறந்ததால் அதன்மேல் கீழுந்*
*திரிநெடுஞ் சலத்தி னாப்பட் பகுதியுஞ் சேர்ந்த தன்றே.*

அப்படி இடையே தோன்றும் ஆகாயந் தனக்கு வானென்
றொப்பறு மமல மூர்த்தி ஒருபெயர் சூட்டி னானல்
மைப்பொழு தணுகு மாலைக் காலமும் வைகற் போதுந்
தப்பற வுதித்த லாலே சார்ந்ததவ் விரண்டா நாளே.

அன்னது நிகழ்ந்த பின்னர் அந்தவான் கீழ்நீ ரோர்பாற்
றுன்னவு முலர்ந்த வைப்புத் தோன்றவுங் கடவ தென்றுச்
சொன்னன னுய வம்மா துலங்கிய வைப்பைப் பூமி
என்னவுஞ் சலத்தை முந்நீ ரெனவும்பே ரியம்பி னானே.

எத்தகைப் புல்லும் வித்தை ஈந்திடு பூண்டும் வித்துள்
வைத்திடு கனியைத் தத்தம் வகைகளுக் கேற்க நல்கும்
அத்தகை மரங்கள் யாவும் அகலிடத் தெய்து கென்று
நித்தனன் றுரைத்த லோடும் நிலத்தவை உதித்த மன்றே.

அந்தியோ டுதய மாகி ஆயது மூன்றும் வைகல்
வந்திடும் பகற்போ துக்கும் வருமிர விணுக்கும் பேதந்
தந்திடு வதற்கா காயந் தன்னில்வான் சுடர்கள் யாவும்
முந்துக வென்ன மேலோன் மொழிந்துமற் றவைக டாமே.

அறிகுறி பருவ கால மடர்தினம் வருட மின்ன
பொறியுறக் குறிக்கு மாறிப் புவனமீ தொளியை நல்கிச்
செறிவுற விளங்கு மவ்வான் சுடர்களாய்ச் சிறக்க வென்றான்
நெறியுற அனைத்தும் மேலோன் நிருபம்போல் நிகழ்ந்த மாதோ.

எல்வினை ஆளு மாறோர் இருஞ்சுட ரிரவை யாளப்
புல்லிய சுடர்மற் றொன்றும் பொலிந்தமீன் குழாமு மாகச்
சொல்லிய சுடரை யெல்லாந் தொகுத்தருள் செய்தா னையன்
வல்லமை எம்ம னோரால் வகுத்திடு மளவிற் றாமோ.*

---

*நண்ணிருள் பரந்து லாவு ரத்தமாம் பொழுதிற் றோன்றா
தொண்ணிறம் பகலிற் காண ஒளிபெற மலர்ந்து மேலாம்
விண்ணிடை உலவி முந்நீர் விசிகட லுலகுக் கெல்லாங்
கண்ணென விளங்குஞ் செய்ய கதிரவ னுதித்த தன்றே.

நயக்குறல் வின்புந் துன்பும் நல்கிமிக் கொளிருஞ் சோதி
பயக்குமந் நீர தாகிப் பகரமற் றுவமை யின்றாய்
மயக்கிருள் சீந்துந் தேவன் மகிமையா சனமா மென்ன
வியக்குநுண் கதிர்கொள் பானு விசும்பிடை விளங்கிற் றம்மா.

வெய்யவன் றன்னொ ளிந்த மேதினிக் குற்ற வெம்மை
செய்யதண் கிரங்க ளாலே தீர்த்திருள் சிதைத்தி தில்லாத்
துய்யவெம் பெருமான் றன்றன் கிருபையா சன[illegible]ற் றோன்றி
மையவான் முகத்தி னூடு மாமதி யெழுந்த தன்றே.

---

இந்த நட்சத்திரக்குறிவைத்த கவிகள் வர்ணனைகளென்றறிக.

மற்றொரு பொருளு மொவ்வா வானவன் றுடிவ மீதே
உற்றவா கிருளை யோட்டி யொளிதரத் தானமி ரீந்த
அற்புதச் சுடர்க டம்மை மகிழ்ந்தன னந்தி காலை
பொற்புற வருத லாலே போந்தது நான்கா நாளே. க௫

(வேறு) சிந்துவி னீந்தும் பிராணிகடம்மைத் திரள்களாப் பாய்திரை நெடுநீர்
தந்திடக் கடவதென் றமித்தரைமேல் விண்ணிடைத் தழைசிறைக்கங்கள்
வந்துசஞ் சரிக்கக் கடவன வென்றும் வழுத்தின னிறைவனவ் வாறே
தந்தம மரபுக் கேற்றிடச் சலத்தும் விசும்பினுஞ் சார்ந்தனவவையே. க௬

மீனமே முதலாஞ் சலசரக் குலங்கள் விரிதிரைப் பரவையி னிடத்தும்
ஏனபூஞ் சிறைய பறவையின் குலங்கள் இருநில மதனிலு மாகி
நானமற் றெங்கும் பெருகுக வென்று நவின்றன னுசியெம் பெருமான்
ஆனதாங் கைந்தாந் தினமது காலை மாலைவந் தடைந்தற லாலே. க௭

நாட்டில்வாழ் விலங்கின் குலமுமற் றிந்த நானிலத் தூர்வன வெவையும்
காட்டில்வாழ் மிருக வகையுமென் றிவற்றைக் காசினி இனமின மாக
நீட்டுக வென்ன நின்மல மூர்த்தி நிகழ்த்தின னம்மொழிப் படியே [க௮
சேட்டுநீர்ப் புவியில் அன்னவையனைத்துஞ் சிறப்புறச்செறிந்தனவன்றே.

ஆயது நிகழ்ந்த பின்னரா டவனை அமலனுந் நினையறுதனது
சாயலிற் படைக்க நினைத்துமற் றவனே சலத்தில்வாழ் செந்துவிண் ணகத்
திற்
போயபூஞ் சிறைய புள்ளினம் விலங்கு பூதல முழுதுமங் கதன்மேல் [க௯
மேயவூர் வனவென் றிவற்றினை யாண்டு மேவிடக் கடவனென் றனனே.

என்றுலகளித்தோன் றிருவுளங்கொண்டா னிமந்ரா தலத்தினின் முகத்தே
துன்றியெவ் வயினும் நனைத்ததொப் பரிய தூயவன் மனிதனை மண்ணால்
அன்றுரு வாக்கிச் சீவனின் சுவாசம் அவன்றனை நாசியி னகத்துச்
சென்றிட வூதிவி ட்டனன் செஞ்சீ வாத்துமா வாய்நரன் சிறந்தான். க௮

நிலையினால் விளங்கிப் பற்பல நிரைகளாய் நின்ற கோல
மலையினால் விளங்கு தூண வைபக மாடத் துச்சி
விலையினால் விளங்குஞ் சோதி வெள்ளிவெண் கும்ப மென்னக்
கலையினால் விளங்கு கின்ற மாமதி கவினிற் றமமா. ௪

அகல்விசும் பேட தாக ஆதியோ டந்த மின்றித்
துகளற விளங்கு மெங்கோன் றொல்புகழ் துலங்கத் தீட்டி
நகச்செயு மெண்ணில் கோடி எழுத்தென நண்ணி யும்பர்
புகலருந் தொகைய வாய தாரகை பொலிந்த மாதோ. ௫

தண்ணவ னிவ தாகத் தாரகா கணங்கள் சூழ்ந்தே
எண்ணருந் தொகைய வாகி யும்பரின் றிலகுந் தோற்றம்
பண்ணவன் பீடந் தன்னைத் தூயவர் பரவிச் சூழ்ந்து
நண்ணிய வாறு மென்ன நவையற விளங்கிற் றம்மா ௬

கண்ணிணை வதனங் கரதல மிணைத்தாள் கமலமா மலரெனக் கவினத்
திண்ணிய புயநன் மருமமென் றிவைகள் சிரவான் கிரியெனத் திகழ
நண்ணிய வேலை அவயவ மனைத்தும் நவிலருஞ் சிறப்புற நரனைப்
புண்ணிய சூட்சி இறையவற் கல்லாற் பலிக்குமோ பிறர்க்குமற்றம்மா.

அன்னதுநிகழ்ந்த பின்னரத் தினத்தி லற்புத மூர்த்திகீழத் திசையில்
மன்னிய ஏதே னெனுந்தல மதனில் வயங்கெழிற் பரிமள நறும்பூ
துன்னிய நந்த வனத்தையங் காக்கிச் சோர்வறு சுகநனி துய்த்து
நன்னலமுறுமிக்காவில்வைகுதியென்றுய்த்தனனரனைமற்றவனே. ௨0

காண்பதற் கினிய கனிகளு மதூரங் கனிந்தபூங் கனிகளு நிறைந்த
மாண்புறுதருக்கள் அனைத்தையுமன்றி வயங்கெழின்மலர்குடைந்தளிகள்
பாண்செயுந் தடலை நடுவணிற் சீவ விருக்கமும் படைத்ததனுடனே
எண்பெறுநன்மை தீமைகளுணர்த்தும் மரத்தையு மியற்றினனன்றே.* ௨௧

(வேறு) நனைமலர் கின்ற சோலை நலம்பெறு மேதே னென்னும்
அனையபொன் னிலத்தில் நின்றோ ராறுநா லாக வோடும்
புனைகவின் விளங்கு மாங்கோர் பூம்புனல் நதியில் மேலாங்
கனகமு முத்துங் கோமே தகங்களுங் கவினு மாலோ. ௨௨

தத்துபூந் திரைகுலாவுந் தனைப்பில்சீர்ப் பீசோ னென்னும்
அத்தடந் திரைநீ ருந்தி ஆவிலா வெனும்பேர் பெற்ற
மெத்திய கவின்கொ ளூடு விளங்குற முழுதுஞ் சுற்றி
எத்திசை யுலகும் போற்ற இசையொடு பரந்த தன்றே. ௨௩

*கோளலரந் தூண நிரைநிரை போக்கிக் கொழுங்கவ டுத்திரம் பரப்பி
நீளருஞ் சினைப்பாச் சிட்டுமே லாக நெடுங்கிளைச் சலாகைக ணிரைதது
கானமா நிறஞ்சேர் வல்லிகள் விசித்துக் கவினிலைத் தகட்டினால் வேய்ந்து
தானடல் நரனுக் கிறைபவன் மாடஞ் சமைத்தென விளங்குமத் தடங்கா. ௧

பத்தியின் வழிபட் டிணையடி போற்றிப் பரவிய மானவற் கிறைவன்
மெத்திய சுகஞ்சேர் பேரின்ப போகம் விழைவுட னருந்துதற் காக
முத்தியாந் தலத்தை அவனியி லமைத்து முன்னுறத் தானும்வீற் றிருக்கச்
சித்திரப்படத்தாற் சமைத்தபா ளையப்போற் சிறந்ததப் பூந்துணர்ச் சினைக்கா. ௨

மருவிறி யந்தண் மலர்ப்பசுஞ் சினைகள் வானுறப் பரப்புமப் பூங்கா
ஒருவிழி வெனினு மின்றிமிக் குயர்ந்த ஒப்பிலான் படைப்பினின் வீக்கம்
இருவிழி கொண்டு பார்ப்பதற் கமையா தெனத்தலை எண்ணில பரப்பித்
திருவிழி அனந்தங் கோண்டுமே னிமிர்ந்து திசைதொறும் பார்ப்பதொத் துளதே. ௩

செய்யபைன் னிறஞ்சேர் மதுமலர்த் தொகுதி சினைதொறு மணிபெறத் திகழ
பையணி நிறஞ்சா லிலைக்குழாம் பற்பல் சினைதொறும் பரந்துகார் காலத்
துய்ய பன் னிறமீன் இனமுதற் சுடர்கள் துலங்கவம் முகிற்குழாந் தொகுத்து
வையமும் வானங் காட்டிய தென்ன வயங்குமம் மட்டவிழ் மலர்க்கா. ௪

வீழுமின் மலர்த்தேன் மகரயாழ் நரம்பு விசிறைத் தும்பிகை வந்தே
ஏழிசை தெரிக்கக் குயிலினம் நரம்பா இசைதர இவிற்றக்
கேழுறும் பசிய தோகையஞ் சூட்டுக் கேகய நடஞ்செயச் செவ்வி
குழுமச் சோலை தூயவன் றெல்சீர் பாடியா டரங்கமொத் துளதே. ௫

மற்றொரு குடிகளு பீசோன் வளைதி கூசாம் நாட்டைச்
சுற்றியெம் பிறிதங் கொன்று துறைகெழு மிதேக்க லாறு
பற்றியா சூரி யாவைக் குடதிசை யிருந்திப் பாயுஞ்
சொற்பெறு மைபிராத்தாந் தொன்னதி பிறிதொன் றாமே.* உ௪

சிந்துநீர் வளஞ்சா லந்தண் செழுமலர்க் காவிற் றேவன்
தந்தமா னவனை வைத்தத் தருக்களின் பயனுந் துய்த்து
வெந்துய ரணுகா வாழ்வு மேவுதி நன்று நீதேர்
அந்தவோர் மரத்த துண்ணில் மரணம்வந் தடையு மன்றே. உ௫

என்றவற் கறதி கூறி யிறையவன் றானன் றீந்த
துன்றிய சீவசெந்துக் கெவன்பெயர் சூட்டு மென்று
அன்றவை நரன்முன் னெய்த அழைத்தன னனைத்து மாங்கே
சென்றன அவன்சொல் பேரே பெயர்களாய்ச் சிறந்த வாமே. உ௬

மானில வரைப்பி னன்று மண்ணினால் வகுத்த வெவ்வே
றானபல் விலங்குகட்கு மடர்சிறைப் பறவை கட்கும்
மானவ னேற்ற நாமம் வகுக்கவாங் கழைத்த காலை
வானவன் மகிழ வன்னான் வழங்கின னாகு மன்றே. உ௭

ஆனவை நிகழ்ந்த பின்னர் அளப்பருங் கருணை மூர்த்தி
மானவன் றனக்காங் கேற்ற துணையையும் வகுப்ப லென்று†

---

*குறைவற மனுட னுய்யக் குவலயஞ் சிறக்க வோங்கி
நிறைவுறப் பெருகி மிக்க தண்ணென னு நீர தாகி
இறையவன் கருணை வாரி இம்பரிற் பரந்தா லென்ன
அறைதிரை சுருட்டுந் தெண்ணீ ராறெழுந் துலாய தன்றே க

ஒன்றென வெழுந்த வாறு மேல்வெவ்வே றாக வோங்கி
துன்றிய கிளைக ளல்கிச் சைவலஞ் சுடர்த்தண் முத்தம்
பொன்றிரள் மணிக ளின்ன இலைமலர் கனியிற் பொங்கச்
சென்றுயி ருய்யச் சீவ விருக்கம்போற் சிறந்த தம்மா. உ

கால்கொடு நடந்து போந்து கறங்குதேண் டிரைக்கை வீசி
சால்புற அசைந்து லாவித் தலைமியிர் நடர்ந்து சுற்றி
செல்வனர் செழுந்தண் பைங்கா விழுப்பங்க ளோக்கி நோக்கி
ஆல்வரு மவரா மென்ன அடைந்தது நடந்த வாறே. ௩

வெண்ணிறப் புளினத் தும்பர் வெள்ளை†வா ணிலவு காலும்
ஒண்ணிற மதிய மான ஒளிர்மணி யாதி சோதி
நண்ணிய வுடுக்கணோர காரமா முகிலை பேய்ப்ப
மண்ணிடை விண்ணா மென்ன வாயத்தநல் வளங்கொ ளாறே. ௪

†மற்புய மனிதன் தேக மத்தியி னென்பை யாய்ந்து
பொற்புய ரினிய சாயற் பூவையாய்ப் பொலியு மாறன்
றற்புத மூர்த்தி செய்தான் அவன்செயல் விண்ணு ளோரிற்
பொற்புவி யவரில் யாவர் அளவிடும் புந்தி வல்லார். ௫

---

† வெள்ளை சங்கு.

மோனமார் துயிலை மூட்டி முழுவிலா வென்பை யாய்ந்தவ்
ஊனமா ரிடத்தையூனுய்த் தொப்புர வாக்கி னானே. ௨௮

வாங்கிய என் பினாலே வனிதையை வகுத்தங் காளில்
ஓங்கிய வுணர்வி னான்முன் உய்ப்பவென் னென்பி னென்புந்
தாங்குமென் உடலி னூற்ற தசையினிற் தசையு மானாள்
ஈங்கிவள் நரனிற் றோன்றி எய்தலால் நாரி யாமே. ௨௯

எனமொழிந் திருந்தா னங்ஙன் இவ்வண நிகழ்ந்த வாற்றாற்
கனைகடற் புவியி லீன்றோர் காதலை ஒருவி மைந்தர்
மனைவியர் தம்பால் நேயம் வளருவித் தொருமை யெய்தி
வினையொடு செயலு மொன்றி நேர்பெற வாழ்வர் மாதோ. ௩௦

மிக்குயர் நீர்மை சான்ற விடலையு மவன்றன் பாங்கிற்
றுக்கமென் குதலைத் தீஞ்சொற் றோகையு மொருப்பா டெய்தி
தக்கபே ரன்பினோடுஞ் சார்ந்தனர் வாழுநாளில்
நக்கரா யிருந்தா ரேனும் நாணமென் றறிந்தி லாரே. ௩௧

மற்றவர் தம்மை மேலோன் வைப்பினிற் பெருகி நீவிர்
உற்றதை வசம தாக்கி உவரியிற் புவியில் வானில்
துற்றவெவ் வுயிரின் வர்க்கத் தொகையையு மாள்வீ ரென்று
சொற்றன னவர்கள் வாழ ஆசியுந் தொகுத்தா னன்றே. ௩௨

கனிதரு வித்தின் வர்க்கம் நண்ணிய பூண்டும் பற்பல்
கனிதரு மரங்கள் யாவுங் கருணையா லுணவாத் தந்தேன்
குனிதரு விலங்கு புள்ளோ டூர்வன குலங்க ளுண்ணப்
பனிதரு பசும்பூண் டெல்லாம் ஊணெனப் பரிந்தீந் தேனால். ௩௩

என்றுரை செய்தான் மேலோன் யாவுமப் படியே யெய்திற்
றன்றவன் றானல் குற்ற அனைத்தையு மகிழ்ந்து ளானால்
ஒன்றிரு ளணுகு மந்தி உதயமென் றிவைகள் சார்ந்து
நின்றவச் செயலா லாறும் வைகலும் நிகழ்ந்த தன்றே. ௩௪

---

*நேர்மலி பொருள்பற் றில்லா நனமல னருளி னாலே
ஆங்கலி யுலகத் துன்னோர் அனைவர்க்குந் தாயே யாவாள்
சீர்மலி வதன யாதி உறுப்புகள் சிறந்து தோன்றக்
கார்மலி மின்னு நாண மெய்யொளி கவின நின்றாள். ௨

ஓவிய ரமைக்க வொண்ணா உருவமங் குயிர்பெற் றோங்கத்
தேவியன் கரத்தி னாலே செய்தன ளாகு மென்றாற்
பாவியல் நூலோர் சொல்லு முவமைகள் பயிற்றி யிந்தப்
பூவையி னழகு நம்மாற் புகலலாந் தகைமைத் தாமோ. ௩

பூந்தரா தலத்தில் அன்னாள் பொன்னடிக் கிணையென் றோதற்
காந்தகு பொருளின் றென்னில் அவளவ யவங்கட் கொப்பா
மாந்தளிர் முதல வாய பொருள்களை வகுப்ப தன்றாள்
ஏந்தெழிற் பெருமைக் கீனம் இசைத்தல்பே தமைப்பா லஃதே. ௪

இவ்வகை இயற்றி ஞான்மற் றியற்றிய கிரியை யெல்லாம்
கைவ்வகை யாய பின்னர் கடவுளாங் கேழ காலை
எவ்வகைச் செயலுஞ் செய்யா இருந்தின மாக்கி னுனல்
அவ்வகை தூய நாளா வனைவரு மதனைக் கொள்வார். ௩௫

உற்பத்திப்படலம் முற்றும்.



## ௨. வினைசூழ்படலம்.

Gen Chap. III. The full

ஆதிகாலில் அண்டபிண்ட மாதியான யாவையும்
தீதிலாத முதல்வனீந்த செய்திசெப்ப லுற்றனம
சூதினால் மயக்கிமாய துத்திநாக மெய்தியே
மாதினோடு கேள்வனுக்கு வஞ்சமுய்த்தல் கூறுவாம். ௧

ஓதுகின்ற வையகத்தில் ஒப்பிலான் படைப்பினுட்
போதுகின்ற சீவபேதம் யாவினும் புயங்கமே
சூதுமிக்க தாகுமன்ன துட்டநாகம் அலகில்வெந்
தீதுமிக்க உள்ளமோடு தெரிவைமுன்ன ரானதே. ௨

நண்ணிமாய சர்ப்பமிந்த நந்தனப் பயன்கனீர்
உண்ணலீர்க ளென்றுதே வுரைத்ததுண்மை கொல்லெனப்
பெண்ணியா முணற்கெலாம் பெரிதுவந்து தந்தனன்
கண்ணிலாவு சோலைகாப்ப னின்றதாரு காட்டியே. ௩

வீடொழிந்து நீவிருய்ய வேண்டுமென்னி வித்தரு
மேவுகின்ற கனியுணல் விழைந்துதீண்ட லொழிதிரென்
றேவிலா விலக்கெமக் குரைத்தனன் பிரானெனத்
தூவிமஞ்ஞை யெனவிளங்கு தோகைசொல்லி னளரோ. ௪

என்றபோது சர்ப்பமாதை நோக்கிமாய்வ தில்லைநீர்
தின்றபோது நுமதுகண் டிறந்துநன்மை தீமைதேர்
கின்றபோத மெய்திநீவிர் தன்னையொத்தல் கேடிலா
நின்றபோத னெஞ்சிலோர்வ னெனநிகழ்த்த லுற்றதே. ௫

எண்ணுகின்ற சீர்மைசாலு நந்தனத்து மத்தியின்
கண்ணிருந்த தருவினுன கனிகளுண்ண வினியவாய்
வண்ணுகின்ற தோற்றமிக்க எழிலுமொண்மை தெளிவுறப்
பண்ணுகின்ற பான்மையும் படைத்தவாகு மென்னவே. ௬

கண்டுநெஞ்ச கவரவல்ல காட்சியின் மயக்கமீக்
கொண்டுசென்று தானுமன்ன கோலமேவு கனிகளைத்
துண்டுதென்னொ டொன்றிவாழு மணிதனுக்கு முதவினுன்
மண்டுமன்பொ டவனுமன்று வாங்கியுண்ண லாயினுன். ௭

உண்டுவந்து நின்றகாலை ஒக்கலையின் கணவர்கடங்
கண்டிறந்து நக்கரா யிருந்தவாறு கண்டுளத்
தண்டுகாண மிக்கபொழ்தில் அங்கணர்த்தி யிலைகளைக்
கொண்டுதைத்த ரைக்குநல்ல கூறையாக்கி வைகினர்.

பகற்கணே குளிர்ந்தகால் பரந்துலாவு பொழுதினே
மிகச்சிறந்த காவினூடு லாவிநின்ற மேலவன்
தகப்பெறும் பயங்குலாவு சத்தமோர்ந்து சோலையின்
அகத்தவன் முகத்தைநீங்கி அங்கொளித்து வைகினர்.

(வேறு.) ஏதாமே எமக்கிளிமென் றுணரா ரிவ்வா றிருந்துழியெம்பெரு
மானக் கரனைக் கூவி
ஆதாமே எங்குளைநீ யென்ன வன்னோன் ஐயனேஇக்காவில்நினது சத்தம்
போதாமே வரக்கேட்டு நக்கனென புன்மையினால் அஞ்சிவெள்குற் றொ
ளித்தே னென்றான் [வாயே. ௧௦
நீதாமே தெளிநுமிலான் நக்கனென்று தெரிவித்தார் யாருனக்குச் செப்பு
உண்ணாது தவிர்த்தமரப் பயனுண்டாய்கொல் ஓதுகெனத் துணையாநீ யெ
னக்குத் தந்த
பெண்ணாணு தவியதால் உண்டே னென்றான் பேதைநீ இதுபுரிந்த வா
றென் னென்றே
மண்ணாதி படைத்தபிரான்கேட்ப அந்தமானனையதிருநோக்க மடமானைய
பண்ணாத வஞ்சமெல்லாம் வல்லநாகம் பண்ணியவஞ் சனைக்குள்ளாய் உ
ண்டேனென்றாள். ௧௧

மனக்கபடம் புரிந்தகொடும் பணியையைய மாநிலத்தி லுயிர்களுக்குட்ச
பிக்கப் பட்டாய்
எனக்களறி நீவயிற்றா லூர்ந்து மண்ணை ஈண்டுளநின் னாயுணா ளெல்லா
முண்க
நினக்குமடப் பாவைக்கும் நின்வித்துக்கும் நேரிழையாள் சந்ததிக்கும்
பகையை யுய்ப்பேன்
சினத்தொடுனைத் தலைநசுக்கு மவனவன்காற் சிறந்தகுதி நீண்டுவைநீயெ
னவுஞ் செப்பி. ௧௨

மையலார் பவம்புரிந்தா டனையுன்பாற்குல் வருங்காலம் வருத்தநனி வரு
விப் பேனால் [வென்றான்
தையலாய் வயாவொடிளங் குழவியீன்க தலைவனுக்கா ளாவையவ னாள்க
உய்யலா நெறிசடந்த நரனைநீயிங் குன்மனையாள் சொற்குடைந்தென்னு
ரையை மீறிச்
செய்யலா ததுபுரிந்தாய் அதனாலிந்தச் செகதலத்தை உன்னிமித்தஞ் சபித்
தே னென்றான். ௧௩

என்றுமொழிந் தனன்பின்னும் நோக்கிவையத் திரும்பயனீ யுள்ளமட்டுங்
கிலேசத் தோடே
தின்றுபசி தணிகுழுட்பூண் டனெருள்ளார் செடிகளையு நிலமுளைக்க
ச்செய்வதாக

துன்றுபயிர் வர்க்கமுனக் குணவாம் மண்ணிற் றோன்றியநீ மீளவுமம் ம
ண்ணின் பாலிற்
சென்றிடுக அதுகாறும் முகவேர்வோடு சீவியஞ்செய் திடுகவென்றுஞ்
செப்பினனே. கச

ஓவாத கொடுஞ்சாப மவரிவ்வாறங் குழந்துற்றார் ஆதாந்தன் மனையாளி
ந்தப்
பூவாழு முயிருடையோர் எவர்க்குந் தாயாய்ப் பொலிந்ததொரு பொற்ப
தனாற் பொருந்து நாமம்
ஏவாளென் றுரைத்தவளோ டிசைந்துவாழ்வுற் றிருந்தனனங் கவர்நாணம்
மறைக்கு மாறு
தேவானோ னதளங்கி அவருக் கந்நாட் செய்தருளா னுடையாகச் சேர்த்தி
னனே. கரு

ஈங்கிவைமற் றிவ்வாறு நிகழ்ந்த பின்னர் எம்பெருமான் மானிட னிக்
காலில் நனறு
தீங்குணரப் பெற்றுநம்மில் ஒருவர்போலச் சிறந்தனனு மெனவவனிச்
செழுங்கா வூடே
ஓங்கியநற் சீவதருக் கனியைக் கொண்டாங் குண்டுசதா காலமுய்யும்
வாழ்வை நீக்கத்
தேங்கமழு மலர்ச்சினைக்கை ஏதேனென்னுஞ் செழுங்காவி னின்றகலத்
துரத்தினனே. கசு

நித்தமுறும் அவன்வாழ்வை ஒழிக்கு மாறும் நீணிலத்திற் பயன்விளைவித்
துண்ணு மாறும் [கத்
அத்தனவ னின்றகற்றி விட்டபின்னர் அக்காவில் மீண்டுமவ னணுகாவ
தொத்தலரு நறுஞ்சினைக்கைச் சீவதாரு துன்றகத்தை யுறுமார்க்கத் துறை
யினங்கே
கொத்தழல்போங் கனற்கட்கெருபீனோடுங் குணதிசையிற் காவலு
றக் குறித்தா னன்றே. கஎ

வினைசூழ்படலம் முற்றும்.



## ௩. மகப்பேற்றுப்படலம்.

Gen. chap. IV.. Cain and Abel.

நஞ்சவா ளரவினுரு நண்ணிய பிசாசமாதி
அஞ்சிலை மருட்டித் தீமை வருவித்த வாறு சொற்றும்
விஞ்சதென் டிரைநீர் வையம் மீதினி லவையன் மேனுள்
மஞ்சரைப் பயந்த வாறும் மற்றவர் செயலுஞ் சொல்வாம்.

மணியெழு வனைய திண்டோள் மானவ னேவா ளென்னும்
அணியிழை யுடனே கூடி அளப்பில்பே ரன்பினோடுந்
தணிவறு நலனுண்டுண்டு தருக்கியாங் கிருக்கு நாளிற்
கணிதமில் வனப்பி னன்பாற் கருப்பம் வந்துற்ற தன்றே.

உற்றிடு வயாவி னோடு முதிர்ந்திடுங் காலமுற்றிப்
பெற்றனள் காயினென்னும் பேருடைக் குமரன் றன்னை
பற்றிய வுணர்வுக் கெட்டாப் பண்ணவ னருளினாலிப்
பொற்புறு மகவை யீன்றே னென்றுள மகிழ்ச்சி பூத்தாள்.

பின்னையுஞ் சூற்கொண் டன்னாள் பெருந்தகை ஆபேலென்பான்
றன்னையும் பயந்தா ளந்தத் தனயனுங் காட்டு மேய்ப்பன்
என்னுமத் தொழிலோனாகி யிருந்தனன் காயீன் பாரிற்
றுன்னிய பைங்கூழாற்றிப் பயன்பெறுந் தொழிலே பூண்டான்.

இன்னநன் னிலைமை யோரா யிருந்துசின் னாட்கள் சென்ற
பின்னரிந் நிலத்திற் றான்செய் பெரும்பயிர்ப் பயன்முன் வைத்து
முன்னவன் வணங்க ஆட்டு முதற்குட்டி நிணமும் வைத்துப்
பின்னவன் பரவத் தேவன் இவனையே பெரிது வந்தான்.

அம்முறை காண்டலோடும் அநுசன்மேல் முகமு மாறாய்த்
தெம்முறை யாதல் நோக்கித் தேவனித் தீமை நிற்கேன்
செம்முறை நிரம்பா யென்னில் மேன்மைநீ யிளையாய் கொல்லோ
இம்முறை பிறழிற் பாவம் வாயிலி லிருக்கு மாதோ.

மற்புனை புயத்தி னாய்கேள் மற்றுன திளவல் நின்சொற்
கற்பனை கடவாத் தொண்டு பூண்டிடுங் கடமை யோனும்
பொற்பனை நெறியினானை ஆண்டுநீ பொலிக வென்றான்
முற்பனை யொலிநீர் வைய முழுதருள் முதல்வனாமால்.

அளவறுங் கொடிய காயீன் அன்னது நிகழ்ந்த பின்னர்
உளமுறு கோபவெந்தீ யுடன்றெழ இனியபேசி
இளவலோ டணுகி யாங்கோர் வெளியினி லிருந்தகாலை
அளமர லுழக்க வன்னா னாருயிர் தொலைத்தா னந்தோ.

மாமையின் விளங்குமேனி வள்ளலைக் காய்ந்து சென்ற
தீமையின் வடிவனான சேட்டனை விளித்துப் போது
மேமய லற்றவும்பி எங்குளான் விளம்பென் றெங்கு
மாமைய னனைய காலை வினவுவா னாயினானே.

அங்கது கேட்டுக் காயீ னையனை நோக்கி யன்னோன்
எங்குள னென்ப தோரேன் காவலாள் யானோ வென்றான்
புங்கவ னென்செய்தாய்நீ புவியினின் றென்னை நோக்கி
உங்கிய அவன்றன் செந்நீர் ஓலமிட் டலறு மாதோ.

கேட்டிநீ கொடிய காயீன் கேடிலான் றன்னை யின்னே
வீட்டினை யுனது கையால் உதிரத்தை விழுங்க வாயைக்

காட்டிய புவியினாலே சாபநீ கடிது பெற்றாய்
நாட்டியெப் படிச்செய்தாலும் நானிலம் பயன்றராதால். கக

அன்றியு நிலையற்றோனாய் அலைவொடுந் திரிவோனவை
என்றன னமலன் காயீன் இறைவநீ யின்னே இங்ஙன்
நின்றெனைத் துரத்து கின்றாய் நின்றிருச் சமுக நீங்கி
என்றுநான் நிலையற் றோனாய் அலைவுற லெய்து வேனால். கஉ

கல்லிசை உவரி வைப்பிற் கண்டவ னெவனு மென்னைக்
கொல்லுவ னாகுமந்தோ கொடியனேன் றனக்கின் னேநீ
சொல்லிய தண்ட மென்னாற் சகிக்கொணாத் துயரதாகும்
புல்லிய வினையே னென்னே புரிவலென் றிரங்கி னானே. கந

மாண்புறு பரனப் போது மனதினி லிரங்கி நின்னைக்
காண்பவ னெவனென் றாலுங் காய்ந்திடிற் பழிக ளேழு
பூண்பனென் றோதி யாருங் கொலைத்தொழில் புரியா வண்ணம்
எண்பெற அவனுக் கன்றோர் இலாஞ்சனை அருளி னானே. கச

தாங்கருஞ் சாபந் தாங்கித் தற்பரன் சமூகந் தன்னை
நீங்கின னேதேன் காவின் குணக்கினில் நின்ற நோத்தென்
றோங்கிய பெயர்பெற் றுள்ள ஒருபெரு நாட்டி னெய்தி
ஆகருவெந் துயரினோடு மமர்ந்தனன் காயீ னன்றே. கரு

மகப்பேற்றுப்படலம் முற்றும்.



## ச. குலமுறையுரைத்தபடலம்.

Chap. IV. 17. The first city.

காணோதிசை அளியுண்பொழிற் கடிநோத்தமர் காயீன்
மானோதெழில் விழிசேர்மட மனையாளொடு மருவி
வனோகெனு மொருமைந்தனை யீன்றேயவன் பேரால்
தானோரரு மொருமாநகர் தந்தானிசை பெருக.

அம்மைந்தனு மீராத்தெனு மருமைந்தனை யீந்தான்
இம்மைந்தனு மெழில்மேகுய வேலைத்தனி யீன்றான்
உம்மைந்தனு மடல்மெத்துச வேலென்றுரை யோங்குஞ்
செம்மைந்தனைத் தந்தான்குலந் திகழச்சக மிசையே.

மிகவார்மகிழ் வொடுமித்தரை மிசைமெத்துச வேலுந்
தகவார்தர லாமேக்கினைத் தந்தான் அனதனயன்
திகழ்வார்குழ லாதாளொடு சில்லாளெனு மடவார்
சகவாழ்வுறு துணையாயுறத் தருமாமணம் புரிந்தான்.

யாபாலொடு யூபாலிவர் ஆதாளிரு மைந்தர்
யாபால்படங் குறையண்ட ரினத்தின்குல முதலாம்
யூபாலிசை கிளர்கின்னர மொடுகாக சுரந்தேர்
மாபாலர்க ளனைவர்க்குமொர் வழிமாமுத லாமால்.

தொல்லார்புகழ் பெறுமைந்துயர் தூபாள்கா யீனும்
பல்லார்தொழில் கஞ்சங்கருந் தாதிற் பயின்றோனும்
நல்லாளெழில் நாமாளெனு நறைமென்குழல் மகளுஞ்
சில்லாள்வயி னுற்றேகடற் செகத்தேயவ தரித்தார்.

மல்லார்புய லாமேக்கெழின் மனையார்முக நோக்கி
புல்லாவடு வெனக்கேயுறப் பொருதோரிளை ஞனையான்
கொல்லாப்பழி பூண்டேனடற் காயீன்றனைக் கொன்றாற்
கெல்லாம்பழி யேழெற்கொலி னெழுபத்தே ழென்றான்.

(வேறு) நோத்துமா நாட்டி னங்கே நயலரும் வாழ்வு பூண்ட
மூத்தவ னான காயீன் மரபினை மொழிந்தே மிப்பால்
தீத்தொழில் புரியா னாகிச் சிந்தையிற் றூய னான
சேத்துமா மரபின் வீக்கந் தெளிதரச் செப்ப லுற்றாம்.

ஆதிமா னவன்பின் சின்னாள் அனைந்தபி னேவா ளென்றும்
ஓதிமா னவனி மீதே யுயிரிழந் திடுமைந் தற்காச்
சோதிமா னவனெனக்குச் சுதனையீந் தனனென் றீன்றோர்
நீதிமா னவனை நாமஞ் சேத்தென நிகழ்த்தி னாளே.

அந்தநன் மைந்த னங்கோர் அரும்பெறல் மகவை அன்பாற்
றந்தன னேனோ சென்னுந் தகுபெய ரவற்குச் சாற்றி
இந்தநன் னிலத்தோ ரேத்த இருந்தன னிறைபேர் மண்ணோர்
சிந்தனை மகிழ்வாற் சாற்றல் அதுமுதற் சிறந்த தன்றே.

முன்புக லாதாம் நூற்று முப்பதா மகவை சென்ற
பின்புதன் சாய லாகச் சேத்தெனும் பேரி னானை
அன்புறத் தந்த பின்னும் ஆண்பெண்மா மகாரை யீன்றாங்
கின்புற மேலு மெண்ணூ றாண்டுவாழ்ந் திறந்தா னன்றே.

அகவைநூற் றைந்திற் சேத்தாங் கரும்பெற லேனோ சென்னும்
மகவையீன் றதனின் மேலும் பற்பல மகாரைத் தந்து
இகவையி னெண்ணூற்றேழு வற்சர மின்னும் வாழ்ந்து
சகவயின் வாழ்வை நீங்கித் தற்பரன் சமுகஞ் சார்ந்தான்.

தொற்றிடு மகவை யாங்கே தொண்ணூறாய்க் கேனானென்னும்
மற்றிர டோனி னானை வழங்கின னேனோ சென்போன்
பெற்றனன் பலமகாரைப் பினுமெண்ணூற் றொருபத் தைந்தாண்
டுற்றநல் வாழ்வு மேவி உலகவாழ் வொருவி னானே.

எழுபது வயதிற் கேனா னெழில்மக லாலே யேலாக்
தொழுதகு மகவைத் தந்து தொல்லவை யகத்திற் பின்னும்

பழுசறு குமார ரோடு குமாரிகள் பலரைத் தந்து
விழுமிய வாழ்வெண் ணூற்று நாற்பது வருடம் வாழ்ந்தான். கக

அம்மக லாலே யேலாங் கறுபத்தைந் தகவை யின்மேற்
செம்மகன் யாரேத் தென்னு மொருவனைச் சிறக்க நல்கி
இம்மகி தலத்திற் பின்னு மிளமகார் பலரை யீன்று
செம்மையி னாண்டெண் ணூற்று முப்பது சிறக்க வாழ்ந்தான். கஉ

(வேறு) பாரேத்த நூற்றறுபத் திரண்டுவய தானதின்மேற் பரிவினோடும்
யாரேத்தங் கேனோக்கை யுதவியபின் எண்ணூறு வருட மேவிச்
சீரேத்த வுறுந் தகைய சிறுவர்பலர் தமை மகிழ்வு சிறக்க நல்கி
ஏரேத்த வரியபெரு வாழ்வெய்தி நிலவுலக நீங்கி னானே. கங

ஏனோக்கு வயதறுபத் தைந்தாகி மெத்தூச லாவை யீன்று
மேனோக்கு மகிழ்வினொடு மைந்தரையும் மகளிரையும் மீட்டு நல்கி.
வானோக்கு நடையினனாய் முந்நூறு வருடமதன் மேலும் வாழ்ந்து
பானோக்கும் பரனழைக்க இவ்வுருவோ டங்கவன்பா லேகினானே. கச

இத்தலத்தின் மீதகவை நூற்றெண்பத் தேழாகி இலாமேக் கென்னும்
புத்திரனைப் பயந்துமெத்தூ சலாகின்னு மகிழ்வினொடும் புதல்வரோடும்
சித்திரஞ்சேர்புதல்வியர்கடங்களையுஞ்செனிப்பித்தாங்கெழுநூறோடெண்
பத்திரண்டு வருடமின்னும் பாருலக நல்வாழ்வு படைத்தற்றானே. கரு

ஓவாத மகிழ்வினொடு நூற்றெண்பத் திரண்டுவய தூற்ற பின்னர்
மேவாரும் புகழ்படைத்த ஒருமகவீங் கிலாமேக்கு விரிநீர் வைப்பைத்
தேவானோன் சபித்ததினால் நமக்குற்ற தொழில்வருத்தந் தீர்ப்ப னென்று
நோவாவென்றொருநாமமதுவன்றுபெரு நல்லொழுக்கநோன்புபூண்டான்.

அன்னதகையினன்மேலுமைஞ்ஞூற்றுத்தொண்ணூற்றைந்தாண்டுவாழ்ந்து
நன்னரிள மக்களையு நல்கியபின் னானிலவாழ் வொருவி னானால்.
பன்னருநன் னெறிநோவா ஐந்நூறு வயதின்மேற் பரிவி னோடும்
இன்னிலும்வாழ்வுறச்சேமுங்காமொடியாப்பேத்துமெனுமிவரையீன்றான்.

பனிதருநீர் நெடும்பரவைப் பாருலகி லிவ்வண்ணம் பல்கிப் பல்கி
மனிதருரை தகவோங்கி வைகினரால் அப்பொழுது தேவ மைந்தர்
கனிதருமந் தபுமனித மகளிரெழில் மிக்கோராய் கண்ணல்கண்டு
குனிதருநீங் கெனாதவரை விழைந்தபடி மணம்புரிந்து குழுமி வாழ்ந்தார்.

குலமுறையுரைத்த படலம் முற்றும்.



## ரு. சலப்பிரளயப் படலம்.

Gen. Chap. VI. The Deluge.

இல்குமிகு சராசரமுந் தமைத்தோங்கி யிருந்திமோ நிறைவளித்த
உலகமதில் மாந்தர்குலம் விருத்திபெற்ற வாறதனை யுரைத்தேமிப்பாற்
கலகமிகு நரர்பவத்தாற் கடவுளெண்மர் முதற்சிலவாக் களறுஞ் சீவன்
விலகமற்றை யுயிரனைத்தும் பிரளயத்தால் வீத்தசெயல் விளம்பலுற்றாம்.

சற்பனைசெய்தொழிலினராய் மானவர்கள்தீதியற்றித்தாங்கைக்கொள்ளுஞ்
சற்பனையைக்கடந்தனரா லெம்பெருமா னனையனைத்துங்கண்டுநெஞ்சில்
அற்பனைத்தும் விட்டிநரர் மாமிசரென் னுவியவ ருடன்போ ராடி
நிற்பனவின் றுயினுமீ ரறுபானுண் டிவர்க்கின்னும் நிற்பதென்றான். உ

அன்னதொரு காலமதிற் றுட்டர்களாம் வீரர்களு மநேகராகித்
துன்னியுறைந் தனர்தேவ புத்திரர்மா னுடமடவார் தம்மைத் தோய்ந்து
பின்னமுற வுதவியவம் மைந்தர்களும் பேர்படைத்த வீரராகிப்
பன்னரிய வனங்கள்பல நிறைந்தநெடும் பாரகத்திற் பயின்றாரன்றே. ௩

அகலிடத்தில் மனிதர்புரி தீமைநிறைந் திருப்பதுவு மவருள்ளத்திற்
புகலுடையவெண்ணமெல்லாமெப்பொழுதுந் தீயனவாய்ப்பொருந்துமாறும்
நுகளறுமெய்ப் பரஞ்சோதி கண்டிந்தத் தொல்புவியி னிடத்தே தானிவ்
விகலுடைய நரர் குலத்தைப் படைத்ததற்கா வநுதாபமெய்தினனே. ௪

மிடல்படைத்தமானவர்செய்தீமையிவ்வாறிறைவனெஞ்சில்விசனமூட்ட
உடல்சினங்கொண் டையனிந்த மானிடரை யுதவியதால்விசனமுற்றேன்
கெடலுறுமிம் மாந்தரொடு விலங்கினங்களூர்வனபுட்கிளையையெல்லாங்
கடல்புடைசூழ் பார்முகத்தில் நின்றுதுடைத்திடுவலெனக் களறினனே.

சேமொடுகாம் யாப்பேத்தாந் திருமைந்தர் மூவரையும் பெற்ற தாதை
ஆமுறைநல் லொழுக்கநெறி வழுவானுய்த் தேவனுக்கே அன்பனாகிப்
பூமிசைமற் றெவர்களினு முத்தமனாய்ப் பொலிந்ததொரு பொற்பினாலே
ஏமுறவங் கன்னவனுக் கெம்பெருமான் விழிக்கருணை யெய்திற்றம்மா.

(வேறு) பூவாழ் வுற்றோர் யாரினு மங்கப் பொழுதத்தே
ஓவா நன்மைச் சேமுதலோரை உதவுற்ற
கோவா வென்போன் சற்குணநீதி நுவல்மேன்மை
மேவா நின்றே வானவனன்பின் விளைவுற்றான். எ

மண்ணினர் யாருங் கேடுநிறைந்தே வளர்தீமை
நண்ணினர் நண்ணும் நெறியையிகந்து நாதன்பேர்
எண்ணின ரல்லர் இன்னவையாவும் இதயத்தே
விண்ணின ரெண்ணும் பண்ணவ னுன்னி வெகுளுற்றான். அ

மேலவனப்போ துத்தமநோவா வெனுமெய்மைச்
சீலவனப்போன் றன்னொடு கூறுங் கொடுமைக்கா
லலவனத்த மெய்திட மாமிச முளவெல்லாஞ்
சாலவனத்தா லாருயிர் மாளத் தடிவேனல்.* ௯

இப்பேரண்டத் தின்கீழாக இருந்திட்ட
எப்பேர்கொண்ட சீவனுமெம்மீ வெய்தாமே
கொப்பேர்தாருத் திண்பலகங்கள் கொடுநோவா
யொப்பேறுற்ற பேழையை நீசெய் துன்னாவாய். ௧0

என்னுடையெண்ணப் படியியலுற்று மிதனாலே
உன்னுடனென்றன் சொன்னிறைவேற லுறுவிப்பேன்

நின்னுடைபுத்திரர் அன்னவர்தேவியர் நின்னன்பாம்
மின்னுடனேயும் பேழையி னுள்ளுற மேலாவாய். ௧௧

புள்ளின மிக்க விலங்கின மூர்வன பூலோகத்
துள்ளின மெவ்வெவை தம்முளு முய்வை யுறற்குன்பாற்
கொள்ளின மவ்வவை யாணொடு பெண்ணுங் குறுகுங்காண்
எள்ளின சிக்கையிலாதவை தம்மையு மேற்றுகவே. ௧௨

பொற்புறு பேழையி னின்னுடனேயுட் புகுதந்தே
நிற்புறு மெவ்வுயிர் வர்க்கமு நீயும் நெடிதுண்ணப்
பற்பல வுண்டிக ளாயுறவேண்டு பவையையு மென்
சொற்படி யீட்டிச் சேர்வறவங்கே தொகுவிப்பாய். ௧௩

என்றிவை யாவு மிவற்கருள் செய்தே யெம்பெருமான்
சென்றிவ னோடே யுய்வன வுய்யச் செய்பேழைக்
தொன்றிய செய்கை விதிப்பிர மாணமு மோதினனால்
அன்றிறை சொற்றன போல வியற்றின னவையெல்லாம். ௧௪

(வேறு) தப்பருங் கருணைசான்ற தனிமுத லுரைத்த வாறே
அப்பெரும் பேழைநீள மாறைம்பான் முழமதாக்கி
ஒப்பற வகலமைம்ப தாகவு மோங்குயர்ச்சி
முப்பது முழமுமாகச் சமைத்தனன் முயற்சிவல்லான். ௧௫

ஆக்கிய பேழைக்குள்ளே அறைகளை வகுத்தான் மேலாய்ப்
போக்கிய முழமொன் றின்கீழ்ச் சாளரம் பொருந்த வைத்தான்
வீக்கிய கபாடம் பாங்கர்ச் செறித்தனன் விமல னன்பாம்
பாக்கிய மிவனே யல்லாம் பாரில்யார் பிறர்பெற் றாரே. ௧௬

மரவினை முடிந்த பின்னர் வருணமுட் பொசியா வண்ணம்
புரவினைப் புறத்து முள்ளும் பூசியு முடித்தான் சற்றுங்
கரவினை விளையான் வையங் கடியுநீர்ப் பிரளயத்தின்
வரவினை நோக்கி யையன் மலரடி நோக்கி வாழ்ந்தான். ௧௭

வாக்கினா லகில மேனாள் வகுத்தவெம் பெருமான் றன்கண்
நோக்கினா லுயர்ந்த நோவா நுவலரு வனப்பிற் பேழை
ஆக்கினா னென்றபோதே ஆரரு ளவன்பா லன்பாற்
றேக்கினான் விளித்தன் னானுக் கினையன செப்பலுற்றான். ௧௮

வையமீ துன்னைநீதி மானெனக் கண்டே யுன்மேற்
செய்யபே ரருளைவைத்தேன் நீயவருடனே வீயா
துய்யநின் மனைவி மைந்த ரொடுமரு மக்களோடும்
மையறு பேழை தன்னுள் வருக நீபுகுகமாதோ. ௧௯

பௌவநீ ருலகில் வித்தைப் பாதுகாத் திடுதற்காக
எவ்வித சுத்தமுள்ள விலங்கினு மெவ்வேழ் சோடும்
ஒவ்வொரு சுத்தமற்ற விலங்குக்கோர் சோடுமாகச்
செவ்விதி னின்னோடந்தப் பேழையுட் சேர்த்துவாயே. ௨௦

வானகத் தியங்குகின்ற வளர்சிறைப் பறவை வர்க்கம்
ஆனவவ் வகற்றி னெவ்வேழ் சோடுமா வினைத்து மீட்டி
ஈனமங் கடையா துய்வுற் றிடேகீ யெழுகா ளின்னும்
போனபின் வாரியாலிப் புவியினைத் துடைப்பலன்றே. ௨௧

(வேறு) என்றெம திறையவன் மொழிதரலும் இணையறு முயர்குண மு
டையவனும்
அன்றுள மகிழ்வொடு தனதுயிராம் அரிவையு மவளருள் புதல்வர்களும்
ஒன்றிய நெறிபெறு மருகியரா யுற்றிடும வரொரு மூவர்களுஞ்
சென்றுட னருகுற வந்தநெடுஞ் சீர்கெழு பேழையி லேறினனே. ௨௨

மண்ணிடையுலவிய மிருககுலம் வகைவகை சுசியுளவிலவெவையும்
விண்ணிடைகுலவியபலவகையாம் விரிசிறையுடையன பறவைகளும்
நண்ணிய நிலமிசை யூர்வனவா நவிலுறு செந்துவு மினமினமாப்
புண்ணியமுதல்வன துரையதுபோற் புக்கனபோயவனுடனம்மா. ௨௩

(வேறு) மிக்கவுத்தம நெறிகொ ளெண்மரும் வீவொழிந்துயி ருய்வுறத்
தக்கபல்லுயிர் வகையுமன்றுயர் தனதுகற்பனை போலவே
புக்கிருந்தபி னக்கலத்துறு புதவடைத்தன னன்பர்மேல்
மிக்கபேரருள் மாரிபெய்திடு விமலனாகிய முதல்வனே. ௨௪

அன்னதாயபி னேழுவைக லகன்றபின்பிர ளயமிறை
சொன்னவாறு தொடங்கலுற்றது சோர்விலுத்தம நீதியோ
னென்னுமானவ னுற்பவித்தறு நூறதாம்வய துயயமாம்
மன்னுமாமதி பத்தொடேழெனும் வைகலன்றளவானதே.* ௨௫

(வேறு) மீனவாரிதிக ளெங்குமெங்குநனி விரவுமூற்றுக டிறந்தன
வானவீதியு முடைந்ததாகுநெடு வாரிகாற்பது தினங்களா
வானவாறிரவு பகலுமோவற வடர்ந்ததம்மபிர வாகமே
பீனமேவுமுயர் வரைகள்மீதுபதி னைம்முழம்பெருகி நின்றதே. ௨௬

* மூதுல கினிதுயிர் மற்றெவையும் முற்றழிதரமிசை முட்டிபெழும்
மோதுறுபிரளய மிசையுயரும் மொய்பொழில் நவ்வினினுள் புகுவோர்
தீதுறு பெருநர கிடையுலகிற் றீமைகள் புரிபவர் வீழ்தரவே
ஓதுறுமெய்யுணர் வொடுமுத்தி ஒன்றிடுமுத்தம ரொத்தனரே. ௧

(வேறு) பொறுத்திடற் கரியவாய தீக்குணம் பொருநதி நாளும்
வெறுத்திடற் குரியசெய்த வெய்யரை மண்ணி னின்றே
அறுத்திடற் குன்னியைய னுங்கவர் மீது நெஞ்சிற்
கறுத்திட விசும்பி னின்ற முகிலெலாங் கறுத்த மாதோ. ௨

மேயபே ரன்பினோரை மிக்கருள் சுரந்து காக்குந்
தூயவெம் பரனையென்னுந் துர்க்குணம் விடாது பற்றி
மாயவே யன்றியுய்ய வகையினை நோக்கி லாத
தீயவ ருளமா மென்னத் திசையெலா மிருண்ட வன்றே. ௩

இன்னவாறுயர் புனற்பெருக்கினிடை இறையவன்றனது முனிவினால்
பின்னவாறுபடு மன்குலம்பெரிது பீழையுற்றுயிர் மடிந்தன
அன்னவாறுபல புள்விலங்குகளு மன்றமாய்ந்துயி ரழிந்தன
சொன்னவாறுகெழு பேழையாழமிகு தோயமேலுலவி நின்றதே.* ௨௭

தான்வரு மிணைமற்றில்லான் சகத்தினிற் றீய வாய
வான்வரு முயிர்களெல்லா மொழிந்திட வுரப்ப வெற்றி
கோன்வரு முணர்வற்றோடு கொடியவை யொளிப்பா ரென்ன
வான்வரு சுடர்கள் யாவுந் தெரிந்தில மறைந்தவம்மா. ௪

மண்ணிடை மேய தீய மாந்தர்கள் மயங்கு மாறு
விண்ணிடை யிருண்ட கார மேகங்க ளொருவராலும்
எண்ணிடை யளக்க வொட்டா இறைவன கோப வெந்தீ
கண்ணிடை சிகைகாய் ரென்ன மினுக்குறாவ கான்ற மன்றோ. ௫

அண்ணினர்க் கருட்பா லூட்டி அன்னைபோற் புரக்கு மண்ணல்
பண்ணினர் நிலைமையன்றிப் பயின்றிலர் நன்மை யென்றே
பண்ணினர் தப்பைச் சீறி வனசொற்கள் வகுத்தா லென்ன
விண்ணிடை முழங்கிக் கார மேகங்க ளிடிந்த மாதோ. ௬

ஓவலில் கொடிய தீமை புவந்துசெய் தொன்னலாராய்
மேவலி னுலகின்மாந்தர் அனையர்மேல் விமலன கோபந்
தாவலி னவரை முற்றுந் தடிந்திடப் பகழி மாரி
தூவல்போன் முகில்கள் யாவுஞ் சொரிந்தன தூவல் மாரி. ௭

சாலவன் பிபற்றியிந்தத் தரணியில் மேலும் மேலும்
ஏலவன் றொழிலோ ராகி எண்ணிறீ துறுப்பெற் றன்ன
கோலவன் மாந்தர் யாருங் கொலையுறு மாறு கொண்ட
மேலவன் சலத்தி னூலே மிகுசலம் விளைந்த தம்மா. ௮

* தோற்றமும் முடிவு மற்ற மெய்க்கடவுள் தொல்லை நாளினுல குதவுமுன்
ஏறமிக்க புனல் மீதுலாயசெய லென்ன வப்பெரிய பேழையன்
றூற்றருங்கொடுமை செய்த வெவ்வுயி ரனைத்துமாயமிசை பொங்கியே
யேற்றெழுந்தநெடு வாரிமீதினுயர் வுற்றசைந்துலவி நின்றதே. ௯

மகரவாரிதிக ளாறுநாடுநகர் வனந்தருக்கள் செறிகானகஞ்
சிகரமால்வரை விதங்களுஞ் சோலைகொள் சிவராசிகளு மாமெனப்
பகரலாமெவையு மறையவேமிசை பரந்தவெள்ள முலகத்தினை
சிகரிலானுதவ முன்னிருந்தநிலை நிகருமாதுமென நின்றதே. ௧௦

கரையிலாதநிறை வாரிமீதினுயர் கருணையங்கடவு ளருளினால்
தரையில் வாழ்வுபெற வுய்யுமவ்வுயிர்கள் தனையுள்மேவவரு திண்கலம்
உரையில் மிக்கதன தன்பர்யாரையு மொருங்குமீட்கவரு மொருவனைப்
புரையிலாதுணரு விக்குமுற்குறிய தானபொற்பொடு பொலிந்ததே. 5

ஒப்பிலற்புதம தாதியாகுமிறை யுததமச்செயல்க ளூறுதலால்
தப்பிறந்தமர்கள் மேவியன்பினொடு தாவிலாதவதிதன்மையால்
செப்பருந்தலைகொள் முதல்வன்மீதுதுதி செய்யுமோதைகளு மிஞ்சலால்
அப்பெருந்திரு விளங்கின்றகல மரியமுத்திலைப திகழ்த்ததே. ௧௨

மோதுசீகர மெறிந்திவாறுவரு மொய்த்தவாழமிகு வாரிநீர்
நீதுளோர்மடிய நூற்றைம்பது தினங்களிற்பெரிதுநின்றதால்
மீதுலாவிவரு நவ்வினுண்மருவி மேவுமவ்வுயிர்க ளன்றியே
ஓதுமாமிச பிராணிமற்றவை ஒருங்கழிந்துயி ரொழிந்தவே. உஅ

வீறளப்பரிய தேவனாணையில் மிதந்திவ்வாறுவரு வாரிநீர்
நூற்றைம்பது தினங்களும்புவியில் நோதகப்பெரிது நிற்கவே
வேறெவன்புகல்வ தையனப்பொழுது மிக்கபேழையினுண் மேவிவாழ்
கூறருந்தகையவுயிர்கடம்மையருள் கொண்டுநெஞ்சினினினைந்தனன். உகூ

(வேறு) கருத்தினன்புறு கத்தன்பணியினால்
மருத்துவீசிட வாரி வடிந்ததால்
பெருத்தசிந்துப் பெருகுந் துவாரமும்
உருத்தமேகத் துவாரமு மோய்ந்தவே. ௩0

துளங்கவான்பொழி தூவலுநின்றது
கிளர்ந்த வெள்ளங் கிரமங் கிரமமாத்
தளர்ந்துநூற்றைம் பதுதினந் தம்மிலே
விளங்கமேதினி மீது குறைந்ததே. ௩க

*ஈரமாமதி யேழுபன் னேழதாஞ்
சீரதாந்தினந் தன்னிற் சிறந்தகன்
நீரராத்திகழ் வோருய் நெடுங்கலம்
ஆரராத்து வரையினி லானதே. ௩உ

ஆயபத்தா மதியள வாகவே
தோயநாளுஞ் சுருங்கச் சுருங்கவம்
மேயபத்தா மதிமுன் விளங்குநாட்
சேயவெற்புச் சிகரந் தெரிந்தவே. ௩௩

நாலுபத்துத் தினஞ்சென்று நன்னெறி
சாலுமுத்தமன் றன்புரி பேழையின்
பாலதானபலகணி நீக்கியோர்
கோலமார்மைக் கொடிவெளி விட்டனன். ௩௪

பொன்னைப்பேழையி னின்று புறப்பட்ட
அன்னகாக மவனியி லெங்கணும்
துன்னுநீரஞ் சுருங்கு மளவுமே
மன்னுறாது மருண்டு திரிந்ததே. ௩௫

வையமேற்சலம் வற்றிய தோவெனும்
ஐயநீங்கிட வன்றோர் புறாவையும்
செய்யபேழையு ளின்று திருத்தகும்.
மெய்யதாமுணர் வோன்வெளி விட்டனன். ௩௬

* சலப்பிரளய மாதமென்பது கருதி இரமமதியென்னப்பட்டது.

சேறலுற்ற புறவந் திரிந்திளைப்
பாறவுள்ளடி வைப்பதற் கரமிடந்
தேறலின்றித் திரும்பிற் றவன்கையாற்
கூறலுற்ற வதனையுட் கூட்டினான். ௧௭

பின்னுமேழு தினங்களின் பின்னரும்
முனனர்விட்ட புறவினை முந்துற
அன்னபேழை யகத்தினின் றேசென
மின்னுமம்புயத் தோன்வெளி விட்டனன். ௧௮

ஓதுமந்த வொருபுற வந்தியம்
போதுமீண்டு புகுந்த தடர்சினைச்
சீதநல்லிலை வாயிற் றெரிந்தத்தால்
ஓதநீர்குறை வுற்றுள தோர்ந்தனன். ௧௯

திரும்பவேழு தினங்களின் பின்னரும்
பொருந்துமந்த புறவினை விட்டனன்
திருந்துநல்லுணர் வோன்விடச் சென்றபுள்
இருந்தவன்புடை மீண்டுள தில்லையே. ௨௦

(வேறு) புகலரு முணர்வுக் கெட்டாப் புங்கவ னருள்பெற் றோனுக்
ககவையோ ராறுநூறு யதன்பின்முன் மதியி னாதிப்
பகலிடை வறந்த தண்ணீர் பஃறிமேற் பலக நீக்கிச்
சகதல முலர்ந்த காட்சி தனையவன் கண்டா னன்றே ௨௧

திருத்தக இரண்டா மாதந் தினங்கள்மூ வொன்பா னட்டில்
உருதநீர் வறந்துபார்மூற் றுலர்ந்தது நோவா தன்னைக்
கருத்தனப் பொழுது நோக்கிக் கலத்தினின் றிழிக நீயும்
அருத்திகொள் மனைவி மைந்தர் அவர்மனை விகளு மன்றே. ௨௨

அன்றியு நின்பால்வரு மனைத்துமா மிசசெந் தாகுந்
துன்றிய பறவை வர்க்கந் தொக்கபல் விலங்கு வர்க்கம்
ஒன்றிய தரையின்மீதே யூர்பவு மினனுன் னோடு
நின்றிடு கலத்தினின்று புறப்பட நிகழ்த்து வாயே. ௨௩

அன்னவச் சீவசெந்து அவனியிற் கிளைக ளாக
மன்னுதங் குலத்தை நல்கி மல்கவுங் கடவ வென்றான்
நன்னெறி யவனு மற்றை யுயிர்களு நாத னன்னாட்
பன்னிய படியே யந்தப் பஃறிநின் றிழிந்தார் மாதோ. ௨௪

மையறு சீர்மை சான்ற மரக்கல மிழிந்து நோவா
வையக வரைப்பில் வந்த பின்னர்வா னவனுக் காங்கே
செய்யவே திகைபொன் றாக்கிச் செறிந்தபுள் விலங்கிற் சுத்த
மெய்திய சிலவற் றீட்டி இரும்பலி யிசைவித் தானே. ௨௫
தோமகல் கருணை மூர்த்தி சுகந்தத்தை மோந்து சொல்வான்
தீமையே யிளமை தொட்டுச் செலுநர ருளத்தி லேனும்
பூமியை யவர்நிமித்தஞ் சபிப்பதின் றினிமுன் போல
ஆமுயி ரனைத்து மவ்வா றழித்தலும் புரியே னன்றே. ௨௬

மேதினி நிலைக்கு மட்டும் விதறிட லறுத்த லோடு
சீதள வுட்டணங்கள் செறிந்திடு கூதி ரோடு
மேதகு கோடைக் காலம் விளங்கிய பகலி ராவென்
றோதிவை யோவா வென்று முளத்தொடும் புகன்றான் மன்னோ. ௪௭

இன்னவை நிகழ்ந்த பின்ன ரெம்பெருங் கடவுள் நோவா
தன்னொடும் புதல்வ ரானோர் தமக்கு மங்காசி நல்கித்
துன்னு சந்தான மல்கித் தோமில்பன் மகாரை யீந்திப்
பொன்னில வளாக மீது பொலிதரப் புரிகு வீரே. ௪௮

மண்ணினெவ் விலங்கும் விண்ணில் மருவிய பறவை யாவும்
நண்ணுமிப் புவியிற் சென்று வனைத்துநீ ணரலை தன்னி
னுண்ணிறை மச்ச மெல்லா முங்களுக் கஞ்சி வைகப்
பண்ணினே னவற்றை நீயி ருணவெனப் படைக்க லாமே. ௪௯

இங்கிவை யனைத்தும் பூண்டி னினமென வுங்கைக் கீந்தேன்
தங்கிய வுதிரமோடு தசைகளைப் புசிக்கொ ணாதால்
உங்கள் மெய்ச் சீவ னான உதிரத்தாற் பழியே கொள்வேன்
பங்கமில் சீவ ராசி அனைத்தினும் பழிகொள் வேனே. ௫௦

மானவ னுயிருக்காக மானவ னிடத்தி லன்றி
ஆனவன் றுணைவன பாலும் பழிகொள்வேன் சரனை யந்நாள்
வானவ னுமென் சாயல் மானவீந் தேனாற் கொன்றால்
மானவ னுதிரந் தன்னை மானவன் சிதைக்க மாதோ. ௫௧

சந்ததி விருத்தி யெய்தித் தரணியிற் கிளைத்து வாழ்தீர்
உந்தமக் கும்பினும் மரபிற்குங் கலத்தி னின்று
வந்தவெவ் வுயிர்க்கு மன்றி வருமுயி ரெவற் றினுக்கும்
தந்தவென் னுடன்படிக்கை தனைநிலைப் படுத்தலுற்றேன்.

மானில வளாகந் தன்னில் மல்குநீர்ப் பிரளயத்தால்
ஊனிடை யுயிர்க ளெல்லா மொருங்கற லினிமே லில்லை
ஈனமா யுலகை மாய்க்கும் பிரளய மினியின் றென்றென்
னானமி லுடன்படிக்கை தன்னை யேற்படுத்த லுற்றேன். ௫௩

அன்றியு மெனக்கு முங்க ளனைவர்க்கு முங்கள் மாட்டே
துன்றுமெச் சீவராசித் தொகுதிக்கும் மரபு தோறும்
என்றுமென் னுடன்படிக்கைக் கிலாஞ்சனை யாக வானில்
நின்றிடு மாறென் வில்லை நேருவித் திட்டே னன்றே. ௫௪

குவலய வரைப்பின் மேல்யான் கொண்டலை விடுக்கு மாங்கே
தவலறு மன்ன சாபம் விசும்பினிற் சார்ந்து தோன்றும்
இவணுமர் தமக்கு மற்றை யெவ்வுயிர்த் தொகைக்கு மின்னே
நுவலிதை நினைக்க விண்ணில் நோக்குவ லதனை யென்றான். ௫௫

ஏதமில் பேழை நின்று புறப்பட்ட நோவா வீன்ற
காதலர் சேமுங் காமும் யாப்பேத்து மாகுங் காமே
நீதமர் கானன்றாதை தெண்டிரை யுலகமெங்கும்
பொதரு மாந்தரெல்லா மிவர்குலப் புதல்வராமே. ௫௬

பன்னிய நோவா வென்போன் பயிர்புரி தொழிலோ னாய்
இன்னியற் றிராட்சத் தோட்ட மியற்றியவ் விரசர் துய்த்துத்
தன்னிய வெறியி னாலே சுற்றிப கூறை யின்றி
மன்னிய கூடாரத்துள் மயக்குற்றுக் கிடந்தான் மாதோ.

மற்றது கண்ட காமாம் மைந்தன்போய் வெளியி லாங்கே
யுற்றதன் றுணைவர்க் கப்போ தோதின னவர்தந் தோள்மேற்
பற்றியோர் துகில் போர்த்துப் படர்ந்துபின் முகமே யாக
நிற்புறீஇ மானங்காத்து நின்றனர் நோக்கி லாத்ர. ௫௮

ஏமுற மயக்க நீங்கி யெழுந்துளி நோவா வந்நாட்
காமுதற் புரிந்த வாறு கருத்தினி லுணர்ந்து கானான்
சேமுதற் சேட்டர் தாசர்க் கடிமையாய்ச் சேர்க வென்றே
நோமுறை கொடிய சாபம் நுவன்றனன் பின்னுஞ் சொல்வான். ௫௯

திருத்தகு சேமென் போர்றன் தேவனைத் துதிப்பாங் கானும்
அருத்திகொள் துணைவ ராமேனோர்க் கடிமையாம் யாப்பேத் துய்த்து
விருத்திபெற் றிருக்க மேலோன் விதித்திடு மன்றேனன். சேமின்
பெருத்தபா சறையில் வைகு மென்னவும் பேசி னானே. • ௬0

மாண்டநீர்ப் பிரளயத்தின் பின்னரும் வளங்கொ ணோவா
ஆண்டொரு முன்னூற் றைம்பா னளவும் வாழ்ந்திறந்தா னன்னான
காண்டகு புவியிற் றோன்றி மரணத்தின் காறும் வாழ்வு
பூண்டது தொளாயிரத்தைம் பதுசமை புகலுங் காலே. ௬௧

சலப்பிரளயப்படலம முறறும



## ௯. நோவாவின் வமிசப்படலம்.

Chap. X. Generations of Noah.

மற்றிவை நிகழ்ந்த பின்னர் வானவ னருளால் நோவா
பெற்றுள மைந்தர் தம்பாற் பிறந்தனர் சிறுர்கள் பல்லோர்
சொற்றுள வவர்கட்குற்ற பெயரையுந் தொல்லை வைப்பி
னூற்றுள வவர்க டத்தம் மரபையு மொருங்கு சொல்வாம்.

பொற்புயர் யாப்பேத் தீன்ற புத்திரர் கோமர் மாகோக்
கற்புத னருள்சேர் மாதாய் அணிகெழு யாவான் துபால்

மற்புய மேசேக் தீரா சென்பவர் கோமர் மைந்தர்
சொற்பெறு மஸ்கீன் ரீபாத் தொகற்மா வென்போ ராமே. ௨

இசைபுனை யாவான் மைந்தர் எலீசா தருசி சித்தீம்
கசையறு தோர்த்தா னிம்மாம் மற்றிவர் மரபிற் றோன்றி
இசைவுறு மிசர தேயர் தீவுக ளேற்ற பாடை
அசைவறு மரபுக் கேற்ப அகனிலம் பகுப்புற் றொன்றும். ௩

(வேறு.) காமனிசதோர் கூசுமிசி ரூயீம்பூற்று கானானென் றிவராகுங் கூசின் மைந்தர்
ஆமவர்சே பாவவிலா சப்தாராமா அணிசெழுசப் தேகாவா மிராமாவீன்ற
எமமுறும் புத்திரர்கள் சேபா தேதான் என்பவர்கள் கூசுநிமி ரோத்தை யீன்றான்
காமருசீர் நிமிரோத்து வீர ஞானிக் கடவுள்சண்முன் வேட்டமதிற் கைவந்தற்றான். ௪

மற்றதனாற் கடவுள் கண்முன் வேட்டந் தன்னில் வல்லநிமி ரோத்தைப் போலெனவே மண்ணில்
நிற்புறுசொல் வழக்கமுற்ற தாகு முன்னாள் நீள்வளஞ்சேர் சினியார் மாநாட்டி னங்ஙன்
[ரன்
மற்புனைபா பேலேரேக் ககத்கல் நேயாம் வயங்குதிரு மாநகர்க ளன்னவீ
சொற்றவனு யரசுபுரிந் திருந்து வாழ்ந்த குலவுமுதற் றலங்களாங் குறிக்குங்காலே. ௫

அன்னதிரு நாட்டினின்று புறப்பட்டேகி அசூரென்போன் நினிவேநல் லிரேகோ போத்து
[டு
பொன்மருவு காலாகாம் புரங்களோடு போற்றுநினி வேகாலா கிவற்றினூ
துன்னுபெரு மிச்ரேசென்மா புரமுந் தந்தான் சொற்றமிசி ராயீமாந் தொல்லோனீன்ற
[கூ
நன்னரிளம் புதல்வருலூத் தீமனாயீம் நப்துகீம்லி காபீம் பத்துருசீமின்னும்.

காண்டகுதிண் பெலிஸ்தர்வழி முதலாய் நின்ற கசிலுகீம் கத்தோரி மிவரேயாகும்
[மோரி
பூண்டதிறற் கானான்றன் புதல்வர் சீதோன் பொற்புறுகேத் தேபூசி புகழே
மாண்டகுசீர்க் கிரகாசி யரகீயீவி வண்சீனி அரவாதி வருசேமாரி
மூண்டவிறற் காமாத்தி யிவர்வெவ் வேறாய் மொழிசானு னியர்பிரிந்துபரந்து வாழ்ந்தார். ௭

சீதோனே முதற்கேரார் மார்க்கமாகச் செறிகாசா நகர்காறு மதுமுன் னாக
சோதோமுங் கொமோராவு மற்மாவோடு துன்றியசே போயீமு மெனவேசொல்லும்
மூதார்திண் புரங்களூறு மார்க்கமாக முந்துமெழி லாசாமா நகரமட்டும்
நீதாருந் திறற்கானான் மரபினோர்கள் சேர்ந்திருந்த திருநாட்டி னெல்லைசேரும். ௮

இங்கிவர்கள் காமென்போன் மரபினோராம் இனையவர்தந் தமக்குண்டாங்
குடும்பம் பாடை [ழ்ந்தார்
தங்கியதே யஞ்சாதி யிவைகளாலே தாம்பிரிக்கப் பட்டுவெவ்வே றுகவா
பொங்குபுகழ் யாப்பேத்துக் கிளையசேமும் புதல்வர்களை யுதவினனால் அ
வனே யேபேர்
அங்குதவும் பெருங்குலத்தோ ராகிவாழ்ந்த அனைவருக்கு மாதிகுலத் தந்
தையாமே. ௯

சேம்புதல்வ ரெலாமசூர் அருபக்சாத்து சிறந்த லூத் அராமென்போர்
அராமென் போனுக்
காம்புதல்வ ரூத்சூகூல்கேத்தேர் மாஷாம் அருபக்சாத் தருள்மைந்தன் சா
லா கன்றன் [னீன்றன்
எம்பலொடுந் தந்தமக வேபே ரன்றேன் இளங்குமர ரிருவோரை யினிதி
மேம்படுபே லேக்கொரு வனவன்வாழ் நாளில் வியனுலகம் பாகுபா டெ
ய்திற் றன்றே. ௧0

யோர்த்தான்மற் றவன்றுணைவ னல்மோதாத்தி ஞேடுசேலேப் பாசருமா வே
த்து யாராக் [லும்
கேத்துபுக ழாதோரா மூசால்மிக்க வெழிற்றிகலா வுடனோபால் அபிமாவே
மாத்தகைய சேபாவு மொப்பீர் தானும் மற்றவிலா யோபாபு மெனவேமண்
ணிற்
கோத்தபெய ருடையவிவர் யோத்தானென்போன் குன்றுவன் புடனுதவு
ங் குமாரராமே. ௧௧

மற்றிவர்வாழ் விடமேசா முதலாக் கீழ்பால் மன்னியசேப் பார்வரையின்
வரைக்குமாகும்
உற்றதத்தம் நாடுசனங் குடும்பம்பாடை யுடனிவற்றால் வேறுபட்ட சே
மாம் நாமம்
பெற்றவன்சந் ததியினர்க ளிவராமிங்ஙன் பேசிவர்தஞ் சாதிகுலப் படி
வெவ் வேறாய்த்
தூற்றிடுநோ வாவீன்ற தநய ராவோர் தொன்மரபிற் றோன்றுசெழுங் கிளை
களாமே. ௧௨

வந்தகெடும் பிரளயத்தின் பின்னரிந்த மாநிலத்தில் வெவ்வேறு வகுக்கப்
பட்ட
எந்தநிலத் தவருமிவர் மரபினோராம் எவர்க்குமங்நாட் பாடைமொழி யா
வுமொன்றாம்
அந்தநெடுங் காலமதிற் குணக்கில் நின்றே அடைந்துசினி யார்நாட்டோ
ர் சமமாம் பூமி [ல். ௧௩
வந்ததுகண் டாங்கனுகி அனையமாந்தர் வைகினரா லவ்வாறு வைகுநாளி

லம்மினியா மிட்டிகைசெய் ததனைச்செவ்வே வைக்குவஞ்சுள் ளையி
லென்று மவர்களாங்கே
தம்மிலிசைக் தொருவருட னொருவர் பேசித் தந்தனராற் கல்லுக்காச செ
ங்கற்றன்னை

வெம்மையுறுஞ் சுதைக்குலப் பயினுங்கொண்டார் மேதினியில் யாம்பி
ரியா தொருநகு வாழச்
செம்மையுறும் புரமொன்றும் வானளாவுஞ் சிகரமுள கோபுரமுஞ் செய்
வோமென்ருர். கச
அச்செயலாற புகழுநமக் குண்டாமென்ற அனைவோரு மொருங்கிசைந்
தா ராங்கப் போதே
இச்சகத்தில் மாந்தர்களிவ் வாறுசெய்யும் இரும்புரமுங் கோபுரமுங் கா
ண்டு மென்று
மெச்சுதகை யெம்பெருமா னிறங்கியிந்த மேதினியோ, ரனைவருமொன்ற
வர்கள் யார்க்கும்
உச்சிதமாம் பாடையுமொன் ருெத்துமூண்டார்உன்னுசெயலனைத்துமொ
ரு தொருங்குசெய்வார். கரு
ஆதலினல் யானணுகி ஒருவர் பேசும் அம்மாற்றம் மற்ருெருவ ரறியாவண்
ணம்
பேதமுறப் பாடைவெவ்வே ருகுமாறு பிரிப்பலென நிகரில்லான் பேசி
யாங்கே
பேர்தலுற்றவ் வாறியுற்றி யவரையன்று பூமியெங்குஞ் சிதறடித்தான் புர
முமோய்ந்த
தோதலுற்ற பாடைதடு மாறலாலவ் வுயர்தலத்தைப் பாபேலென்று ரைப்
பர்மாதோ. கசு
செப்பியவான் பிரளயந்தீர்ந் தீராண்டின்பின் சேமென்பான் நூருகுமக
வைதன்னில்
ஒப்பிலருபச்சாத்தாம் புதல்வன்றன்னை உதவியபினைஞ்ஞூறு வருடமேவி
இப்புவியிற் புதல்வர்புதல் வியர்கடம்மை இனிதளித்தான் அருபச்சாத்தெ
னும்பேர்பெற்ற
அப்புதல்வ னேழைந்தாம் வயதிற்சாலா காங்குமரன் றனைமகிழ்வோ டரு
ளிப்பின்னும் கஎ
நாலாகு நூற்றுமூன் ருண்டெண்ணி நற்சுதரைச் சுதைகடமை நல்கிவா
ழ்ந்தான்
சாலாகுமுபபதாம் வயதிலேபேர் தனையுதவிப் பின்சமைநா னூற்றுமூன்று
மேலாக வாழ்ந்துமைந்தர் மகளிர்தம்மை மேதினியி லினிதளித்தா னே
பேரென்போன்
பேலேகாம் புதல்வனைமுப் பத்துநான்காப் பேசுவய தினிலுவந்து பெற்
ருனன்றே. கஅ
பெற்றபின்னும் நானூற்று முப்பானண்டு பேருலகிற் புதல்வர்களைப் புத
ல்வி மாரை
உற்றமகிழ் வுடனுதவி வாழ்தலுற்ருன் ஒங்குமுப்பா னகவையினிற் பே
லேகென்போன்
மற்புயரே கூவென்னும் மகவையீன்று மற்றுமிருநூற்ருென்பான் வருட
மேவிப்
பொற்புயருஞ் சிறுவர்களைச் சிறுமிமாரைப் புரிந்துதவிப் புவிவாழ்வு போ
க்கினனே கக

ஏருருந் திருமுகத்தா னிரேகூ வென்போ னெண்ணான்காம் வயதாகி இனிமை கூரச்
சேருகைத் தந்துபின்னுஞ் சிறுவரோடு சிறுமிகளைப் பெற்றிருநூற் றேழாண்டிற்றான்
பாருடாண் டையாறிற் சேரு கென்போன் பரிவினொடு நாகோரைப் பயந்தான் பின்னுங்
காருருங் குழல்மகளிர் மைந்தர்ப்பேறு கதித்திருநூ றாண்டுமிகக் களித்து வாழ்ந்தான். ௨௦

செல்லாண்டங் கிருபத்தொன் பதனில் நாகோர் தேராக்கை யீன்றுபின் னூற் றொருபத் தொன்பான்
பல்லாண்டு வாழ்வுபெற்று மைந்தரோடு பாலகிக டமையுதவிப் பாரை நீத்தான்
மல்லாண்ட புயத்தேராக் கேழுபத்தாம் வயதின்மேல் நாகோர் கல்லாரான் மன்னுஞ்
சொல்லாண்ட புகழாபி ராமென்றோதுஞ் சுதர்களையீன் றனனுலகந் துலங்குமாறே. ௨௧

ஆரானென் றிடுமைந்த னுலோத்தை யீன்றாங் கவன்சநந நாடாகுங் கல்தேயாவின்
ஊராகு நகரினிடை தந்தைசாமுன் உயிரிழந்தான் மில்க்காளோடிஸ்க்காளென்னும்
பேராரு மிருவோரும் ஆரானீன்ற பேதையராமவர்க டம்முள் மில்க்காடன்னைச்
சீராரு நாகோரென் றுரைக்கு மைந்தன் செப்பமுட னில்வாழ்வு சிறக்க வேட்டான். ௨௨

சாராயென் றுயர்பெயரி னுளையாங்கே தக்கபுக ழாபிராந் தயங்க வேட்டான்
சீராய மழலைமொழிச் சாருரைநலகுரு மசயலலளத மதாவை வந்தியாகிச் சேர்ந்தாள்.
தேராகு புதல்வனையு மாரானீன்ற சிறுவனையுந் தன்மருகி தனையுங்கொண்டே
ஊராகுங் கல்தேய நகரநீங்கி உயர்காரா னடைந்துறைய வுன்னினானே.

அங்கிருந்திவ் வனைவோரும் புறப்பட்டேகி அகன்காரா னமெட்டு மணுகியாங்கே
தங்கினரா லிருநூற்றைந் தாண்டுவாழ்ந்து சகவாழ்வு தனைத்தணந்தான்தே ராக்கங்கன்
பொங்குபுக ழாபிரா மென்போன்றன்னைப் புங்கவன்மே னுளமழைத்துப் புரந்தவாறும்
மங்குதலில் பெருவரங்க ளீய்ந்தவாறும் மற்றவையு முற்றபடி வழுத்துவாமே. ௨௩

நோவாவின் வமிசப்படலம் முற்றும்.

## ௭. தேவன் ஆபிரகாமை அழைத்த படலம்.

அன்னபொழு தெம்பெருமா னாபிராந் தனைநோக்கி
யுன்னருந்தந் தையினசனதை ஒன்றுமினத் தார்கடமை
மன்னுதிரு நாட்டைவிட்டு மற்றுனக்கு யான்காட்டும்
பொன்னகருக் கின்னேநீ போய்தங்கு வைகுதியால். ௧

மாற்றமொன்று கேளுன்னில் மகத்தான சாதியொன்று
தோற்றுவித்தா சீர்வதித்துத் தூலங்கவுன்றன் பேரதனை
ஏற்றமுறத் துவலாசீர் வாதமா யிருப்பாய்நீ
ஆற்றவுனக் காசிசொல்லு மவர்க்காசி யானருள்வேன். ௨

வெஞ்சாப முனக்குரைக்கும் வெய்யவரைச் சபித்திடுவேன்
மஞ்சாரும் வையகத்தில் மன்றுமெந்தக் குலத்தினரும்
விஞ்சாசி பெறுவருன்னால் எனவிண்டான் விமலனுரைக்
கெஞ்சாத பத்தியொடு மாபிரா மிசைந்தெழுந்தான். ௩

பேரானன்றன் மனைவியொடு முலோத்தினொடும் போந்துதம்பா
லானார்க ளனைவரொடு மக்காரா னாட்டீட்டும்
வானாருஞ் செல்வமொடும் மற்றந்த நாடொருவிக்
கானானென் றுரைபெறுஞ்சீர்க் கவினாட்டி னிடையடைந்தான். ௪

தொழுபத்தர்க் கருள்சுரக்குந் தூயவன்சொற் படிகாரான்
விழுமத்திண் ணாடதனை விட்டகன்றங் காபிராம்
பழுதற்ற செழுங்கானான் பதியணுகப் புறப்படும்போ
தெழுபத்தைந் தாம்வயதா யிருந்தனனன் னவனேகி. ௫

திரிந்துசுற்றி அந்நாட்டிற் சீகேமென் றுளபதிபாற்
சரிந்தசெழு மோரேயாஞ் சமபூமி தனைச்சார்ந்தான்
தெரிந்துள்ள மகிழ்ச்சியொடு மன்றனையான் சேர்ந்தவந்த
விரிந்ததலத் திடைகானான் மரபினர்கள் மேயிருந்தார். ௬

அத்தலத்தி லெம்பெருமா னவனுக்குத் தரிசனையாய்
இத்தலத்தைப் பெற்றிடவுன் சந்ததியார்க் கினிதளிப்பேன்
உத்தமநீ கேட்டியென்றா னுவந்துதரி சனையான
அத்தனுக்காங் காபிராம் வேதிகையொன் றன்றமைத்தான். ௭

அங்கிருந்து பெயர்ந்தேகி அவன்பெத்தே லின்கீழ்பாற்
பொங்குவெற்பொன் றுளதந்தப் பொருப்பினிற்போய்ப் பெத்தேலாந்
துங்கநகர்க் கீழாயீத் தொல்பதியின் மேற்றிசையிற்
றங்குதிருப் பதியகத்தே பாளயமுஞ் சமைத்தானே. ௮

அவ்விடத்தும் வேதிகையொன் றாக்கியம லனுக்குரிய
திவ்வியமாந் திருநாமஞ் செப்பித்தோத் திரமொழிந்தே

ஒளியமற் றுயருளத்தவ் வாபிரா மென்றுரைசால்
செவ்வியனன் றெங்கோமான் திருவருள்பெற் றுய்ந்தானே. ௯

தன்றிசைகள் போற்றியவன் தூயவனைத் தொழுதெழுந்து
தென்றிசையை நோக்கிவழி சென்றனனா லந்நாளில்
நன்றிசையு மந்நாட்டில் நனிபஞ்ச முற்றதனாற்
சென்றிசையத் தானெகிப்தில் வைகுதற்குச் சிந்தித்தான். ௰

சிந்தித்த படியேயச் செழும்பதியி னணித்தாக
வந்துற்ற பொழுதத்தில் மனைக்கிழத்தி முகநோக்கித்
தந்தற்று றொருமாற்றந் தையல்நீ நோக்கினாற்கு
முந்துற்ற சுந்தரஞ்சேர் மொய்குழலென் றியானுணர்வேன். ௧௧

நின்னையிந்நாட் டவர்காணில் நின்னெழிலின் காரணமா
வென்னைவதைத துனைவைப்பா ரெனக்குநின்றால் நயங்கிடைத்தே
இன்னுயிர்பெற் றியானுய்ய யானிவற்குத் துணைவியென்றே
பின்னனையா யவர்களுக்கு விளம்புகநீ யென்றுரைத்தான். ௧௨

என்றினைய மாற்றமிசைத் தெகிப்துவளம் பதியகத்தே
சென்றனையான் வதிபொழுதத் திருநகர்க்கண் வாழ்வோர்கள்
அன்றனையா னுடனணுகி யாங்குதவைகுஞ் சாராயாம
மின்றனையார் விசித்திரஞ்சேர் மெல்லியலென் றுவந்துகண்டார். ௧௩

பார்வோனென் றந்நகர்வாழ் பார்த்திபனுக் கவன்மாட்டே
சேர்வோராம் பிரபுக்க டாமுமந்தச் சேயிழையை
நேர்வோர்மற் றெழிற்கரிது நீணிலத்திலெனப் புகழ்ந்தார்
கார்போன்மைக் குழலாளைக் காவலன்றன் னகத்தழைத்தான். ௧௪

கட்டழகுக் காரிகைதன் காரணமா வாள்வேந்தன்
இட்டமுற்றுங் காபிராமெனபோனை யுபசரித்தான்
தொட்டபணி புரியாண்பெண் டொழும்பர்களு மாடாடும்
ஒட்டகமும் பெண்கரமு முடையவனா யவனிருந்தான். ௧௫

மானனையா டன்னிமித்தம் மன்னவனைக் கிளையுடனே
வானவனுஞ் சதிதுயரம் வருவித்து வாதித்தான்
கோனனையான் றனைக்கூவிக் குறையெனக்கே னீபுரிந்தாய்
தேனனையாள் நினக்கிளைய தெரிவையென்றேன் செப்பினையே. ௧௬

இங்கிவளை நின்மொழியா லினியமனைக் கிழத்தியென்றென்
பங்கிருத்து மாறெண்ணிப் பரிவுற்றே னறியாதே
மங்கையிவ ளுன்மனையாள் மற்றிவளைக் கொண்டகலென்
றங்கரசன் இங்கிரர்க்கூட யகரையகற் றுகினென்றான். ௧௭

காவலன்றன் பணிகேட்டுக் கடிதேகிப் பணிசெய்வோர்
தாவறுசீ ரவன்றனையுந் தையலையு மன்னவன்சார்
மேவலுறு மெவற்றினையும் மிக்கவந்த நாடகன்று
போவதுறுங் கடனென்று புகன்றவரைப் போக்கினரே. ௧௮

(வேறு) அணிமேவு சாராயி னுடனாபி ராமுகனி யாங்குள்ள பொருளொ டரசன்
யணியால நகரத்தை யொருவுற்று லோத்தினொடு படர்ந்து வழிகொண்டு போய்
நணினார்க டென்றிக்கி னிடையாடு மாடுகளு நருவெள்ளி பொன்னு முளனாய்த்
திணிமேவு புயனாபி ராமங்கு பெரிதான செல்வத்த னாகியுளனே. ௧௯

பின்பந்த விடநின்று பெயர்வுற்று நடைகொண்டு பெத்தேலி னணுகி மகிழ்வாய்
முன்பந்த நகருக்கு மாயீயினுக்குமிடை முடுகிமித பத்தியுடனே
பொன்பெற்ற கூடார மொடுமேடை செய்துதொழு புனிதமிகு பதியில பிராம்
அன்புற்று மேலான திருநாம மதையோதி யமலற்பணிந்தனனரோ. ௨௦

அவனொடு லோத்துக்கு மாடாடுபொளயமு மாங்கனுள வாமிருவருந்
தவமேவு செல்வத்தரசனாலவ் வணிநாடு சகவாசமாக மருவி
அவர்வாழ்வு பெறதற்கு மமையாதவர்க்குள்ள வாங்கன்று காலிநிரையைக்
கவலோடு மேய்க்கின்ற பேருந் தமிற்பகைகள் காட்டியொழு குற்றனர்களே. ௨௧

கானானின் மரபோர்க ளுடனேபெ ரீசியர்கள்களறந்த நாட்டினுறைவோ
ரானார்க ளங்காளி லாங்காபி ராமன்று லோத்தைமுக நோக்கியளியால்
நானாக நீயாக நம்மேய்ப்பர்தாமாக நண்ணுபகை கொள்ளல் விழையேன்
ஆனந்த நண்பிற் குரித்தான துணைவோர்க ளானோர்கள் நாங்களலவோ. ௨௨

இத்தேசமெல்லாமுன் முன்னேயிருக்கின்ற வெனைநீங்கி வாழ்வுபெறலாம்
ஒத்தே யிடத்திக்கில் நீபோகில் யான்வலது திசைமருவி வாழ்த லுறுவேன்
உத்தேச மேல்வலது பாலுற்று நீயுறையில் யானிடது திசையையொன்றிக்
கொத்தோடுவாழ்வெய்துவேனென்ன அவனன்னகூற்றுக்கிசைந்தனனரோ

உளமொர்த்து நோக்குற்று யோர்தா னணித்தாக வுற்றசம பார்முற்று நீர்
வளமொத்த நாடென்று லோத்தங்கறிந்ததனை துள்ளதிலெண்ணி மகிழ்வுற்
றளவொத்து மருவுற்ற சோவாரின்மட்டாமவ் வணிபெற்றநாடுநறைசேர்
தளமொத்தமலர்மேவுமேதேனெனிப்திவைகள் சரியென்னவிரவுற்றதே. ௨௪

நானு வளம்பெற்ற சமபூமி யாமதனில் நண்ணிநனி வாழ்வுபெறவே
போனா னுலோத்தன்று கீழ்பாலைநோக்கியணி பொங்குசம பூமிதனிலாம்
வானாரு நகரங்கண் மருவுற் றதன்பாடி சோதோமின் முன்னர் மருவத்
தானாக வுய்த்தங் கிருந்தான நகரோர்கள் சண்டாளர் துன்மார்க்கரே. ௨௫

கானா னெனுஞ்செல்வ நாட்டாபி ராம்வாழ்வு கண்டானுலோத்து விலகிப்
போனா னதன்பின்ன ரிறையாபி ராமினெழில் முகநோக்கி யங்குபுரிவால்
ஆனா லுதிக்குமுற நீபார் நினக்குநின தாம்பின் குலத்தார்க்குமிவ்
வானாருமணிநாடுமுழுதங்கொடுத்தருள்வல் மருவுற்றுவாழ்வுபெறவே. ௨௬

நின்பின் குலந்தன்னை மண்டுளியளவாக நிறைவெய்தமாறுபுர்வேன்
இன்பந்தருஞ்செல்வ நாடிதனை நினதாசயானியுமாறதனிருல்
பொன்பெற்றநாடெங்கு நீள்வ கலமுழுக்கப்போய்ச்சுற்றிவருதப்புரியென்
றனபுற்றபேர்க்கண்பொடருள்மாரிபொழிலையனன்றேருற்றனனரோ.

ஒப்போதயாதுமிணையற்றதொருமெய்யன்னைலோதுற்றவாரதனிருல்
அப்போதுதன்பாடிதனையும்பெயர்த்தேகி அப்பதியையொருவியபிராம்
தப்பாதுபோயெப் பிரோனில்மம் ரேயினின் சமபூமி மருவிவதியா
எப்போதுமுடிவற்றவிறைவற்குமண்மேடைசெய்தேஇறைஞ்சினனரோ.

(வேறு) ஆர்புகழ் பெறுசினியாரக் கரசெனு மமராபேல்
வர்திக ழேலாசார்க் கிறையெனு மரியோகு
பார்புக ழேலாமின் பதிசெதர் லாகோமேர்
சீர்கிளர் கோயீமாள் திறலுறு தீதாலும். ௨௯

புகழ்பெறு சோதோமின் புரவலனும்பேரா
திகழ்வுறு கொமொராவின் திறல்கர பதிபிரசா
தகவுறு மச்மாவாள் சக்கிரி சீனயா
சகமதி சேபோயீம் சயபதி சேமேபர்.  ௩௦

பிரபலசோவாராம் பெயர்பெற்று பேலாவின்
புரவல னெனவுஞ்சொல் பொருசிற லரசுடனே
விரவிய படைசெழுதிண் வெளகள மிடையெய்தி
அரவம துறமோதி அமர்பொர லுற்றுரே. ௩௧

கெடிப்புறு மிகர்பாருங் கேதரு லாகோமேர்க்
கடிப்படுநெறிபோரா யாறி நவருடமுறு
முடிப்பினில் மறுவருடம் முனிவுசொ ழுவர்ச்சிந்தாய்ப்
படித்தல முறுசிததிம படுகரி னிடைமொய்த்தார். ௩௨

கெடலுறு வலிமறுவுங் கேதரு லாகோமேர்
அடல்கெழு துணையிருப ரருகுற மறுவருடம்
திடவுள மொடுபோயஸ்த் தெரேக்கற ஞயீமின்
இடமுறை தருரெப்பா வினரெனு மவர்தம்மை. ௩௩

(வேறு) காமினில்வதிதரு சூசியரைக் கவினுறுசாவே கிறியத்தா
யீமினிலுறைதரு மேமியரை இசைபெறு சேயீர்மலைகளிலே
தாமினிதுறைதரு மோரியரைத் தடவரைவருகுறு மெல்பாரு
ஞமிடனவிறு முடைதரவே அடுசமரத்திடை மோதினரே. ௩௪

இன்னணமனையரை யிகல்வென்றே எறுளொசி காதே செனகோதும்
என்மிசபாத்தினி லமலேக்கர் எய்தியகாடுக ளெவைகளையும்
வன்மையொடத்சத் சோன்தாமார் வைகிய எமோரியர்தமையும்
அன்னவர் வன்சமர் பெரிதாற்றி அஞ்சுற அழிவித்தனரன்றே. ௩௫

அன்னதுகாலயி லெழலுற்றே அடல்செழு சோதோ மெனுநகரின்
மன்னவன்முதலிய ஐவரெனும் வலிசெழு படையுடை மதிபர்களும்

பன்னிபவமர்புரி சித்திமாம் பதிசரி னிடையெதிர் மூடுகியநந்
துன்னலர் நனியுள மஞ்சுறவே தொக்கமொ டடுசமர் தொட்டனரே. ௩௬

மண்புரவூறிய பலசேணி மலிதருசித்தீ மெனவோதும்
நண்ணுறு படுசரி னிடையப்போ தெலாசகரிறைமுத லானவராம்
திண்ணியவரசர்கள் நால்வருமே செருவினை வென்றனர் சோதோமின்
அண்ணலுமவனொடு கோமோரா அதிபனுமிரிதந்தவண்வீழ்ந்தார். ௩௭

மற்றுளவவரு மூரிதந்தே வரைகளினோடி மறைந்துற்றார்
பற்றலா சோதோம கோமோராப் பதிகளிலுள்ளன பொருளெல்லாம்
உற்றுளவுண்டிக ளோடுகவர் வுற்றன ராரான்மகனென்றே
சொற்றுளலோத்தையுமன்னவனிற் றுன்றியநிதியையும்வௌவினரே. ௩௮

அப்பொழுதெஸ்கோ லானேரா மமோரியர்தங்கள் சகோதரனும்
ஒப்புரவுடனுறை மம்ரேயி னுடைசமபூமியி லபிராமென்
றிப்புவியோர்புக ழெபிரேயன்றின்பொடுவைகின னவனுக்குத்
தப்பினனோடிய வொருதூதன் சம்பவமுற்றையுமோதினனே. ௩௯

தன்றுணைவன்மக னப்பொழுதே தரியலர்கைப்படு செய்திசெவி
சென்றலுமேதன தில்லின்முனாட் செனித்துவளர்ந்துகை வந்தவரா
யொன்றியவீரர்க ளாமுந்நூற் றொருபதினெண்மரு டன்படைகொண்
டன்றெழலுற்று கடந்திட்டா னடையலர் மீதமர் பொருமாறே. ௪0

உடன்றெழுவேக முடன்தாண் மூரளவாகவ வொன்னலரைத்
தொடர்ந்தனனல்லிடை தன்படையைத் துன்றியகூறுகளாக வகுத்
தடர்ந்தெதிர்மோதின னுடைவுற்று ரனறமலேக்கெனு மணிநாட்டின்
இடந்திகழ் கோபா நகர்மட்டும் இறைஞ்சலரைத் தொடர்வுற்றனனே. ௪௧

பற்றலராமவர் வௌவியபற் பலபொருடம்மையு மீட்டவர்கை
யுற்றுளலோத்தையு மானவனுக் குடையனநிதியையு மொல்குமிடைச்
சிற்றடிமகளிரை மற்றுமவண் சிறைப்படலுற்ற சனத்தையுமீட்
டற்புதவலிகொடு மீளவுற்று னபிராமென்றுசொ லுரவோனே. ௪௨

(வேறு) தம்பெரு வலிகொண்டன்று சமர்க்களத் துடன்றுநின்ற
ஐம்பெரும் படைக்கைவேந்த ரமரழிந் துடைந்தன் றோட
வெம்புய வலிமைகாட்டி வென்றனன் யாவும்வல்ல
அம்பர னருள்பெற்றோனுக் கெச்செய லரியதம்மா. ௧

வெந்திறற்கெதருலாகோ மேர்முதல் வேந்தர் வன்மை
சிந்திடப் பொருதவீரன் திரும்புளிச் சோதோம் வேந்தன்
முந்தினன் சாவேயென்ன மொழிசம பூமியாகும்
அந்தநல் லிராச பள்ள மதனிடை யெதிர்கொள் வானே. ௨

தருந்திறற்சாலேம்வேந்தன் சருவவல்லவனைப்போற்றும்
மிகும்புகழ் மெல்கிசேதேக் காசாரி யனுமவ் வீரன்
புகுந்திடுநெறியிலப்பம் இரசமுங்கொண்டுபோந்து
தொகுஞ்செழுமாசியன்னான் மகிழ்வுறச் சொல்லினானே. ௩

திருவரு மாசிசெப்பிச் செய்யவனேகித் தெவகர்
வெருவரு மாபிராமே விண்மண்முற் றுடையனான
சருவவஸ் தினுக்குமேலாந் தற்பரன்றனாலே நீ
மருவரு மாசீர்வாதம் மருவிடக் கடவையென்றும். ௪௬

மருவலர் தமையுன்கையில் வழங்கிய அனைத்தின்மேலாம்
ஒருவனற் றதியேகொள்க வென்னவு மோதினானால்
அருவலி யதனாற்கொண்ட அனைத்தினுந் தசமபாகம்
திருவரு மபிராமந்தச் செய்யவற்றனக்கீந்தானே. ௪௭

துன்னல ருடற்றவஞ்சித் தோற்றோடி விழுந்த சோதோம்
மன்னவ னபிராமென்னும் வள்ளல்முன் மருவியைய
ஒன்னலர் கையில்மீட்ட பொருளெலா மொருங்குகொள்க
என்னது சனத்தையென்கைக் கீகவென் றிரந்துநின்றான். ௪௮

மற்றது கேட்ட வள்ளல் மன்னனை நோக்கிவேந்தே
துற்றுள வீரருண்ட செலவுநற் றுணையாயென்சார்
சுற்றிய வானேரெஸ்கோல் மம்ரேயுமென்னுஞ்சூரர்க்
குற்றுள கூறுநீக்கி யொழிந்தவை யொருங்கு கொள்வாய். ௪௯

செம்மலே அபிராந்தன்னைச் செல்வத்தனாக்கினேனென்
றம்மநீ கூறத்தக்க தானவோர் சரடேயேனும்
உம்மலர்ப் பதத்திற்சேர்த்து மொருகழல் வாரேயேனும்
இம்மிகுபொருளிலுள்ள ததனையு மெடுக்கி லேனே. ௫௰

எனவுனக் குறுதிகூறி இருவிசும் பவனிமுற்றுந்
தனதென வுடையனான சருவமாம் பொருட்கு மேலாம்
அனகனற் சமுகநேரென் அங்கையே றெடுத்தேனென்றே
மனதினி லழுக்கிலாதான் வழங்கின னென்பமன்னே. ௫௧

இன்னவை நிகழ்ந்தபின்ன ரிருந்தரி சனையிலாங்கே
பன்னுசீ ரபிராமேநீ பயப்படேல் நானுன்கையில்
மன்னுகே டகமுமுன்பால் மலிமுழுப் பலமுமாகும்
என்னவுந் தேவவாக்கொன் றனையவற் கெய்திற்றமமா. ௫௨

அப்பொழு தபிராந் தேவே அடியனேற் கெதனையீவை
ஒப்பறு மழலைமைந்த ருளனலேன் தமஸ்கூ ரானும்
இப்புக ழேலியேச ரல்லவோ என்வீட்டிற்குத்
தப்பறுதலைவனாகச் சார்ந்துளனாகுமன்றே. ௫௩

சந்ததி யென்னுஞ்செல்வந் தந்திலை யெனதிற்றோன்றி
வந்த அன்னியனேயென்கை மலிபொருட் குரியானென்றான்
எந்தையங் கவனைநோக்கி இவனன்றுன் னுதரத்தெய்தும்
மைந்தனா மவனேயுன்பின் வருசுதந் தரத்தனாவான். ௫௪

என்னவங் கியம்பிப்பின்ன ரிறையவன் வெளியிற்கூவி
அன்னவன் றன்னைநோக்கி அண்டத்தை நிமிர்ந்துபார்நீ

துன்னுதா ரகைகளைய யெண்ண முடியுமேற் றொகுத்துப்பாராய்
நின்னிரு மரபினோரு மிப்படி நிறைவ ரென்றான். ௧௫

அன்றதை விசுவாசித்தா னவனஃ தவற்கு நீதி
யென்றுளித் தேவனோக்கி யபிராமே யிக்கன்னாட்டை
உன்றனக் குதவவுன்னிக் கல்தேயர் நாட்டி னூரின்
நின்றுனை யழைத்த தேவன் யானென நிகழ்த்தினானே. ௧௬

அறைதிரு மொழியைக்கேட்டங் காபிராமென்னு மண்ணல்
இறைவனை நோக்கியைய இப்பெருஞ் செழுநன் னாட்டைக்
குறைவறு காணியாகக் கொள்ளுவே னென்னு மாற்றம்
நிறைவுற வெவ்வாறோர்வல் நிகழ்த்துக மேலோயென்றான். ௧௭

கருணையங் கடவுணோக்கிக் கடாரியு மோர்வெள்ளாடுந்
துருவையி னேறுமும்மூ வாட்டைய தொகுத்த வற்றோ
டொருதிரு மருவுங் காட்டுப் புறவமும் புறாக்குஞ் சொன்றும்
மருவுற வென்முன்னாகக் கொண்டுநீ வருகவென்றான். ௧௮

ஐயனன் றுரைத்தவாறே அவன்முன மனைத்து மீட்டி
மையமாப் பிளந்துதுண்டந் தனைமெதி ராகவைத்தான்
நொய்யபக் கிகளையன்னான் பிளந்திலன நோக்கிநின்ற
வெய்யகான் பறவையந்த உடல்கள்மேல் வீழ்ந்தமாதோ. ௧௯

ஓச்சின னபிராமன்ன புட்களை யொளிருஞ் சோதி
வீச்சினில் விளங்குஞ்செய்ய திவாகரன் மேலைத்திக்கில்
மாச்சிறைப் பட்டாலென்ன மறைந்தது தேவற்போற்றுட
நாச்செறி கீர்த்தியாற்கு நனிதுயில் கண்ணிற் றன்றே. ௨௦

அஞ்சுறத் தக்கதான காரிரு ளவனைமூடிற்
றெஞ்சலில் மகிமைமூர்த்தி யனையனை யினிதுநோக்கி
விஞ்சுமுன் மரபோர்நானூ றுண்டள வாகவேற்றார்
தஞ்சிறை யாயந்நாட்டிற் பணிசெய்து தளர்வரன்றே. ௨௧

நிச்சய மிதுவென்றோர்தி நின்குலத் தவரையாளும்
அச்செழு நாட்டினோரைத் தண்டிப்பே னதன்பின்செல்வ
மிச்சமுற் றத்தேயத்தை விட்டவ ரிங்குறுவார்
மெச்சுமுன் முன்னோர்பால்நீ சாந்தமா மேவுவாயே. ௨௨

செகத்தினிற் றீர்க்கவாயுள் சிறந்திறந் துன்மெய்யிம்மண்
ணகத்தினிற் சேமமாகு மண்கிள ரிந்நாட்டின்கண்
தகப்பெறு திரளாய் நான்காந் தலைமுறை யவரேமீள்வார்
இசத்தெமோ ரியர்செய்தீமை யின்னமு நிறைவின்றென்றான். ௨௩

மலிசெழுங் கிரணபானு மறைந்திருள் புகுந்தபின்னர்
பொலியழற் சுள்ளைநேரும் புகையுஞ்செஞ் சிகையுமோங்குஞ்
சொலிதழற் சுவாலையாங்கே தோற்றியன் றபிராமிட்ட
பலிகளி னூடுபுக்குப் படர்ந்துற நடந்ததம்மா. ௨௪

அத்தகு தினத்தில்மேலோ னாபிரா மென்னும் பேர்சால்
உத்தம னுடனேதக்க வோருடன் படிக்கைபண்ணி
மெத்தெழி லெகிப்துகாட்டின் நதிமுதல் விரிநீரத்தில்
நத்தெறி திரைநீ ரைப்பி ராத்தெனு நதிமட்டாக. ௬௫

மெத்தகே னியர்கள்வன்கே னிசியர்கத் மோனியோர்கள்
எத்தியர் பெரிசர்மிக்க விரெப்பாவ ரெமோரியோர்கள்
ஒத்தகா னானர்தங்க ளுடன்கிர கசரே பூசர்
இத்தகை யவர்வாழ்நாடுன் மரபுக்கே யீந்தேனென்ருன். ௬௬

இன்னண மிறைவன்கூறக் கேட்டனு மிதயத்துடே
பன்னரு மகிழ்ச்சியெய்திப் பரனடி மறவானுகி
மன்னிய விசுவாசத்தோ டிருந்தனன் மண்ணினெங்குந்
துன்னிய நரர்க்குள்மேலாய்ச் சொலத்தகுந் தூய்மையோனே ௬௭

இன்னவை நிகழ்ந்தநாளில் இன்மக வில்லாவன்னான்
பன்னியாஞ் சாராயென்பாள் பாங்கரி னுங்காகார்
என்னுமந் நாமம்பெற்ற எகிப்திய மடந்தையன்னாள்
சொன்னன பணிகளாற்றி யடிமையாய்த் தொக்காளன்றே ௬௮

அண்ணலைச் சாராய்நோக்கி அரும்பெறன் மகவுச்செல்வ
நண்ணவெம் பெருமானென்பால் நல்கில னுகாரென்னும்
பெண்ணினை மருவுவாயேல் அனையளாற் பிறங்குசீர்சால்
மண்ணினென் மரபுதோன்றி வளரவுங் கூடுமென்ருள். ௬௯

வளமலி கானானாட்டில் வந்துபத் தாண்டின்பின்னர்
உளமகிழ்ந் திவ்வாறன்னாள் ஓதலுமிசைந்தா னன்னான்
கிளருள முடனச்சாராய் கிளத்துசீ ராகாரென்னும்
மளமக ளனையில்லாளா வழங்கின ளென்பமாதோ. ௭௦

மல்லலந் திணிதோள்வள்ளல் மணமிசைந் தாகார்தன்னைப்
புல்லினன் வாழுநாளில் அனையவள் கருப்பம்பூத்தாள்
வல்லியங் கவடன்பாற்சூல் வாய்த்ததால் முதல்வியாகும்
மெல்லிய லானையற்ப மாவெண்ணி யேவினளே. ௭௧

ஆங்குமற் றதனாற்சாராய் அபிராமைப் பார்த்தென்மேலாந்
தீங்குநின் மேலுமாகுஞ் சேடியை நீதோய்தற்குன்
பாங்குறத் தாலுற்றேன்சூல் படைத்தன ளதனாலன்னாள்
ஈங்கெனை மதித்திலாளா யற்பமா வெண்ணுகின்ருள். ௭௨

நின்மல னெனக்குநிற்கு நியாயந்தீர்த் திடுகவென்ருள்
அன்னது கேட்டங்கன்னோன் அனையளை நோக்கியாகார்
நின்னுடை யடிமையாகும் நினக்குக்கீ ழானாளன்னாட்
குன்னுளப் படிநீசெய்ய லாமென வுரைத்திட்டானே. ௭௩

அனையது கேட்டுச்சாரா யவளையாங் கொடுக்கலுற்ருள்
புனையிழை யவண்விட்டோடிப் போயின்ன் வனத்தினூடே

கனையெழிற் சூருக்கேகுங் கதிமருங் கூற்றுக்கூவர்
தனையரு குற்றாளாங்கே தற்பரன் தூதன்கண்டான். ௭௪

கண்டெதிர் நின்றதூதன் காரிகை தன்னைநோக்கி
ஒண்டொடி யெங்ஙனின்றிங் குற்றனை நீபோமூரே
தெண்டக மொழிகவென்றா னெனதுநா யகியாஞ்சாராய்
கண்டனக் கொளித்தீண் டுற்றே னெனவவள் கழறினளே. ௭௫

இறையவன் றூதனந்த வந்திழை யாளைநோக்கிப்
பிறைநுதல் மடந்தாய் நீநின் பெருமாட்டி பான்மீண்டெய்தி
முறைதவ றூதுவாழ்க மொழியுமுன் மரபைச்சால
நிறைவுறப் புரிவேனென்ன தளவற நெடிதுமல்கும். ௭௬

மாதுநீ கேட்டிதேவன் மல்குநின் புலம்பறன்னைக்
காதுறக் கேட்டவாற்றாற் கழிமகிழ் தூங்கப்பாரின்
மீதுநீ யுதவுமந்த வியன்மகற் கிசுமவேலென்
றோதுசீர் பெறவேநின்ற ஒருபெய ருதவுவாயே. ௭௭

அம்மகன் றீதுளோனா யமர்ந்திடு மவன்கையார்க்குந்
தெம்முறை யாம்யார்கையுந் அவற்குத்தெம் முறையேயாகும்
செம்முறைத் துணைவர்யார்க்கும் எதிர்ப்புறஞ் செறியும்வாழ்வென்
றிம்முறை யிறைவன்றூத னனையவட் கிசைத்தானன்றே. ௭௮

என்னைக்கண் டவரைப்பின்னே யானுங்கண் டுளேனன்றோவென்
றன்னவ ளுரைத்துத்தன்னோ டவ்வுழி பேசுந்தேவற்
கென்னைக்கண் டுற்றதேவ னெனுமொரு திருநாமத்தை
மின்னைக்கண் டனையபாவை யன்பினால் விளம்பிநின்றாள். ௭௯

ஆதலாற் சுயம்புவாகி எனைக்காண்கின் றவருமாகுந்
நீதறு தேவன்கூப மெனும்பொருள் சிறந்துதோன்ற
மேதகு காதேசோடு பேரேத்தின் நடுவண்மேவுற்
றோதிடும் பெயர் லாகாய் ரோயியென் றுறுமக்கூவம். ௮0

மற்றிவை நிகழ்ந்தபின்னர் மடந்தையுங் கருப்பமுற்றிப்
பெற்றனள் குமரன்றன்னைப் பிதாவுமங் கிசுமவேலென்
றுற்றுள நாமமீந்தா னுவன்மக வுதித்தபோது
துற்றுள வகவையெண்பத் தாறெனத் துலங்கினானே ௮௧

சொற்பெறு மகவைதொண்ணூற் றொன்பதி லபிராமுக்காங்
கற்புதன் தோன்றியானே அனைத்துக்கும் வல்ல தேவன்
பொற்புறத் திடன்கொண் டென்முன் ஒழுகிச்சற் குணமேபூண்க
நிற்குமென் னுடன்படிக்கை நமக்கிடை நேரவைப்பேன். ௮௨

பெருந்திர ளாகவுன்னைப் பெருகச்செய் திடுவலென்றான்
வருந்திற லபிராங்கேட்டு வணக்கமாத் திருமுன வீழ்ந்தான்
[illegible]ம்பவும் பலசாதிக்குப் பிதாவெனத் திகழ்கையென்றே
பொருந்திய வுடன்படிக்கை நினக்கியான் பொருந்தவைத்தேன். ௮௩

மிகும்பல சாதித்தந்தை யாவுனை விதித்தவாற்றாற்
றகும்பெய ரினியுனக்கிங் காபிர காமாந்தக்க
சுருந்திரு விளங்கும்வைப்பில் கனியுனை விருத்தியாக்கித்
தொகும்பல சாதியுன்பாற் றோன்றவும் புரிவலன்றே. ௮௪

மன்னவர் தாமுமுனறன் மரபினி லுதயமாவார்
நின்னுட னின்பினாகு நின்குலத்தவர்க்குந் தேவாய்
மன்னுவ லென்னும்வாக்கை யெனக்குமுன் றனக்குமற்றுன்
பின்னரெத் தலைமுறைக்கும் நிதநிலை பெறச்செய்வேனே. ௮௫

இதரனே யாய்நீ தங்கு மிக்கானான் முழுதுமேயுன
னுதரமூ டுதித்துத்தோன்று முனதுசந் ததியார்க்கெல்லாம்
நிதமுறு காணியாக நேர்விப்பே னகானாட்டெல்லாம்
இதமுறு தேவனாகி யென்றுமியா னிருப்பன்மாதோ. ௮௬

நிகழ்த்துடன் படிக்கைநீயும் வழிவழி நின்பிற்றோன்றும்
தகப்பெறு மரபினோருந் தவறறக் கைக்கொள்வீரால்
இகத்தினும் பாலதாகு மெந்தவாண் மகவென்றாலுஞ்
செகத்திலக் கிரமாஞ்சர்ம மாமிசஞ் சிதைத்தல்வேண்டும். ௮௭

இன்னதே யெனக்குமீண்டு நுமக்குமெய் துடன்படிக்கை
தன்னதா மடையாளந்தான தலைமுறை தோறுநும்மில்
மன்னிய சிறாருங்கையில் வான்பொருள் கொடுத்துக்கொள்ளும்
அன்னிய மகாருமாகு மனைவர்க்கும் விதியிதாமே. ௮௮

திருத்தகு மைந்தன்பாரிற் செநநமா யெட்டாநாளில்
விருத்தசே தனத்தையெய்த றவறற வேண்டற்பாற்றாம்
கருத்தற வெய்துறானேற் கற்பனை கடக்குமாற்றாற்
பெருத்ததன் குலத்தினின்றும் பிரிப்புறக் கடவனன்றே. ௮௯

(வேறு) உரைக்குஞ்சொ லின்னமுங்கே ளுன்றேவி நாமமிந்நாள்
வரைகுஞ்சா ராயென்று வழங்கியதா லினியவட்குத்
தரைக்கண்பேர் சாராளத் தையலையா சீர்வதித்தே
இரைக்குஞ்சொன் மழலைமகன் யானவளா லுனக்கருள்வேன். ௯0

சாயாத சீருடைய தையலவள் சாதிகட்குத்
தாயாக மேவவுமித் தரைவேந்த ரவள்வழியா
யேயாங்கு தோன்றவுமா சீர்வதிப்பே னெனவிளங்கும்
மாயாத பெருமகிமை மன்னுபரன் வகுத்தானே. ௯௧

உரைத்தமொழி கேட்டன்னா னோங்குபெரு வணக்கமுடன்
தரைக்கணிறை முன்வீழ்ந்து தானகைத்து நூற்றாண்டு
வரைக்குமுதிர்ந் தோனபெறுமோ மகவகவை தொண்ணூறாய்
நரைக்குமுது சாராய்சேய் நல்குவளோ வெனநினைத்தான். ௯௨

எண்ணியிவ்வா றாபிரகாமெம்பெருமான்றனைநோக்கி
அண்ணலே யீண்டிசும வேலென்ன அறைதரும்போர்

நண்ணியுறு கின்றவொரு நன்மைந்த னுளனேயிம்
மண்ணிலவன் வாழ்வெய்த வேண்டுமே யெனவருத்தான். ௧௩

இன்னமொழி யாபிரகா மிசைத்தபொழு திறைநோக்கி
நின்னுயர்கா தலிசாரா ளினக்குமக வொன்றீவனள்
அன்னவனை யீசாக்கென் றழைப்பையென துடன்படிக்கை
தன்னையன வரதமவன் றனக்கும் சந்ததிக்குமுய்ப்பேன். ௧௪

ஈண்டுதரும் பத்தியுட னிசுமவே லினைக்குறித்து
வேண்டுதல்செய் தனைகேட்டேன் விளம்பக்கே ளன்னவனை
மாண்டகவா சீர்வதித்து மற்றன்னு னமிசத்தழைத்து
நீண்டபுவி யினிற்பெருகி வாழ்வெய்த நேருவிப்பேன். ௧௫

நேராய குணமுடையோய் நிகழ்த்தவின்னுங் கேட்பாய்நீ
ஈராறு பிரபுக்க டம்மையவ னினிதளிப்பான்
ஓராயன் னவன்வழியா யொருபெரிய சாதியினைச்
சீராரம் புவியிடத்தே சிறந்திருக்கச் செய்தருள்வேன். ௧௬

மன்னுமுடன் படிக்கைதனை வருகின்ற வர்ச்சரத்தில்
இன்னதொரு காலத்துன் னில்லவளீன றிடுமீசாக்
கென்னுமக னிடத்தினில்யா னேற்படுத்து வேனென்று
அன்னவன்றன் பாலினின்றே அமலனெழுந் தருளினனே. ௧௭

இன்னதன்பி னாபிரகா மிசுமவே லுடன்றன்னிற்
றன்னிலுதித் துள்ளசிறூர் தமக்குள்ளும் விலைக்குக்கொண்
டன்னவர்க டமக்குள்ளும் ஆண்மக்க ளெவர்க்குமையன்
பன்னியசொற் படிவிருத்த சேதனத்தைப் பண்ணினனே. ௧௮

மேதகவங் காபிரகாம் விருத்தசே தனம்பெறும்போ
தோதகவை தொண்ணூற்றொ டொன்பஃதாங் கவனீன்ற
காதலற்குப் பதின்மூன்றாங் கடவுளருள் மொழிப்படியே
பேதமற விருவோரு மொருதினத்திற் பெற்றனரே. ௧௯

சமமேவு வலிபடைத்துக் காவலரோ டாகவத்தில்
அமரேறி யிகல்கடிந்த ஆபிரகா முய்வுபெறச்
சமமேது மற்றபெருந் தற்பரன்மீ ளவுமவற்கு
மமரேயின் சமபூமி தனிற்காட்சி வழங்கினனே. ௨௦

ஆங்கொருநாட் டான்வதியு மகன்பாடி வாசலிலே
ஓங்குபுக ழாபிரகா முட்டணமாம் போதிருந்து
தேங்கமல மனையவிழி திறந்தெதிரே நோக்குதலும்
பாங்குறவா டவர்மூவர் நிற்கவெதிர் பார்த்தானே. ௨௧

நாடியபே ரன்பொடுமுன் னண்ணினரைக் காண்டலுமே
பாடியசன் வாயினின்று பத்தியுட னாபிரகாம்
ஓடினில னுறவணங்கி யுயர்வுடையீ ரெனக்கருள
நீடியஅன் புறிலென்னை நீங்கற்க வென்றிரந்தான் ௨௨

வருமெளியேன் புனல்கொண்டு வருவலடி மலர்விளக்கித்
தருநிழலி லிளைப்பாறித் தங்குவீ ரிக்கடையி
னொருதுணிநும் பசிதணிய வுண்டதன்பின் போதருவீர்
பொருவரியீ ரிதற்காவே போந்தீரென் றாலென்றான் ௪௦௩

நன்றெனவ னவரிசைந்து நவின்றபடி செய்கவென
வொன்றியவன் புடனவனு மோடித்தன் பாளயத்தில்
மின்றனையங் கெதிர்நோக்கி மெல்லிடிமூ னாழிகொண்டு
சென்றதனைப் பிசைந்தடைகள் செய்திடுக விரைவிலென்றான் ௪௦௪

இருநிரையு ளோடிநல்ல இளங்கன்றொன் றினைப்பிடித்து
வருபணிசேட் பவன்கையி லடுதியென வகுத்தினான்
விரைவினிலட் டவனீந்தான் வெண்ணெய்பா லத்தடியூண்
தருநிழலி லவர்முனிட்டுத் தான்மருங்கி னின்றானே. ௪௦௫

உண்டனரங் கவர்களவ்வா றுண்ணுகின்ற போதத்தே
திண்டிறலா பிரகாமாஞ் செய்யவனை நோக்கிநின்னில்
லொண்டொடியாண் டையளென்றார் பாளயத்தினுள்ளென்றான்
மண்டருளா லிறைவனவர் மகிழ்வுறவாய் மலர்ந்தானே. ௪௦௬

நின்மலன்வாய் மலர்ந்தருளி நினதுமனைக் கிழத்தியெனும்
பொன்மருவு சாராள்பாற் புதல்வனுதித் திடும்போதில்
உன்மருங்கி னிச்சயமா வுறுவலென்றான் வாயிலிலே
பின்மருவி நின்றவந்தப் பெண்ணரசுங் கேட்டுநின்றாள். ௪௦௭

செய்யவர்க ளிருவோருந் தீர்க்காயு ளுடையவராய்
வையகத்தில் முதுமைபெற்று வைகினர்கள் சாராளாந்
தையலுக்கில் விலக்கமுமே தணந்தாயிற் றன்னதினால்
பையநகைத் துளத்தினுடுஞ் சின்மாற்றம் பகர்ந்தனளே. ௪௦௮

விருத்தையா யுறைவேற்கு மேவுமின்பம் விளைந்திடுமோ
விருத்தனே யெங்கொழுந னென்றனளால் விமலனப்போ
தருத்திபெறு மவள்மகிணற் கரிவைதான் முதியவளா
யிருத்தலினால் மகப்பெறுவ தெங்ஙனென நகைப்பதென்னே. ௪௦௯

சிற்பரனு வியற்றுவதற் கரிதான செயலுமுண்டோ
பொற்பமரு முன்மனையாள் பூங்கருப்பத் தினிற்குமரன்
உற்பவமாம் போதளவில் உரைத்தபடி யீண்டுறுவல்
நற்புதல்வன் றனைச்சாராள் நல்குவளப் பொழுதென்றான். ௪௧௦

மெச்சுபெருந் தகைசான்ற மேலவன்சொற் கேட்டலுமே
அச்சமுற்று யானகைத்த தில்லையென்று ளாயிழையாள்
கைச்சதவ றுரைக்கின்றாய் காரிகைநீ நகைத்தனையென்
றச்சமுறும் பெருஞான முடையபிரா னுரைத்தகன்றான். ௪௧௧

மூதோர்க ளாகியவம் மூவர்களு மெழுந்துபின்பு
சோதோமின் திசைநோக்கத் தொடர்ந்துவழி விட்டனுப்பத்

தீசோருஞ் சிந்தையில்லாச் செவ்வியனுஞ் சென்றனனப்
போதோவில் பெருங்கருணைப் புங்கவனல் லருள்கூர்ந்தே. ௧௧௨

யானியற்றுங் காரியத்தை யிவர்க்குமறைத் திடலாமோ
மானிலத்தில் மகத்தான வலிமிக்குமோர் பெருஞ்சாதி
கோனிவனபா னின்றுவரு மிவன்வழியாக் குவலயத்தின்
மேனிலவு சாதியெல்லாம் மிகுமாசி மேவுவவே. ௧௧௩

தனக்குதவு வாக்கையையன் தவறாது நிறைவேற்ற
மனக்கொடுபின் சந்ததிக்கும் மனையினர்க்கு மாபிரகாம்
நினைத்தபடி பணிப்பவவர் நீதிநியா யம்புரிந்து
தனிப்பரன்றன் வழிகாத்து நடப்பரெனல் தனையறிவேன். ௧௧௪

என்றுரைத்து மீளவுமங் கிறைசோதோங் கோமோரா
நின்றுவரு மோலமிக நெடிதாகு மவற்றினுள்ள
துன்றுபெரும் பாவமிகக் கொடிதநனுற் றொடர்ந்தங்கு
சென்றுபுருந் தனையசெயல் பார்ப்பலென்றுஞ் செப்பினனே. ௧௧௫

சொன்னபொழு தப்புருடர் சோதோமின் றிசைநோக்கி
முன்னடந்தா ராபிரகாம் முழுமுதலின் முன்புநின்றான்
அன்னபரனருகுநண்ணி யையனே தீயருடன்
மன்னியநல் லோர்களையு மழிப்பையோ வகுப்பாயே. ௧௧௬

ஐம்பதுபேர் சன்மார்க்கர் அங்குளரே லவர்க்காவவ்
வெம்பதியை யழியாமல் விட்டுவிட லாகாதோ
வம்புரி தீயருக்காத் தூயரையும் வதைத்திடுதல்
எம்பெருமான் றூரமதா யிருக்குமது நினக்காமே. ௧௧௭

சன்மார்க்க ராளோர்கள் தங்களுக்குச் சமமாகத்
துன்மார்க்கர் தமைநடத்தல் தூரமுனக் கேயாகும்
சென்மார்க்க முழுப்புவிக்குஞ் சிறந்தநியா யாதிபதி
தன்மார்க்க முழுநீதி தவறாக விடுங்கொலென்றான். ௧௧௮

செய்யவனப் படிவேண்டத் தேவனவன் றனைநோக்கித்
துய்யவர்க ளைம்பதின்மர் தலக்கமுறக் காணிலந்த
வெய்யதலத் தவரையெல்லாம் மேவுமவர் தமக்காக
வையவழி யாதுய்ய விடுவலென நவின்றானே. ௧௧௯

ஐயவளி யேன்துகளுஞ் சாம்பருமொப் பாமெனினுந்
துய்யவனே நின்னுடனே பேசுதற்குத் துணிந்துற்றேன்
செய்யவரைம் பதின்மர்தொகைக் கைவர்குன்றிற் செப்பியவந்
கொய்யகுறைக் கனைவரையும் நூறுதனுங் கருத்தாமோ. ௧௨0

சாற்றுகவென் றவன்வினவத் தற்பரனு மெதிர்நோக்கி
நாற்பதின்ம ருடனைவர் நல்லோரை யந்நகரின்
பாற்பொருந்தக் கண்டக்காற் பற்றுளவன் னவர்பொருட்டாச்
சீற்றமுட னனைவரையுஞ் சிதையாதே விடுவலென்றான். ௧௨௧

ஐயெண்மர் நல்லவர்க ளங்கிருக்கக் காண்பதுண்டேல்
வெய்யவர்க்கா வவர்களையும் வீப்பையோ வெனவினவ
ஐயெண்மர் நல்லவரை யங்குகண்டால் அனைவரையும்
மையச்செற் றிடுமாறு நான்செய்வ தில்லையென்றான். ௧௨௨

ஒப்பறுமெய் யற்புதனு மொருவனே கோபமுறேல்
முப்பதுபே ரங்கிருக்கக் கண்டாலோ மொழிகென
அப்பதியில் முப்பதுநல் லவரிருக்கக் காண்பதுண்டேல்
தப்பிலர்க்கா வனைவரையுஞ் சங்கரியே னென்றுரைத்தான். ௧௨௩

ஒருபொருளே யினுமடியே னுன்னுடன்பே சத்துணிந்தேன்
இருபதுநல் லோரையங்கே கண்டாலோ வெனவினவத்
திருமருவு மிருபதுபேர் திகழினவர் முகத்துக்காப்
பெருநகரைத் தொலைப்பதில்லை யென்றனனெம் பெருமானே. ௧௨௪

எங்கோமான் கோபமுறேல் இன்னுமொருக் காலினவ்
அங்கேநல் லவர்பதின்மர் அமர்ந்தாலோ வறைதியென
நங்காத லுடையபத்து நல்லோரை யங்குகண்டால்
உங்காருந் துயரமுற ஒருங்கழியே னென்றானே. ௧௨௫

ஆசில்பெருந் தனிமுதல்வ னப்பொழுதங் கவ்வாறு
பேசிமுடிந் ததன்பின்பத் தலத்தைவிட்டுப் பெயர்ந்தகன்றான்
மாசில்பரன் திருக்கருணை வாரிபடிந் தாபிரகாம்
தேசிலகு தன்பாடி மருவுதற்குத் திரும்பினனே. ௧௨௬

(வேறு) மாலையுறுங் காலையினில் வானவன்றன் றூதர் வந்திருவர் சோ
தோமில் மருவினர்க ளந்த
வேலையினி லந்நகர வாயிலிடை லோத்து மேவியிருந் தனன்கண்டு தாவி
யெதிர் கொண்டு
காலையெதி ருறநோக்கித் தரைமட்டுங் குனிந்து களிதூங்கப் பணிந்தெழு
ந்து பெரியீரென் சிற்றிற்
பாலையடைந் தடிவிளக்கி யிராத்தங்கி நாளைப் படர்தருக வுதயமதி லென
ப்பரவி னின்றான். ௧௨௭

அங்கவர்க ளின்மனையி லணுகுதற்கு விழையோம் அன்முழுதும் யாங்க
ளிர்த வீதியினி லகத்தே
தங்குவமென் றோதினர்கள் சாலவவன் வருடித் தாழ்ந்திரந்து வேண்டவ
வர் சம்மதித்துப் புகுந்தார்
பொங்குபுளிப் பற்றவப்பம் புசித்தனர்க டுயில்கண் பொருந்துமுன மி
ளைஞர்முதல் முதியோர்கள் வரைக்கும்
எங்குமந்த நகரிலுள்ள யாருமெந்தத் திக்கும் இருந்துவந்து லோத்துறையு
மில்லைவளை வுற்றார். ௧௨௮

இவ்வாறு வளைந்தவர்க ளிலோத்தையெதிர் கூவி இன்றிரவி னின்னில்
வந்திடுமனித ரெங்கே
அவ்வோர்க டமையாங்க ளறிந்துகொள நம்பால் அழைத்துவெளி யினிற்
கொண்டு வருகவென வறைந்தார்

ஒவ்வாத வாறவர்க ளோதுவதை யுணர்ந்தே உத்தமனங் கவர்பாலில் வெ
ளியில்வரி லுற்றுச்
செவ்வோர்க டமைப்புரக்குஞ் சிந்தையின னதனுற் செறியுமனைக் கதவ
மதைச் சிக்கவடைத் திட்டான. க௨௯

அடைத்துநின்று துணைவீர்கள் ஆ! அன்ன செய்கை அவர்களுக்குப் புரி
யற்க சணவர்முக மறியாப்
படைக்கணிளங் கன்னியிரு பாலகிக ளீண்டென் பாலிலுள ரவர்களையு
ம் பார்வெளியில் விடுவேன்
இடைத்தவுட னவர்களுக்கு விழைந்தபடி செய்வீர் கேண்மினிந்த மனித
ரென்னிற் ருழ்வாரக் கிழென
புடைக்கணடை வுற்றவர்கள் அதனாலன் னவர்க்குப் புரியற்க வொருதீ
ங்கு மெனப்போற்றி நின்ருன். க௩0

போற்றியசொற் கேட்டவுட னவர்வெகுண்டு போநீ புக்கொதுங்கு மந்நி
யனோ போந்தெமக்கு நீதி
சாற்றுமதிபதியாகு மவர்களிலுந் தீமை சாலவுனக் கேயாக்க டருவமெ
ன நெருக்கித்
தோற்றுகின்ற வேகமொடு தொடர்ந்துகத வுடைக்கத் தொடங்கினர்க ளு
ள்ளிருந்த தூயர்கையை நீட்டி
ஆற்றுபுக முடையவனை யகத்திழுத்துக் கதவம் அடைத்தனைவ ரம்பகமு
ங் குருடாக்கினரே. க௩க

ஈங்கிவர்கண் மனம்போலக் குருடாயில்வாயி லினைத்தேடி யிளைத்தார்க
ளுலோத்தினுக்கிம் மேலோர்
தீங்குமிகு மித்தலத்தி னேலமிறை திருமுன் சென்றுறலி னழிக்கவென
ச் செப்பியெமை விடுத்தான்
பாங்குறவிங் குனக்குரியர் யாருமுளர் கொல்லோ பகருமரு மக்களொடு
பாலகிகள் மைந்தர்
ஓங்குபொருள் மற்றுளவு மொருங்குகொண்டிப் பொழுதே ஓடியகன் றி
டுகவென உரைத்தனர்க ளன்றே. க௩௨

பகருமொழி கேட்டவுட னவனெழுந்து போய்த்தன் பாலகிகட் குரியோ
ரைப் பார்த்தமலன் முனிந்திந்
நகரமதை யழிக்குமிங்கு நண்ணாது பிறிதோர் நாட்டினிடை நண்ணியுய்
ய நாடியெழு மென்ருன்
புகராறுமுத் தமனன்று புகன்றமொழி யவாகளுப புனமையுறு பரிகாசம்
போற்றுன்று மாற்றுல்
நிகராறுமெம் பெருமான்றன் முனிவத்னி னீரும் கெடியவர்கள் போல்மு
டிய நின்றனர் நம்பாதே. க௩௩

ஓங்குபவ லுதிப்பளவி லிறையவன்றன் றூதர் உலோத்தைமுக நோக்கியி
ந்த உறுநகர்க்கு வருமித்
தீங்குமிகு தண்டனைக்குத் தப்பியுய்யு மாறுன் தேவியையும் புத்திரிக ளி
ருவரையுஞ் சேரப்

பாக்கில்வரு மாறழைத்துப் படர்கவென்று துரிதப் படுத்தினர்க ளவனுங்
கு பாணித்து நின்றான்
தேங்குபா ளுரளுனி னுலவர்கடம்மைச் செங்கைபிடித்தத்தூதர் கர்ப்புற
ம்பர் சேர்த்தார். ௧௩௪

முன்னிட்டு வெளியிலவர் முடுகுதலும் லோத்தின் முகமதனை நோக்கி
யையன் அகமருவுமளியால்
உன்னிட்ட முறுமனைவி யொடுமக்க ளோடும் உயிர்பிழைக்கு மாறுவிரை
ந் தோடியுய்வு பெறுநீ
பின்னிட்டு நோக்கலிந்தச் சமபூமி தனிலெப் பேரிடத்துந் தங்கன்மலைக்
கோடியங்கு பிழைநீ
பன்னிட்ட மொழிகடந்து நிற்பையெனில் நாசப் படுவையென வப்பொ
ழுது பற்றினெடு பகர்ந்தான். ௧௩௫

பகருமொழி கேட்டவனெப் பற்றபெருந் தகைசால் பண்ணவனைப்பார்
த்தாவப் படியல்ல விறையே
புகரில்விழி யருளுதவி யென்னுவி புரந்து போற்றுதிருக் கருணையையெ
ன் மேற்பெருகப் புரிந்தாய்
சிகரகிரி தனக்கோட்டஞ் செலற்கரிது நாசஞ் சிலவுறவு மெனதாவி சிதை
தரவுங் கூடும்
நகரமொரு சிறியதயல் நண்ணுகின்ற தங்கே நாளேடிப் பிழைத்திருக்க ந
ல்குவிடை யென்றான். ௧௩௬

இங்கவனிவ் வாறுரைக்க இறைநோக்கி யவனை இன்றிந்தக்காரியத்து மு
ன்முகத்தைப் பார்த்தேன்
அங்கணுகி நீசேரு மளவுமொன்றுஞ் செய்யேன் அவ்விடத்துக் கோடியு
யி ருய்கவென வறைந்தான்
துங்கமுறு காரணமற் றிதனுலத் தொல்லூர் சோவாரென் றொருநாமஞ் சூ
டியது லோத்து
புங்கவன்சொற் படியோடிப் புகுந்திடுமவ் வளவிற் பூருவதிக் கினிற்கிர
ண சூரியனும் பொலிந்தான். ௧௩௭

சூதாரு முளத்தினொடு தீதாருஞ்செயலே தொடங்கிநிதம் புரிந்துதனக் க
டங்கிலவர் மேலே
மாதோஷில் பெருந்தகைநின் மலமூர்த்தி கோபம் மருவமிகச் சிவந்தபெ
ருந் திருநயன மெனவுஞ்
சோதோமை முதலான துன்னகர்கள் முழுதுஞ் சுடுவதற்கு வானினின்று
தோன்றுதழ லெனவும்
மீதோவி லிருள்கடந்த வெங்கிரண சோதி விண்ணின்மணி மண்ணொளிர
மேவியதுமன்றே. ௧௩௮

வந்துகதி ரெழுந்ததன்பின் வல்லபரன் சோதோம் வயங்குகொமா ராவெ
ன்ன வழங்குபதி களின்மேற்
கந்தகமு மக்கினியும் வானினின்று பொழியக் கற்பித்தந் நகரனைத்துஞ்
சமபூமி முழுதும்

அந்தகக ரத்தவர்கள் அனைவோரு கிலமேல் அங்குள்ள பயிரனைத்து மழிக்
தொழியக் கவிழ்த்தான்
முந்துபரம் பொருளை நெஞ்சில் முன்னுதன்னகற்கு முகெலர்களாகியவர்
யாவர்முடியாதார். கஙகூ

பின்னுக நோக்கலெனப் பெருமுதல்வன் றனக்குப் பேசியசொன் மதி
யாமற் பொருளாசை பெரிதே
முன்னுக நின்றுதள்ள லோத்தின்பின் முடுகும் மொய்த்தகுழன் முகிலரி
கொள் மைத்தவிழி மனையாள்
கன்னுக முறப்புகையு மனற்சிகையு நண்ணி நகரழியு மதைத்திரும்பி நா
டியெதிர் பார்த்துத்
தன்னுக முழுதுமுப்புத் தறியாகிமேலாந் தக்கபரன் வல்லமையைத் தான்
விளக்கி னுளே. கசo

செய்யபக லுதித்ததன்பின் ஆபிரகாந் தேவின் திருமுன்பு தானின்ற இட
மதனிற் சேர்ந்து
வெய்யநக ரங்களையு மேயசமனுன வியன்பூமி முழுவதையும் மேல்நோக்
கிப் பார்த்தே
மொய்யழல்கொள் சுள்ளையொத்து மூடுபுகை கண்டான் முதல்வனவன்
றனைநினைந்து லோத்தைமுது நகர்கள்
நையவழித் திடுமாங்க ணழியாது விலக்கி நவையறவுய்த் திடவனுப்பி
நனிகருணை செய்தான். கசக

(வேறு) புகாறுலோத்து புகுந்தடைவுற்ற
நகரடைதற்குள நண்ணுபயத்தால்
பகரிருபாலகி மாரொடுபாழிச்
சிகரநெடுங்கிரி சேர்ந்தனனன்றே. கசஉ

மால்வரைதன்னில் மரீஇயொருமுளையி
பாலவர்வாழ்வு பயின்றிடுபோழ்தில்
சால்புறமேவிய லோத்தருடௌவை
வேல்விழிமேவினை யாளைவினித்தே. கசங

எந்தையுமோமுதி யானிகமீதே
மூந்துமுறைப்படி யெம்மைமுயங்க
வந்திடுமாறொரு மகிணருமில்லை
எந்தவிதத்துறு மெய்மரபினியே. கசச

இதமுறநங்குல மெய்நிதற்கே
மதுவினையெந்தை மயங்குறவூட்டிப்
புதுமணமெய்துபு புவனியிலவனுல்
இதமுறுமோர்வகை செய்குவமென்னு. கசரு

அன்றிரவின்கண் ணதிசகிராட்சந்
தன்றியவம்மது தய்த்திடவூட்டிச்
சென்றிணைவுற்றனள் சேர்ந்ததுமுதலா
வொன்றுமுணர்ந்தில னுண்மறவில்லான். கசசு

பிற்றையகாளவன் பின்னையைநீயும்
இற்றையகங்குலி னின்மதிஞூட்டி
மற்றிவணெக்கையை மருவுகவென்றே
சொற்றனனன்னவள் சொற்குளமொத்தே. கசஎ

தாதையொடன்றவன் சயனமணைந்தாள்
பேதையணைந்தது மற்றுளபிறவும்
மூதுணர்வோனுணர் வுற்றிலன்மொழியும்
கோதையர்கற்கரு வயினிடைகொண்டார். கசஅ

மூத்தவளீன்றிடு மாமகன்மோவாப்
எத்துறுமோவா பியர்மரபுக்கு
மாத்தகுசீர்முத லாமவன்மரபோர்
கோத்திரைமீது குலாவுகரின்னும் கசகூ

பின்னவளாங்கொரு பிள்ளையைநல்கிப்
பென்னமியென்றொரு பேரிணையிட்டாள்
அன்னவனம்மோ னியர்குலமுதலாம்
இன்னமுமக்குல மெய்துறுமன்றே. கரு0

(வேறு) அன்றது போனபி னாபிர காமவ் வகனின்றே
தென்றிசை போய்விரி காதே சுடனெதிர் செறிசூராம்
பொன்றிக ளூடெக டம்மிடை வைகல் புரிந்தானல்
சென்றுயர் கேரார் நகரினு மாங்கு செறிந்துற்றான். கருக

ஆதர வோடுறை தன்மனை யாடனை யங்கனவன்
மேதகு பின்னவ ளென்றதனாலவ் வியனாட்டார்
ஆதிப னாகிய போர்கெழு வன்றிற லபிமேலேக்
கோதுயர் மின்னர சைத்தன தில்லிடை யுறுவித்தான். கருஉ

அன்றுறு கங்கு லிடைக்கன விற்பா னபிமேலேக்
கென்றுள பூபதி யின்பதி யெய்தியி வேந்திழைநிற்
கொன்றிடு மேதொரு வற்கிவ ளூற்ற குடும்பினியா
மென்றன னாதலி னன்னவளைத்தொட வெண்ணிலனாய். கருங

ஆதிப னமவ னப்பொழு தையனை யவனோக்கி
நீதியி னாலுயர் சாதியை மாய்க்க நினைப்பாயோ
போதிவ டங்கையெ னாவிவ னிங்குப் புகன்றிலனோ
ஓதில னோவிவள் முன்னவ னென்ன வுவன்றனையே கருச

துய்ய மனங்கொடு சுத்தமுறுங்கர மதனோடும்
செய்துள தென்றன னவனிறையோனிது தேர்வலியான்
வெய்ய பவத்தை யெனக்கு விரோத மிகச்செய்யா
துய்ய விடத்தடை செய்தவ ளைத்தொட வொட்டிலனே. கருரு

(வேறு) கேருமானுடன் றேவியைநீவிடு
சேருலாமவன் தீர்க்கதரிசியே

பேருலாமுனக் காகப்பிரார்த்திப்பான்
பாருணீடு பரிவொடுமுய்வையே. ௧௫௬

மின்னையின்று விடாயெனில் நீயுமற்
றுன்னையுற்றுள யாருமொருங்குறத்
துன்னுமாவி தொலைந்திடுவீரறி
என்னுமாறு மிசைத்தனனென்பவே. ௧௫௭

விடியற்போதபி மேலெக்கெழுந்துசொற்
படிசெயெந்தப் பணிவிடைகாரரும்
கடிதினெய்த வழைத்துக்களறினன்
அடியராமவ் வனைவருமஞ்சினர். ௧௫௮

அன்னபோதவ னபிரகாமைக்கூஉய்
என்னிதிங்ங னெனக்குமரசுக்கும்
துன்னுபாவந் தொடரச்செயவுனக்
குன்னுதீமை யெதனையுஞற்றினேன். ௧௫௯

செயத்தகாதன செய்தனையிப்படி
இயற்றுதற்குறு காரணம் யாதெனப்
பயக்குந்தெய்வ பயமின்றிங் கென்னிலாள்
மயக்கிலென்னை வதைப்பரென்றஞ்சினேன் ௧௬௦

தையலாளென் சகோதரியென்றல்மெய்
ஐயனொன்றிரு வோருக்குமன்னவே
றுய்யுமாறு மணஞ்செய்துவந்துளேன்
செய்யநாயகி யாயெனைச் சேர்ந்துளாள். ௧௬௧

அங்கணெந்தை யகன்றழைத்தெனை
இங்குமங்கு மெழுந்தனுகென்னவே
புங்கவன்முன் புகன்றனனேகுழி
யெங்குமேயிவ ளேகினளாதலால் ௧௬௨

எகுமெந்த இடத்துஞ்சகோதரி
யாகுநீயெனக் கென்னஅறைவுறப்
பாகுபோன்மொழிப் பாவையன்றுயெனக்
காகுநன்மை யளித்தியென்றேனென்றான். ௧௬௩

அன்னகாலையி லாபிரகாமுக்கு
மன்னுமாடுகள் மாடுகளேவலிற்
றன்னுமாண்பெண் டொழும்பருமன்பினுள்
மன்னனங்கு வழங்கலுற்றனரோ. ௧௬௪

தேவியாகிய சேயிழைதன்னையுங்
கூவியன்னவன் கையிற்கொடுத்துன்முன்
னாவினூடு முழுதுமமைந்ததால்
மேவிவைகுக வேண்டுழியென்றனன். ௧௬௫

பாவைதன்முகம் பார்த்துன்கொழுநற்கு
மேவுமாயிரம் வெள்ளிகொடுத்துளேன்
பூவைநின்னிற் பொருந்துமெவர்முனும்
யாவர்முன்னு மிவனுன்முக்காடென்றான். ௧௬௬

செய்யவாபிரகாமிற் றெரிவைக்கா
வெய்யமன்னவ னில்லிடைமேவிய
தையலார்க்குக் கருப்பந்தடைசெய்தான்
உய்யஅன்பர்க் குதவுமொருவனே. ௧௬௭

அன்னதண்ட மகன்றிடமேலவன்
றன்னையாபிர காமிரந்தானன்று
நன்னுதேவருள் பெற்றந்தத் தோகைமார்
நன்னர்மக்களை நல்கினரென்பவே. ௧௬௮

(வேறு) வாக்கினல் மனத்தாலெட்ட மட்டிலான் சாராள்மீது
நோக்கினற் கிருபைசெய்து நுவன்றசொற் படியேயன்பு 1
தேக்கின னனையகாலை செய்யவாபிரகாமுக்குப்
போக்கினு லுயர்ந்தகோலப் பூவையுங் கருக்கொண்டாளே. ௧௬௯

தையலர்க் கரசியென்னத் தகும்புகழ்ச் சாராளென்னும்
ஐயநுண் ணிடையாள் கேள்வன் முதிர்ந்துளோ னமப்போதிற்
றுய்யவெம் பெருமான்சொன்ன காலத்தே சுதனையீன்றான்
றுயனம் மகனுக்கீசாக் கெனப்பெய ரறைந்திட்டானே. ௧௭௦

சந்ததி யென்னுஞ்செல்வந் தகவுறப் படைத்தி லாராய்ச்
சிந்தையி லுவகையின்றித் தினந்தொறுங் கவல்கொண்டுற்றோர்
உந்திய முதுமைதன்னி லொருமகப் பெறிலன்னார்க்கு
வந்திடு மகிழ்ச்சிக்கெல்லை வகுக்கலா மளவிற்றாமோ. ௧௭௧

செப்புமக் குமரன்பாரிற் சென்னமா யெட்டாநாளில்
அப்பெருந் தாதைதேவ னமைத்தகற் பனைபோலாங்கே
சப்பறத் தரும்விருத்த சேதனச் சடங்குந் தந்தான்
ஒப்பிலன் வயதுநூறு யுளன்மக னுதித்தபோதே. ௧௭௨

அன்பினில் முதிர்ந்தகேள்வ னுயுளில் முதிர்ந்தகாலை
நன்பெருங் குமரன்றன்னை நல்கினேன் யானிவ்வாறே
இன்பொடு நகைக்கத்தேவ னியற்றின னிதனைக்கேட்ட
மன்பதைத் தொகுதியாவு மென்னொடு நகைப்பமாதோ. ௧௭௩

ஆரிதன் முன்னருற்று ராபிர காமைநோக்கி
நேரிழைச் சாராளிந்த நீணிலத் தோர்தன் சேய்க்குப்
பீரினை யூட்டுமென்று பேசிய வவர்களென்றே
காரினை மருட்டுங்கூந்தல் கனறின ளென்பமன்னோ. ௧௭௪

நாதியர் மருங்குந்தாதை தடவரைப் புயமுமீன்ற
மாதினுண் கமலமன்ன வான்கையு நீங்காநுகி

மேதினி களிக்குமாறு விழுத்தக வுதித்தநம்பி
நீதில்வின் பிறையாமென்னத் திருத்தக வளர்ந்தா னன்றே. கஎ௫

*இம்மகி தலமீடேற்ற மெய்துவித் துறவேதோன்றும்
அம்மகன் வளர்வுற்றோங்கி யாய்முலை மறந்தளானல்
செம்மனச் சிறப்பால் மிக்க தாதையத் தினத்திலாங்கே
விம்மிய மகிழ்ச்சியோடும் மிகுவிருந் துதவினானே. கஎ௬

எகிப்தவ ளாகுமாகா ரீன்றவக் குமரனங்கே
நகைத்ததைச் சாராள்கண்டு நாயகன் றன்னைநோக்கி
அசத்துநம் மடிமையாகு மவளொடு மகவை நீக்காய்
இகத்திலென் மகனோடொக்கச் சுதந்தர மேலாதென்றாள். கஎஎ

வடிவிழி மாற்றங்கேட்டு மகவன்பாலனையசெய்கை
கொடிதென நினைந்தம்மைந்தற் குறித்துளங் கவன்றுநின்றான்
படிமுத லனைத்துமீந்த பண்ணவ னவனைநோக்கி
அடிமையா மவட்குஞ் சேய்க்கு மாகநீ துயரங்கொள்ளேல். கஎஅ

மிக்கநின் குலமீசாக்கால் விளக்கமா மதனாற் சாராள்
தக்கசொல் லனைத்துங்கொள்க வடிமையாந் தையலீன்ற
இக்கவின் மகவுமுன்சே யாதலி னிவனினின்றும்
புக்கொரு சாதிவைப்பிற் பொலிந்திடப் புரிவலென்றான். கஎ௯

திருத்தகு மிறைசொற் கேட்டுச் செய்யவன் வைகற்போதில்
அருத்திசொ லுணவுக்காகு மப்பொரு டொகுத்திட் டாங்கோர்
துருத்தியி னீரோடாகார் தோளிலிட் டவடன்கையிற்
கருத்துறு மகவை நல்கி யேகெனக் களறிவிட்டான். கஅ0

மங்கையு மவன்பானின்று புறப்பட்டு வழிக்கொண் டேகிப்
பொங்கிய பேர்சேபாவின் வனத்திடைப் புகுந்தே யங்ஙன்
எங்கணு மலைந்து சுற்றித்திரிந்தன ளெய்துந் தாகம்
அங்கறப் பருகுநீரு மவள்கையிற் றொலைந்த தன்றே. கஅக

கொம்பினுண் ணிடையாணீரங் குறைந்தபின் செடியொன்றின் கீழ்
நம்பியை நிறுத்தியென்சேய் மரிப்பதை நான் பாரேனென்
றம்புபாய் தூரமட்டு மகன்றவ ணிருந்துகொண்டு
வெம்பியே சத்தமிட்டுப் புலம்பினள் வேற்கண் சேப்ப. கஅ௨

மேதகு மைந்தன்சத்தம் விண்ணவன் கேட்டான் தேவ
தூதுவன் விசும்பி னின்று தோகையைக் கூஉயாகாரே
நீதுய ருறலென்னஞ்சேல் நின்மகன் புலம்புகின்ற
ஓதையைக் கருணைமேவு மொப்பிலா முதல்வன் கேட்டான். கஅ௩

எழுந்துநீ மகவைக்கையி லேந்துக விவனி னின்றுங்
கெழும்பெருஞ் சாதியொன்று கிளரச்செய் திடுவலென்று

* இம்மகிதலமீடேற்ற மெய்துவித் துறவேதோன்றும் என்பது இவன் குலத்தில் இரட்சகர் அவதரிப்பாரென்பது கருதிக் கூறப்பட்டது.

செழும்புனற் கிணறொன்றப்போ தனையவ டெரியக் கண்டாள். ௧௮௪

கண்டன ளெழுந்தங்கேகிக் காரிகை துருத்தி யின்னீர்
மொண்டன ணிறைத்து மைந்தற்கூட்டினள் முதலீறில்லா
எண்டகுமிறையச் சேயோடிருந்தனன் வளர்ந்தக் கானிற்
றிண்டிறல் வில்வலோனா யம்மகன் சிறந்து வாழ்ந்தான். ௧௮௫

வன்மைபெற் றன்னான் பாரான் வனத்தினில் வாழுநாளில்
அன்னையங் கெகிப்துநாட் டாயிழையொருத்தி தன்னை
நன்மனைக்கிழத்தி யாகநல்கின ளவளை வேட்டுத்
தன்னுள மகிழ்ச்சிபொங்கத் தங்கினனென்ப மாதோ. ௧௮௬

(வேறு) கல்லனைய திண்புயத்தா னபிமேலேக் கென்றுரைக்குங் காவல்
வேந்தன்
வெல்லுமடற் பீகோளாம் விறற்சேனா பதிதன்னை விழித்து நோக்கி
அல்லலறும் புகழ்படைத்த ஆபிரகா மெனுமண்ண லகத்து நீபோய்ச்
சொல்லுவதறகேயுரியசின்மாற்றமெனக்குளதுதுலங்கக்கேண்மோ. ௧௮௭

மன்க்கினியா யவன்பாற்போய் வள்ளலே நின்முயற்சி யாவும் வாய்க்க
உனக்கிறைவான் றுணையெனக்கும் புத்திரர்க்கும் பௌத்திரர்க்கு முனாற்
றேல் வஞ்சம்
நினக்களியேன் புரிந்தபடி யெனக்குமிங்கு நீதங்கு நெடியதேசந்
தனக்குமிகு தயைபுரியத் தற்பரன்மீ தாணைசெய்து தருகவென்னே ௧௮௮

என்றுரைத்தா னவனேகி இசைத்திடலு மாபிரகா மிசைந்துளானால்
அன்றுபுனற் கூபமொன்றை அவ்வேந்தன் றொழும்பரப கரித்த வாற்றாற்
றன்றுகுறை யாபிரகாஞ் சொலவேந்தன் யானறியேன் சொற்றாயில்லை
இன்றிதனைக் கேட்டதல்லால் இதற்குமுன்யா னிதையறிந்த தில்லையென்
றான். ௧௮௯

அன்னதினத் தாபிரகாம் ஆடுகளும் மாடுகளும் அபிமேலேக்காம்
மன்னவனுக் கீந்தனனிவ் வாறவர்கள் இசைந்திணக்கம் மருவினரால்
பின்னரிள மறியாடே ழொருபுடையா பிரகாமாம் பெரியோ னுய்த்தான்
மின்னுமுடிவேந்திவணீவிடுத்தவிவையெதற்கென்றுவினவினானே. ௧௯௦

இக்கூபந்தோட்டவதற்கெனக்கொருசான்றெனவிவற்றை என்கையாலே
தக்கோய்நீ பெறுகவெனத் தராபதிக்கன் றாபிரகாஞ் சாற்றலுற்றான்
மிக்கோர்க ளிருவோரும் மேயாணை செய்தவந்த விசேடந்தன்னால்
அக்காமர்பெற்றதலம் பேர்சேபாவாய்ப்பெயர்பெற்றமர்ந்ததன்றே. ௧௯௧

இசையுமுடன் படிக்கையின்பின் இறையோனும் பீகோளும் பெலிஸ்
தர்காட்டின்
திசையணுக வெழுந்துசென்றார் செழுந்தோப்பொன் றாபிரகாஞ்செய்தே
யங்ஙன்
இசைமருவு நித்தியனா மெங்கோமா னாமமிசைத் திறைஞ்சியேத்தி[னோ.
வசையறுசீ ரொடும்பெலிஸ்தர் வனநாட்டில் நெடுங்காலம் வதிந்தான்மன்

தனக்குவமை யில்லாதா னுங்கதன்பி னுயிரகாந் தன்னைக்கூவி
உனக்கினிய வேகமைந்த னீசாக்கை யுன்னுடனே கூட்டியோங்கும்
வனக்குலஞ்சூழ் மோரியர்தம் வளநாட்டில் மரீஇயவனை யங்ஙனேயான்
நினக்குரைக்கு நெடுங்கிரியிற் சருவாங்க தகனபலி நீதாவென்ருன். கசுங

பலிதாவென் றெங்கோமான் பரிசோதித்திடலுமனம் பதையானுகிச்
சொலிசோதி நெடுங்கிரண சூரியன்பூ ருவதிசையிற் றுலங்காமுன்னர்
பொலிசேணங் கத்தவத்திற் பூட்டியிரண் டிளைஞரொடும் புதல்வனொடுஞ்
சலியாது விறகுகொடு தனிமுதல்வன் குறித்ததலஞ்சாரப்போனுன். கசுச

முந்திவழி செல்லுநையி லாபிரகா மூன்ருநா ணிமிர்ந்துநோக்கி
அந்தவுயர் தலமதனைத் தூரத்தேகண்டிளைஞ ராஞேர்தம்மை
இந்தவிடந் தனிற்கரத்தை கிறுவிநின்மின் யான்சுதனே டேகியங்ஙன்
எந்தைபர னிணைமலர்த்தா ளிறைஞ்சியிங்கு மீள்வலெனவியம்பியாங்கே.

இடுந்தகனந் தனக்காகு மிந்தனத்தை யீசாக்கின் சிரமேலேற்றிச்
சுடுந்தழலு மாயுதமுங்கொண்டுசென்ருன் தொடர்ந்தேகுஞ்சுதனப்போது
கெடுந்தகைகொடந்தைமுகநோக் கியங்கியுடன்விறகுநீகைக்கொண்டாய்
அடுந்தகனந்தனக்குரிய ஆட்டினிளங்குட்டியெங்குண்டறைகவென்ருன்.

மைந்தனிவ்வா றவண்வினவக் கேட்டலுமேயாபிரகாம் மகனேயிங்ஙன்
எந்தைபிரான் றனக்கேற்ற இளமாட்டுக் குட்டிதெரிந் திடுவனென்ருன்
அந்தவுயர் தலத்தவர்க ளணுகியபின் ஆபிரகாமமலற்காங்கே [றே.
செந்தழல்வான்பலியதனைச்செலுத்துதற்கோர் வேதிகையயச்செய்தானன்

தந்தவொரு வேதிகையிற் றகும்மீதடுக்கித் தனதோர்பேறும்
மைந்தனையுங் கட்டியதன் மேலாக வைத்தந்த மதலையாவி
சிந்தியுயர் பலிசெலுத்துஞ் சிந்தையுடனுயுரத்தைச் செங்கைசேர்த்தான்
அந்தரநின் றிறைதூத னப்பொழுதாங்கவன்றன்னைக் கூவினனே. கசுஅ

கூவியவன் றன்னையிவன் மீதுகையை வையேலிக்குமரற்கொன்றும்
நீவிளையே னீணிலத்தி லுத்தமர்க்குளுத்தமனும் நெறியினேனே [ற்கா
தேவினுக்குப்பயந்தொழுகுஞ்செவ்வியனீ யென்பதின்னேதெளிந்தேனெ
மேவியநின்னேர்மகவாம்விழைவையும்பார்த்திலையென்றுவிளம்பினனே.

சுதனுயிரைத்தொலையேலென்றெங்கோமான்சொலவவனுஞ்சூழநோக்கிப்
பொதும்செடியிற்கோடுசிக்கும்புருவையைப்பின்கண்டுபலிபொறப்பவீந்து
இதமுறவத் தலத்தின்பேர் யேகோவாயீரென்ரு னிதனுல்வெற்பின்
முதல்வனங்கு தான்பார்த்துக்கொள்வனென இதுகாறும்மொழிவர்மாதோ.

செய்யபரன்றிருத்தூதன்மறுபடியுந்தெரிசனையாய்ச் சேணின்றந்தத்
துய்யவனைக்கூவிநின்னோர் சுதனெனவும்பாராமற் றொடர்ந்திவ்வாறு
செய்தனைநீ யாதலினுல் கனிவிருத்தி சிறக்கவுனைச் செய்குவேனுல் [னே.
வையகல்விண் மீன்கடற்சார் மணலினைவபோல் நின்குலத்தைமலிவிப்பே

தரணியினின் குலத்தவர்தஞ் சத்துருக்கள்வாயில்களைத் தமதாக்கொள்வர்
பரவுறுநின் சந்ததியாற் பாருலகிற் பயில்சாதி அனைத்துமாசி

விரவுமென்றென் மேலாணை யிட்டேனென் றனக்கையன் விண்டானெ
ன்றான் [ன். ௨0௩
உரமுடையோன் மகிழ்ந்தனைவ ரொடுமீண்டும் பேர்சேபா வுற்றுவாழ்ந்தா

ஆங்கவற்றின் பின்பொருவ னாபிரகா மிடம்போய்நின் னனுசனாகோர்
பாங்குறுமில்க் காளென்பா ளூத்சினுடன் பூசென்னும் பாலரோடு
நீங்கிலராந் தனையுதவுங் கேமுவேல் கேசேது திறலசோவு [௨0௪
ஓங்குபில்தா சிதிலாபு பெத்துவே லெனுஞ்சுதரை யுயிர்த்தாளென்றான்.

இப்பால ரெண்மருக்குட் பெத்துவே லிரேபேக்கா ளெனும்பேர்பெற்ற
அப்பானல் விழிமகளை யருளினா னிரேயுமா ளாகுமன்னான் [சாம்
தப்பார்செவ் விதள்மனைவே றொருத்திதேபாக் சொற்பெறுகா காத்தா கா
உப்பாலரோடுமாகாவினையுமகிழ்ந் தவகையுடனுயிர்த்தாளென்றான்.௨0௫

(வேறு) பாராதி யாவுமருள் பண்ணவனல் லருள்படைத்த
சாராளென் றுரைகெழுபேர்த் தையலிந்த வையகத்திற்
சீராரு நல்லொழுக்கஞ் சேர்ந்தொழுகிச் சீர்த்திபெற்றே
ஏராகச் செல்வயது நூற்றிருபத் தேழடைந்தாள். ௨0௬

தப்பிலா நல்லொழுக்கத் தையலவ ளவ்வயதில்
ஒப்பிலாக் கானானென் றுரைகெழுசீர் வளநாட்டில்
எப்பிரோ னெனுங்கிரி யாத்தர்பா வெனும் பதியில்
வைப்பிலாம் வாழ்வொருவி வானுலகம் படர்ந்தாளே. ௨0௭

தனக்குயிர்போ லில்வாழ்வு சார்ந்தொழுகுஞ் சாராளாம்
வனக்குயிலின் மொழிப்பூவை வையகவாழ் வொருவுதலும்
மனகெழுவெந் துயரினொடும் வருந்திமிக வாபிரகாம்
புனக்கொடியை நினைந்துநினைந் தவணிமித்தம் புலம்பினனே. ௨0௮

மணமகடன் னுயிர்பிரிய மனக்கலக்கம் பெரிதுழந்து
கணவனெனு மாபிரகாம் கவன்றுபுலம் புற்றதன்பின்
துணவமதை விட்டெழுந்து குறுகியெத்தின் புத்திரர்பால்
அணவினனங் கவரிடத்தே குறையிரக்கு மாறன்றே. ௨0௯

ஆங்கனுசி யும்பாலி லந்நியனே யாகிவந்துற்
றீங்குபுற நகர்வாசி யாயுள்ளேனெனக்காநீர்
தீங்ககலக் குணவமதைச் சேர்த்தடக்கம் பண்ணிடவும்
பாங்கரெனக் காகவொரு படுகாடு தருதிரென்றான். ௨௧0

இவ்வாறு வேண்டுதல்கேட் டெத்தினது புத்திரர்கள்
செவ்வாறு பயிலொழுக்கஞ் சிறந்தவனை முகநோக்கி
எவ்வாழ்வு மிகப்பெருகி இங்கெமக்குள் மற்றொருவர்
ஒவ்வாத பெரும்பிரபு உன்னையன்றி வேறுளரோ. ௨௧௧

எமக்குரிய பிரேதவறை யெவற்றினுள்ளுஞ் சிறந்ததின்கண்
நீ மக்குரிய குணவமதை உற்றடக்கம் பண்ணுகவே

நமக்கினியாய் சவச்சேமம் நயந்துசெயி லெதிராய்நக்
தமக்குளெவ னென்ருலுந் தடைசெய்வ தில்லையென்ருர். ௨௧௨

அந்தவுரை கேட்டவரை ஆபிரகா மெழுந்திறைஞ்சி
இந்தவென்பா லுறுபிணத்தை யான்சேமஞ் செய்யவிடந்
தந்தருள வும்முளத்திற் றயையுளதே யாமாகில்
சிந்தையரு ளுடையீர் யான்செப்புதற்குச் செவிதருவீர். ௨௧௩

இசைபெருகுஞ் சோகார்சேய் எப்பிரோன் றன்னிலத்தின்
திசையிலுறும் மக்பேலா வெனுங்குகையைத் தெரிந்துகொள்ள
நசையுடையேன் பெறும்விலைக்கந் நற்குகையைத் தரவெனக்கா
வசையறுசீ ரவனிடத்தில் வேண்டுமென வழுத்திநின்ருன். ௨௧௪

இத்தகுசொற் கூறுபொழு தெப்பிரோ னெத்தினது
புத்திரருட் புக்கிருந்தோன் எழுந்துதம்மூர் வாயில்புகும்
எத்துமகா ரெல்லோருங் கேட்டுறநின் றெம்மடிகேள்
அத்தகைய நிலமதனை யளித்திடுவ னினக்கன்றே. ௨௧௫

ஆன்றேயங் குளகுகையு மளிக்கின்றே னெம்மரபோர்
சான்ருக வெனவாங்கு சாற்றினு னபிரகாந்
தான்ருழ்வொ டனைவர்முனுந் தலைகுனிந்து வணங்கியந்த
ஞான்ருங்க ணவர்கேட்ப நண்பொடுமெப் பிரோன்றன்னை. ௨௧௬

நோக்கியெனக் கருளுதியேல் நுவன்றவிலை தருவலென்ருன்
மேக்குயரும் புகழுடையோய் நானூறு வெள்ளிவிலை
யாக்குலவு மந்நிலை மஃதெனக்கு முனக்குமென்னும்
போக்குறுமக் குணவமதைப் புதைத்திடுக வங்கெனவே. ௨௧௭

எப்பிரோன் மொழிந்திடலு மெத்தியர்கள் சான்ருகத்
தப்பிலா னிறுத்துவெள்ளி சாற்றியசொற் படியீந்தான்
இப்படியே மமரேயி னெதிராமந் நிலமுமதில்
எப்பயனு மிவனதென நங்குறுதி யாகியதே. ௨௧௮

வரங்கள்பல மேலவனால் மன்னியிசை பெற்றேனம்
மரங்குலவு மெபிரோனின் மக்பேலா வெனுங்குகையில்
இரங்குமனத் துயரமொடு மேகியிறந் திடுமனையாள்
திரங்கொளெழின் மேனியினை யதிற்சேமஞ் செய்தானே. ௨௧௯

(வேறு) ஆபிரகாம்நெடி தாயுள்முதிர்ந்தான்
சோபிதம் யாவினு மாங்கு துலங்க
வேபிரபாகி யிருந்திடு மாறே
மாபிர போதன் வழங்கினன் மன்னே. ௨௨0

அல்லலி லத்தகை ஆபிரகாந் தன்
இல்லக மேவு மெவர்க்கு முதிர்ந்தே
மல்கிய வெவ்வெ வளங்களின் மீதும்
செல்லும் விசாரணை செய்பவனைக் கூஉய். ௨௨௧

யானுறை கின்றவி காட்டிடை யெய்தும்
மானிகர் வாள்விழி மங்கையருக்குள்
வானவ னெற்கருள் மாமகன் வேட்கத்
தேனிகர் வல்லி தெரிந்திட லன்றே. உஉ௨

என்பெரு நாட்டி னிடைப்படர் வுற்றென்
நன்குல மீதுள நங்கையர் தம்முட்
பொன்கொடி போலொரு பூவையை யன்றாற்
கன்புறு மாமண மாற்றிட நீகொள். உஉ௩

மெய்யுற நீயென் வியன்றொடையின் கீழ்க்
கையினை வைத்துயர் கனமொழிப்பார்க்
கையனின் மீதுய ராணையை யின்னே
செய்திடு கென்றுரை செய்தன னன்றே. உஉ௪

அம்மொழி கேட்டவ னந்நகர் நங்கை
இம்மலி பொன்னக ரெய்தில மென்றால்
உம்மகன் மீண்டு மொரீஇய நகர்ப்போய்ச்
செம்மினை வேட்டல் செயச்செய லாமோ. உஉ௫

சொல்லுக வென்றெதிர் சொற்றலு மிக்க
நல்லுணர் வோனு நவின்றிடு மீண்டுஞ்
செல்லுவ தின்றுயர் சிறுவனை யங்கே
புல்லுற வேகொடு போகலை யென்றாய். உஉ௬

எந்தையி னில்லிடை யென்குல நடுநின்
றிந்த நிலத்தெனை யெய்த வழைத்துஞ்
சந்ததி யார்க்கிது தந்தன னென்றே
முந்துற வாணைசெய் முதறுணை யுண்டே. உஉ௭

வானவ னீயென் மகற்கவண் மன்னுந்
தேனனை யாளொரு சேயிழை தன்னை
ஈன முறுதிவ ணெய்த வழைக்க
வானமி றூதனை யுன்முன் விடுக்கும். உஉ௮

மாணிழை யுன்பின் வரற்குவ வாளேல்
ஆணையை நீவில குற்றிட லாவாய்
யாணர்கொள் மைந்தனை யாதலின் மீண்டுஞ்
சேணுறு மந்நகர் சேர்த்திட லென்றான். உஉ௯

கேருற வாங்கு நிகழ்த்திய தோர்ந்தே
சீருறு நற்பணி செய்பவ னனையான்
ஊருவ தன்புடை கைதொட லுற்றே
கூருந லாணை கொடுத்தன னன்றே. உ௩0

அப்படி யச்செய லாகியபின்னர்
ஒப்பில னன்பை யுறுந்தகையண்ணல்
இப்புகழ் மேவெலி யேச ரெனும்பேர்ச்
செப்பமு ளோன்வழி செலவிடை யீந்தான்.

(வேறு) வரவணுஞ்சே ராபிரகாம் மகிழவாணை வழங்கியவன் மணத்தூத
னாகி யன்று
னிரவணத்து னீரைந்து தெரிந்தன் ளேன்றன் இரும்பொருளிற் றனதுகை
யி னிடத்ததாக
லிரவுறு மவற்றினுக்குட் கொள்ளுமாறு வேண்டுவகொண் டெழுந்துவ
ழி படர்ந்து மேவி
அரமகக ரீமென்னுந் தேயந்தன்னில் அடல்நாகோ ரமர்ந்ததலத் தண்ணினு
னே. ௨௯௨

ஆங்கணுகி மாலையாம் போதுதன்னில் அரிவையர்நன் னீர்கொள்ள அணு
கும்போதில்
ஓங்குநகர்ப் புறத்தினிலாண் டுற்றதெண்ணீ ரூற்றுநறுங் கூபமதை யுவந்
துகண்டே
பாங்கருறீஇ யந்தமணத் தூதனன்று பாதைதொறும் நெடுந்தூரம் படர்ந்த
சோகம்
நீங்கவதின் றுடன்கொடுபோ மெவற்றினோடும் செடுங்கழுத்த வினத்தி
னையும் கிறுத்திநின்றான். ௨௯௩

நின்றனையான் தற்பரனை யிறைஞ்சியேத்தி நின்மலனே யாபிரகாந் தன
துதேவே
இன்றடியே னெண்ணிவந்த கருமம்வாய்க்க இனிதுதவி யென்றலைவற் க
ருளையீவாய்
துன்றுபுனற் செழுங்கூப மருங்கினின்றேன் தோயமொண்டு கொடுபோ
கத் தொடர்ந்திந்நாட்டில்
ஒன்றுபல கயலெனநின் றுலவுங்கண்ணார் ஒருங்குகுழீஇ இம்மாட்டே
யுறுகின்றாரால். ௨௯௪

கறைகெழுவேற் கண்ணியருள் யான்போய்க்கண்டு கடுந்தாக மெனக்குள
து கழியுமாறு
நிறைபுனல்வான் குடஞ்சாய்த்துத் தருகவென்ன நீயுமுனதொட்டைகளு
முண்மினென்றே
இறையவனீ திருவருளா லீசாக்கென்னு மிளைஞனுக்கு வரித்தவிள மயி
லேயன்னாள்
அறையவரு ணீபுரிவா யதனானீயென் னாண்டவனுக் குதவுதயை யறிவே
னென்றான். ௨௯௫

சேகோருஞ் சிந்தையிலா னிவ்வாறோதித் திருமுனு பிராமின் றுணைவனு
ஞ்சீர்
நாகோரு மில்க்காளாம் நன்மைத்தாலும் நல்குபெத்து வேலுதவு மிரேபேக்
காளாம்

பாகோரு மதுரமொழிக் கன்னியாங்கே பானீயங் கொளக்கும்பந் தோண்
மேற்கொண்டு
வாகோரு மடல்வலியோன் பணியாற்சென்ற மணத்தூதன் விழிக்களிக்க
மருவினளே. ௨௬௬

(வேறு) இத்தகைய விசித்திரஞ்சேர் கன்னியெய்தி இக்கடமதிலிறங்கித்
தெண்ணீர் மொண்டு
கைத்தலத்திற் றாங்கிவரக்கண்டத்தூதன் காரிகைதன் னெதிரோடிக் கன்
னிமின்னே
வைத்தகுடத் தினியபுனல் சிறிதின்னேநீ வழங்குவாய் யான்பருகுமாறெ
ன்றோத
அத்தபருகென விரைவிற் குடத்தைக் கையால் அவளிறக்கிப் பருகவவற்
களித்தாளன்றே. ௨௬௭

மனமுவந்தங் கவன்றாகந்தணியுமாறு வழங்கியபின் மானனையாளொக்கு
மற்றுன்
கனகதங்க டமக்குமுண்ணுமளவும் யானே கனவிரதந்தருவலெனக் கள
றிவல்லே
தனதுகுடங் கொண்டுசென்று சாலுமட்டுந் தான்முகந்து முகந்துபத்தர்த
ன்னில் வார்த்தாள்
அனதுவியந் தவனிறைதன் னெண்ணம்வாய்க்க அருளுமதோவென வறி
ய மௌனியானான். ௨௬௮

அத்திரிக ணீர்குடித்த பின்பத்தூதன் அரைச்சேக்கல் நிறைப்பசும்பொன்
னதனாற் செய்த
சித்திரஞ்சேர் தொங்கணியுஞ் செங்கைக்கீரைஞ் சேக்கல்நிறைச் செம்
பொன்னின் சரியின்சோடும்
பத்திரஞ்சேர் கன்னியிளம் பாவைக்கீந்து பான்மொழியாயார்மகணீ பக
ர்க யாங்கள்
இத்திரஞ்சேர் பொருளொடுந்தைமனையினெய்தி இராத்தங்கவேண்டுமிட
முளதோவென்றான். ௨௬௯

தத்துவே லனையகண்ணாள் நாகோரென்னுந் தக்கோன்மில்க் காள்வயிற்றி
ற் றந்தசீர்கால்
பெத்துவே லுதவுமகள் யானவைக் கோலும் பிறவுணவும் பெரிதுளகம்பா
ல் நின்னுள்ளம்
கத்துமே விராத்தங்க இடமுண்டென்று நவின்றனள்கேட் டவனிறைஞ்
சி நட்புச் சிந்தை
வைத்துமே லவனெண்ணம் வாய்க்கவெங்கோன் மனைசேர்த்தா னென
விறையை வணங்கினனே. ௨௭0

வணங்கிநின்று நின்மலனெங் கோமானுக்கு மல்கருளுஞ் சத்தியமுங் கா
ட்டி மாற்றிற்
றணக்கிலை தில்லையெங்கோன் றனதுதேவன் றான்றுதிபெற் றிடவென
ச் சாற்றினனால்

அணங்குயருஞ் செழுஞ்சாயல் மயிலுநாணு மனையகன்னி மனையகத்தி
ளுக்கணேடி
மணங்கூருதி வருதூதன் மாட்டடாங்குற்ற மாற்றமெல்லாம் மனமகிழ்ந்து
ழுத்திளுளே. உ௪௩

தோங்கணியுங் கைச்சரியுங் காட்டியந்தத் தோகையனை மயலனையாள்
சொற்றமாற்றம்
அங்கணுறுந் திருத்துணைவ னிலாபான்கேட்டே அக்கணத்தி லக்கூடத்
தயலிளுகே
தங்கலுறு மணத்தூதன் றன்பாலோடித் தற்பரனு லாசிபெற்றே யகத்துவ
ம்மின்
இங்ககல நிற்பதென்ளே உனக்கு வேண்டும் இடமுளதிங் கெழுகவென
வேகிளுனே. உ௪உ

(வேறு.) இட்டமெய்தி மனையினங்க் ணேகலுற்ற போதினே
ஒட்டகங்க டமையநீல வுண்களுள் சகோதரன்
கட்டவிழ்த்து வைபொடுண்டி கடிதுநல்கி யவளுெடுற்
றிட்டயாரு மடிவிளக்க நீருமீயலுற்றனன். உ௪௩

கண்ணியுண்டி கொள்ளவம்மி னம்மொடென்ன வனையனும்
எண்ணிவந்த செய்திசொல்ல லின்றியுண்ண லேனென்றுன்
கண்ணிநின்ற யாவுமிங்கு களறுகென்ன நெஞ்சகத்
துண்ணிறைந்து நின்றவெண்ண மோதவே தொடங்கிளுன். உ௪௪

ஒப்பிலுந்தை துணைவனில்லி லுற்றதொண்டி னேனியான்
தப்பில்செம்மல் கடவுணல்கு சாலுமாசி தாங்கியிவ்
வைப்பிலண்ண லாகியாடு மாடுவெள்ளி செய்யபொன்
செப்புமேவல் செய்தொறுக்கள் கத்தபங்கள் சேர்ந்துளான். உ௪௫

அந்தவண்ணல் பன்னிநீடு மாயுள்பெற்ற காலையோர்
மைந்தனல்கி ளுளுவந்து வள்ளறன்கை மன்னிய
எந்தமல்கு நிதியுமன்ன இளமகன் றனக்கெனத்
தந்துநெஞ்ச மகிழ்விளுெடு தக்கவாழ்வு பெற்றுளான். உ௪௬

மாசகன்ற சிந்தையண்ணல் வருகவென் றழைத்தெனை
நேசமிக்க மாமகற்கி னீணகர்க்க ணல்லவென்
தேசமெய்தி யெனதுதந்தை செல்வஞாதி யானமைக்
கேசநங்கை யீகெனக் கிளத்தியாணை கேட்டனன். உ௪௭

உந்தைதாய மங்கையிங்கெ னுடனெழுந்து தொடர்வுறச்
சிந்தையின்றி நிற்கிலென்ன செய்வலென்ன வள்ளல்யான்
எந்தையாக வுனியிறைஞ்சு மெனதுதேவ னுன்னுடன்
முந்தியங்கோர் தூதனைக முன்னனுப்பி யருள்செய்வான். உ௪௮

எம்மனோர்கள் கன்னிதன்னை யீவதில்லை யென்பரேல்
அம்மவாணை தன்னைநீங்க லாவையேகு வாயெனச்
செம்மலோத வெய்தியன்ன சீதநீர்கொள் கூவல்மாட்
டிம்மருங்கி னின்றுதேவை யென்னுளத் திறைஞ்சினேன். உ௪௯

எம்பிரானை நோக்கிநின்று யான்விழைந்து கேட்டவா
றம்பொனு லியன்றபாவை யனையநங்கை யனுகியே
கும்பமோடு நீரமொண்டு கொண்டியானு மொட்டையும்
வெம்புதாக மாறவுண்ண விரவியீய லுற்றனள். ௨௯௦

அனைகன்னி தன்னைநோக்கி யானுமார்கொ னீயென
மின்னனாளு மனையபோது தனையெனக்கு விண்டனள்
பொன்னினாய பணிகள்செய்ய பூவைகொள்ள நல்கியான்
இன்னவாறு கருணைசெய்த எம்பிரானை வத்தினேன். ௨௯௧

நீருமெங்க ளண்ணலுக்கு நேயமிக்க தயவையுஞ்
சேருமுண்மை தனையுமுய்க்கு மாறுவந்து செய்திரோ
ஒருமாறு செய்கிலீர்கொ லோநிகழ்ந்து மிடம்வலஞ்
சாருமெத்திசைக்கணேனும் யானெழுந்து சாருவேன். ௨௯௨

(வேறு.) என்றவன்கூறக்கேட்டே யிலாபானுர் தந்தைதானும்
இன்றிது தேவனாலே யியன்றநற் கருமமாமால்
ஒன்றுநா முரையோங்கன்னி உன்முனிங்குளள் கொண்டேகு
நின்றகு முதல்வன் சேய்க்கிந் நேரிழைமனையா மௌன்றார். ௨௯௩

அம்மொழி கேட்டலோடு மளவறு மகிழ்ச்சி கூர்ந்து
செம்மணத் தூதன்றாழ்ந்து தேவனைத் தொழுது பின்னர்
கைம்மலி வெள்ளி பைம்பொற் கலன்களுந் தூசுமந்த
மைம்மலி குழலினாட்கு வழங்கினனென்ப மன்னோ. ௨௯௪

பிணையினை நிகர்க்குமங்கட் பிறைநுதற் கனிவாய்ப்பேதை
துணைவனு மாயுங்கொள்ளத் தூதுவன் விசேடமான
இணையறு சிலவற்றீந்தாங் கிட்டநல்லுணவை வாங்கித்
துணைவரு மவர்களோடு முண்டுகண் டுயிலலுற்றான். ௨௯௫

விடியலி லனையதூதன் விழித்தெழுந் தெங்கோன்றன்பால்
அடியனே னணுகவின்னே விடையெனக் கருள்கவென்றான்
கொடியிடை துணைவன் றாயோடையிரு தினமிக்கோதை
கடிமனை யகத்துவைகிப் பின்செலக் கடவளென்றார். ௨௯௬

உண்ணிக ணசையாலன்னோ ரோதுசொற் கேட்டுத் தூதன்
நண்ணிய கருமம்வாய்க்க நாதனின்றுதவு மாற்றாற்
பண்ணியல் மொழியாளின்னே படர்வதைத் தடைசெய்யற்க
தண்ணிய தலைவனபால்யான் சார்தர வேண்டுமென்றான். ௨௯௭

சுகத்தினை நிகருமஞ்சொற் றோகையை யவர்கள்கூவிச்
சகத்திரராயுதர் தாயாய்ச் சார்கநின் மரபோரொன்றார்
அகத்தினில் வாயில்காணி யாக்கொள்க வெனவேவாழ்த்தித்
தகப்பெறு மயிலையன்றே தாதியோடவன்பினுய்த்தார். ௨௯௮

மனமுவந் தேவல்செய்யும் மகளிரோ டனையகன்னி
கனகத மிவர்ந்தத்தூதன் முன்செலக் கதிகொண்டாளால்
அனகன தருளினாலே பவாசிநாட் டமர்ந்தவீசாக்
கெனுமவனிலகாய் ரோயா மகம்பருகெய்தினனே. ௨௯௯

அந்தசற் றினத்தில்மாலே யதனிடை வெளியிலாங்கே
சிந்தையி னுணர்வாற்றேவை வழிபடு தியானஞ்செய்ய
வந்துறு மீசாக்கம்பொன் மலர்விழி திறந்துநோக்கி
முந்துமொட் டகங்கடன்முன் முடுகுறக் கண்டானன்றே. உ௫0

நங்கையும் விழித்துநோக்கி நம்பியை யினிது கண்டான்
அங்குறுங் குமரன்யாரென் றனையவள் வினவத் தூதன்
எங்கணு யகனேயென்றான் னெய்திய வாகம்நீங்கி
மங்கையும்படாங்கொண்டம்பொன்வதனமேல் முக்காடிட்டாள். *

காவன வெழின்மைக்கூந்தற் கனனிகை கரீரமேந்திச்
சீவனங் கொள்வான்கூப மருங்குறுஞ் செய்தியாதி
ஏவனவிழியாள்வந்த செயல்வரை யியன்ற யாவுந்
தேவன தருள்பேற்றேற்குத் தூதவன் றெரியச்சொன்னான். உ௫உ

கேட்டலு மகிழ்ச்சி பூத்துக் கெழுதகைக் குமரனந்த
வாட்டடங் கண்ணிறனை யன்னைமுன் வதிபடங்கிற்
கூட்டினன் மணஞ்செய்தன்பு கொண்டுவாழ் வெய்தி யாய்மேல்
நீட்டிய துயரநீங்கி யாறுதல் நெஞ்சத்துற்றான். உ௫௩

நல்விசுவாசிகட்குப் பிதாவென நவிலுந் தந்தை
மெல்லியற் கேத்தூராளாம் விளங்கிழை தன்னேமேனாள்
இல்லவ ளெனக்கொண்டே யின்பமுற் றனையளாலே
கல்லிசை யுவரிவைப்பிற் காதலர் பலரையீன்றான். உ௫௪

தீதிலானளித்த மைந்தர் சிம்மிரா னியக்சான் மேதான்
மீதியா னிஸப்பாக் சூவா வெனும்பெயர் மேவுவோராம்
ஓதியயக்சான் சேபா வுடன்றேதான் றனையுமோங்கி
மேதினி யாத்துமல்கி விளங்குற விழைவி னீன்றான். உ௫௫

அப்புகழ்த் தேதான்மைந்தர் அசூரிம்லேத் தூசிலேயும்
செப்பிய மீதியான்றன சிறுவர்கள் எப்பாவெப்பேர்
அப்பெயர் மருவுமாஞேக் காபிதா வெல்தாவாகும்
மைப்புய லனையகூந்தற் கேத்தூராள் மரபிதாமே.

இறைவனுக் கன்பனுனே னெய்திய நிதியமெல்லாங்
குறைவற வீசாக்கின்னுங் குலமகன் றனக்கேதந்தான்

---

* துன்பிலா வொழுக்கமிக்க தோன்றலர் நங்கைதன்னை
இன்பிறலங்கன்கான இறைபருள் புரிந்தானம்மா
முன்பினுயர்வெப்பில்லா முழுமுதல் கருணையன்பர்க்
கன்பினற் காட்டும்வண்ண மதிசயாரீமைததாமே.

அரியட லேறன்னா மழுதகு குதலைச்செவ்வாய்ச்
சுரிகுழல் நங்கைதானுஞ் சொலற்கொணு வுவகை கூர்ந்தார்
பரிவுறு பணியர்தம்மேற் பண்ணவ னருளுஞ் சேரத்
தெரிவுறக் காணிற்காணு மூவகையார் தெரிக்கவல்லார்.

அறைதருங் குமரரேனோர்க் கருள்வண வருளிக் கீழ்பால்
உறைபதியடைந்துவாழ்வாங் குறுகவென்றுய்த்தான்மன்னோ. ௨௭௮

தாரணி மதிக்கவாண்டு தலத்தில்நூற் றெழுபத்தைந்தாய்ப்
பூரண வாயுள்பெற்றுப் பொருவிலா பிரகாமென்னும்
பேரணி குருசிலிந்தப் பெருநில வாழ்வு நீங்கிச்
சீரணி முன்னோர்பாலிற் சேர்த்திடப் பட்டானன்றே. ௨௭௯

அத்தகு தாதையாவி யகன்றபின் றுடலையன்னோர்
எத்தருள் மகன்பாற்கொண்ட இருங்குகை யகத்திலாங்கே
புத்திர ராகுமீசாக் கிசுமவே லென்போர்பொற்ப
வைத்தன ரன்னைதேகம் மருவிட மருங்கில்மாதோ. ௨௮0

வசையறு நோவாவன்னான் வானுல கடைந்தகாலை
திசையுறும் புகழ்சேர்மைந்தர் சிந்தனை கலங்கிநெஞ்
மிசையுறு துயரத்தோடு மிருபிர லாபமெய்தி
அசைவுறு கருத்தினோடு மவரவ ரிருக்கை சேர்ந்தார். ௨௮௧

அளவறு கருணையைய னாபிரகாமென்றோனும்
உளமுறு மன்பன்வைய மொரீஇயபி னீசாக்கென்னும்
மளமகன் றன்னையாசீர் வதித்தனன் லாகாய் ரோயென்
றுளசெழுங் கூபச்சாரி னம்மக னுறைந்தானன்றே. ௨௮௨

ஈறிவ ணிகழ்ந்ததப்பா லிசுமவேல் நேபாயோத்து
சேதரத்துபியேல் மிப்சா கிளத்துசீர் மிசுமா தூமா
ஓதுறு மாசாவாதாத் துடன்தேமா வெத்தூர் நாபீஸ
மேதகு கேத்மாவென்ன விளம்புமம் மகாரை யீன்றான். ௨௮௩

அவ்வவர் கிராமந்தோறு மரணங்க டோறுமெய்து
மிவ்விவை வழங்குநாம மிவர்களீ ரறுமகாருஞ்
செவ்விய தத்தமக்காங் குலங்களின் சிரங்களாகி
இவ்விய னுலகில் நல்வாழ் வெய்தியாங் கிருந்தாரன்றே. ௨௮௪

அதிகசீ ரவிலாநாடு முதலெலிப் தெனுமந் நாட்டின்
எதிரசூர் வழியிற் சூர்நாட் டிடம்வரை யினிதின் வாழ்ந்த
அதிர்சிலை யிசுமவேலங் காண்டுநூ றொடுமுப் பானேழ்
முதிர்வய ததனில் முந்நீர் மூதுலகொருவினானே. ௨௮௫

ஆபிரகாமை அழைத்த படலம் முற்றும்.



## அ. ஈசாக்குப் படலம்.

சீரிய வீசாக்கென்னுஞ் செவ்வியோன் வயதெண்ணைந்திற்
பாரினிற் சிறந்த செல்வப் பதானராம் நாடுதன்னில்
ஏரியல் சூரியாவி னிரேபேக்கா ளெனும்பேர் பெற்ற
நேரிழை தன்னை வேட்டு நீணில மதிக்க வாழ்ந்தான்.

தகவினா லுயர்ந்தவண்ணல் தன்மனைக் கிழத்தியான
துகளிலா வுளத்துநங்கை மைமையாய்த் தொக்கவாற்றால்
மகவிலா வறுமைநோக்கி மனந்தளர்ந் திறைமு னண்ணிப்
பகவிலா வுளத்தினோடு மிரந்தனன் பரவிநின்றான். ௨

தண்ணளி யுடையமேலாந் தற்பர னீசாக்கந்நாட்
பண்ணிய வணக்கநோக்கிப் பரிந்தருள் புரிந்துளானாற்
பெண்ணியல் வழாதசெல்வப் பெருந்தகை மடமானோக்கி
மண்ணகஞ் சிறக்குமாறு வயினிடைக் கருக்கொண்டாளே. ௩

இதமிக்க கருணைசாலு மிறைதிரு வருளாற்றோன்றி
உதரத்துட் சிசுக்களொன்றை யொன்றுற நெருக்கும்போழ்தில்
மதர்மைக்கண் மடமானஞ்சி வானவற் பணிந்துகேட்க
நிசமுற்ற மகிமைபூண்ட நின்மலனுரைக்குமன்றே. ௪

இருவகைச் சாதியீண்டுன் கருப்பத்து ளிருப்பவாகும்
மருவியுன் னுதரநின்று வருஞ்சனம் வகையிரண்டாய்
ஒருவகைச் சனமேமற்றை யதனிலும் பலங்கொண்டோங்கும்
இருவரு மிளையசேய்க்கு மூத்தவ னேவல்செய்வான். ௫

விண்ணக மதியமான மிளிர்முக வனிதைதன்பால்
நண்ணிய கருப்பமிக்க நலம்பெற முதிர்ந்த ஞான்றில்
அண்ணினர் தமக்கெந்நாளும் அருள்செய்தே வருளினாலே
மண்ணக மதிக்க மைந்த ரிருவரை வழங்கினாளே. ௬

மூத்தவ னிறஞ்செய்யோனாய் முழுதுட லுரோமமிக்க
தாத்திக ழாடைபோல்வா னாகிவந் துதித்தவாற்றால்
ஏத்துறு மேசாவென்று மிவன்குதி பற்றுமாற்றால்
மாத்தகு மிளவல் யாகோப் பெனவுமாய் வகுத்தாள்பேரே. ௭

மைந்தரிங் கிவர்களிந்த மானிலத் துதித்தபோதிற்
றந்தைமூ விருபானாண்டு சார்ந்துளோ னாயினனால்
வந்தவக் குமரரோங்கி வளர்ந்தன ரவருளேசா
வெந்திறல் வேட்டஞ்செய்து வனவாசம் விழைந்துற்றானே. ௮

இளையவன் சாதுவாகு மிருங்குணங் கொடுகூடார
வளமுறு வாசதோனாய் வைகினன் மூத்தோன் வேட்ட
விளைவினால் அவன்மேற் றாதை விழைவுளோ னாயினன்கா
*ரிளைபொரு மளகவன்னை யிளவல்மேற் றயைவைத்தாளே. ௯

*. இளை. முகில்.

அன்னநன் னிலைமையோரா யமர்ந்துள் வெளியினின்றே
முன்னவ னிளைப்பா யோர்நாள் முடுகின னனையபோதிற்
பின்னவன் சமைத்தகூழ்கண் டிளைப்பியான் பெரிதுற்றேனால்
இன்னநின் சிவந்தவூணிற் சிறிதெனக்கீகவென்றான். ௪௰

இங்கித னிலையேதோ மெனும்பெய ரேசாவுற்றான்
அங்கவ னுணவுகேட்க அநுசனுன் முதற்பிறப்பிற்
றங்கிய வதிகாரத்தைத் தாவென மரிக்கின்றேனுக்
குங்குள வதிகாரத்தா லுறுபயன் யாதோவென்றான். ௪௧

தந்தன னென்னவாணை தாவெனத் தரலுற்றன்றே
மூந்துதன் னதிகாரத்தை விற்றனன் முடுகியப்போ
தந்தமுன் னவற்குப் பின்னோன் அப்பமும் பயற்றங்கூழும்
உந்திய விளைப்புமாற உதவவுண் டவனுமபோனான். ௪௨

(வேறு) கானுமெங்கும் ஆபிரகாமின் காலத்தே
மேனேருற்ற வாறொரு பஞ்சம் மேவிற்றால்
வானோர்செல்வத் தீசாககண்ணல் மருவுண்டி
தானடைற்கங் கேதுவி லாமே தளர்வுற்றே. ௪௩

வெம்பசி தீரும் மாறு பெலிஸதர் வியன்சேரார்
அம்பதி யாளும் மன்னபி மேலேக் ககமுற்றான்
வம்பதி லானவ கெய்தியபோதின் மட்டில்லா
நம்பர னன்று காட்சிகொடுத்தான் நண்புற்றே. ௪௪

வந்துயர் காட்சி வழங்கியெகிப்தாம் வளநாட்டில்
முந்துறவேக லுனக்கிவணேயான் மொழியுஞ்சீர்
இந்நிலத்தே வைகுதியென்ன வியம்பியவற
கெந்தைபிரானவ னன்முகமீண்டு மெதிர்நோக்கி. ௪௫

மன்னுறு செல்வ மலிந்திடு மிம்முழு வளநாடும்
நின்னுடனின்பின் மரபினருக்கும் நிலையாகத
துன்னுறு வித்துன் றந்தையுடன்யான் சொல்லாணை
என்னும வெல்லாந் தப்பறவேநிறை வேற்றுவலே. ௪௬

இங்ஙனமாதலி னீயகலாதுறை யானுனது
பங்கினில் மிக்கரு ணின்றுசுரந்து பரிந்துறுவேன்
மங்குதலின்றி வியப்புற யாவினு மல்கிடவே
பொங்கியவாசி புரிந்துனையீண்டு புரப்பேனே. ௪௭

உந்தையெனக்கமை வுற்றிடு கற்பனை யோடுமியான்
தந்தனவெப்பிர மாணமு மாதிக டவறாதே
வந்தொழு குற்றதி னாலுடுவிற்குல மல்கிடவும்
இந்தநிலம்முழு தன்னவ ரெய்தவு மீவேனால். ௪௮

உற்றிடு நின்னுயர் சந்ததியாலிவ் வுலகெங்கும்
துற்றிடு சாதியர் யாவருமாசி துலக்கமுறப்

பெற்றிடு வாரென வோதினனெங்கள் பிரானீசாக்
சற்பொடு வைகின னங்குயர்கேரா ரணிநாட்டில்.

(வேறு.) அவ்விடை யாடவர் அனையன் றேவியாம்
கவ்விபோ ணேக்கிதன் னியலைநாடினர்
செவ்விய எழகினாற் சீவநாசமும்
இவ்விடை கேருமென் றெண்ணியஞ்சினான். ௨௰

அஞ்சினன் றந்தையே யனைய னவ்வெழில்
வஞ்சியைத் தன்னுயர் மனைவி யென்றிடான்
செஞ்சொலி தஙகையா மென்னச் சீர்கெழும்
விஞ்சிய செல்வநாட் டவர்க்கு விண்டனன். ௨௧

அன்னநன் ஞட்டிடை யநேக நாட்களின்
பின்னரோர் வைகலிற் பெலிஸ்தர் கோமகன்
உன்னத சாளரத் தூடு நோக்கியே
அன்னவன் மனைவியோ டாடல் கண்டனன். ௨௨

ஆதலின் மன்னவ னவனைக் கூவியிவ்
வோதரி கெடுங்கணாள் உண்மையாகநின்
காதலி யென்குறை கண்டிப் பொய்ம்மொழி
நீதரலுற்றனை நிகழ்த்து வாயென்றான். ௨௩

வஞ்சியின் காரண மாவென் மன்னுயிர்
எஞ்சிட வருமென எனது நெஞ்சகத்
தஞ்சலி னப்படி யறைந்திட் டேனென
வெஞ்சுடர் வாளினாற் கனையன் விண்டனன். ௨௪

எப்பழு தெமிற்றெரிந் தினையசெய்தனை
இப்பெரு நகரில்யா ரெனினு நொய்தினில்
ஒப்பறு வஞ்சியை யுவக்கவும் நமிற்
றப்புறு மாறும்நீ யேதுத் தந்தனை. ௨௫

எனவிசைத் திங்ஙன மிவனை யேனுமிம்
மனைவியை யேனுமிவ் வைப்பிற் றீண்டினோர்
அனைவருங் கொலையுண லுண்மை யாமெனச்
சினவுவேல் மன்னவன் செப்பி னனரோ. ௨௬

(வேறு.) ஈங்கிதன்பின ரிப்பெரு நாட்டினி லீசாக்
காங்குவித்திடு தொழிலினால் விளைவுறு றதிகம்
ஓங்குமவ்வரு டத்தினி லுற்றனன் கடவுள்
பாங்குகொண்டவற் காசியும் புரிந்தனன் பரிவால் ௨௭

தக்கமேன்மையங் காதலாலனையவன் சார்ந்து
மிக்கசெல்வனா யுயர்ந்தவன் மேன்மகனானன்
தொக்கவாடுகள் பசுநிரை தொழும்பரின் தொகையும்
ஒக்கவெய்துதல் பெலிஸ்த்தருள் வெறுப்புடனோர்ந்தார் ௨௮

ஒளவியங்கொடு பெலிஸ்தர்க ளாபிரகாமாந்
செவ்வியன்பணிச் சேவகர் தொட்டனவாகும்
அவ்விரும்புனற் கூபங்கள் அனைத்தையு மண்ணால்
எவ்வமெய்திடத் தூர்த்திட ரியற்றினரன்றே. ௨௯

அதுவுமன்றியே பெலிஸ்தர்க ளதிபனீசாக்கை
நிதிபடைத்துமிக் கெம்மிலும் மீபலவானாய்
அதிகனுயினை யாதலி னிங்குறா தெழுந்திப்
பதியகன்றுபோய்ப் பிறகர் வைகெனப் பணித்தான். ௩௦

அன்னகாலையில் அவ்விடமொருவியவ் வண்ணல்
துன்னு பல்பெரு வளங்களுந் துலங்கிய சேரார்
என்னவோதிய தாழ்வுறும் பூமியி னிடையே
மன்னுபாளயம் நிறுத்திமற் றவ்விடை வதிந்தான். ௩௧

ஆண்டு தந்தையி னாட்களி னாகியங் கிருந்து
மீண்டு வெந்திறற் பெலிஸ்தர்கள் தூர்த்தனர் விட்ட
வேண்டுநீர்ச்செழுங் கூபங்கள் மீளவுந் தோண்டி
மாண்ட தாதைசொல் பேரையே அவைக்கவன வகுத்தான். ௩௨

வேறுமன்னவ னடியர்கள் தோண்டியே யினிநீர்
ஊறுமூற்றினைக் கண்டனர் அத்தரு வூரின்
மாறுபட்டிடு மேய்ப்பர்கள் தமதென வகுத்தார்
கூறுபேரதற் காதலி னேசேக்கெனக் குறித்தான். ௩௩

பின்னுமோர் கிணறுக்கின னதுவுமப் பெற்றித்
தென்னவாதலிற் சித்தினாவெனப் பெயரிசைத்தான்
மன்னுமவ்வுழி யகன்றுபோய் மற்றொரு கூபம்
அன்னபோதுதொட் டனர்வழக் கவருரைத் திலரால். ௩௪

ஆயபோதினி லாபிர காமருளண்ணல்
மேயநல்வள நாட்டினை மேவிவாழ் வெய்தத்
தூயவன்றர லுற்றனன் தொக்கிவண் பெருகி
யேயிருத்துமென் றிதன்பெய ரிரேகொபோத் தென்றான். ௩௫

அவ்விடத்தினி விருந்தவன் போசெபா வடைந்தான்
செவ்வியன்முனைத் தினத்தியா மினியினிற் சேர்ந்தே
இவ்வியன்றரி சனத்தினிற் றெரியலுற் றியானே
ஒளவியந்தவி ராபிர காம்பரனுமால். ௩௬

அஞ்சல் நின்னது பங்கில்யா னமர்ந்தென தடியான்
மிஞ்சுசீர்தக ழாபிரகாமெனு மிகுகன்
கெஞ்சி னுத்தம னிமித்தமா சீர்வதித் துன்னை
விஞ்ச வுன்குலம் பெருகவும் விளைப்பலென் றுரைத்தான். ௩௭

ஆனபோதினி லவனொரு வேதிகை யாக்கி
ஞானநாயக னுமத்தை நவின்று தோத்திரித்துத்

தானும்வைகுற வவ்விடை பாளயஞ் சமைத்தான்
பானநீர்க்கிண றமைத்தனர் பணிவிடைக்காரர். ௩௮

அனையகாலையிற் பெலிஸ்தர்க ளதிபனு மனையான்
றனது நண்பரு ளொருவனுய்ச் சாரசேனா சாத்தும்
கனையுநீள்கடற் சேனையின் காவலன் றானும்
புனையு நல்லிசை யுத்தமன் றன்னுழை போனார். ௩௯

யாதுகாரணங் கருதினீ ரென்னுழை வந்தீர்
போதுவாயெனப் பகைத்தெனைப் போக்கினீ ரென்றான்
ஓதுவாசகங் கேட்டவ ருனக்கிறை துணையே
ஆதலால்நனி விருத்தினீ யடைந்தமை யறிந்தோம். ௪௰

நீண்டலாதுனைச் சாந்தமாச் செலுத்துநஞ் செயல்போற்
பூண்டசீரினாய் எமக்குவெந் தீவினை புரியா
நீண்டு நீதரு மாணைக்கு மிசைந்துடன் படிக்கை
மாண்டகப்புரி தற்குமா வந்தனமென்றார். ௪௧

அன்ற வாசகங் கேட்டலு மாபிர காஞ்சேய்
தின்று மன்புடன் விருந்திடத் துய்த்தனர் துயின்றார்
ஒன்றுவைகலில் மற்றைநா ளாணையிட் டுவந்தார்
சென்றுபோயினர் வந்தவர் செல்வனு மிருந்தான். ௪௨

அந்தநாளினிற் றந்தொடு கிணற்றினி லூற்று
வந்ததென்றுகண் டோதினர் வள்ளலுஞ் சேபா
உந்துநாமமற் றிதற்கென வோதின னவ்வூர்
மூந்துபேர்ச்சபா வாமென வாதலின் மொழிவார். ௪௩

(வேறு) எண்ணைந்தாம்வய தினிலேசா எத்தியர்தங்கள் குலத்தினிலே
எண்ணுஞ் சீர்செழு பேயோர்முன் நல்கியவுத்தீ துடனேலோன்
மணனிற் றந்திடு பஸ்மாத்தாம் மாதையும்வேட்டு மகிழ்ந்தானால்
எண்ணும்பேர்பெறு ரேபேக்கா ளிவரானெஞ்சு கசப்புற்றாள். ௪௪

ஈசாக்குப்படலம் முற்றும்



## ௯. யாக்கோபுப்படலம்.

ஆயுளின்முதிர்ந்த ஈசாக் கம்பக மிருண்டுளோனா
யேயுள காலத்தோர்நாள் இனியதன் மகனேசாவை
ஆயிடைக் கூஉய்விருத்த னாயினே னினியென்னாவி
சாயுநா ளெந்நாளென்று தகவுற வுணர்ந்திலேனே.

ஆதலி னெழுந்துசீ லின் னாயுதஞ் சவீனயெய் தாணி
மோதுறு சிலைகைக்கொண்டு முங்கிகீள் பழனந்தன்னிற்
போரதாலுற்று வேட்டஞ் செய்தியான புசித்தற் காகக்
கோதறு முணவையின்னே கொண்டுநீ வருகுவாயே. ௨

கொடுவரு மவற்றுள் வேட்டை சொன்றுநற் சுவைய தூனை
அடுமுறை யட்டின்னேயா னருந்தவு மென்மெய்யாவி
விடுமுனென் ஞான்மாவாசி மிசவுனக் கீயுமாறும்
இடுகநீ யென்முன்னென்றான் இம்மொழி யாயுங் கேட்டாள். ௩

தந்தை சொற்படியே வேட்டந் தனக்கவன் படரமற்றை
மைந்தனை யன்னைகூவி மாற்றங்க ளனைத்துங்கூறி
மந்தையி னிரையு ணீபோய் வாய்ந்தவோர் வெள்ளைக்குட்டி
தந்தவென் னுரைவழாமற் றருகநீ வல்லைமாதோ. ௪

யானதை யுந்தைக்கேற்ற சுவைபெற அட்டே யீவேன்
போனவன் மீளமுன்னீ புசுந்ததைப் புசிக்க வீந்தால்
தானுல கொருவுமுன்னந் தக்கநல் லாசீர்வாதம்
மானமெய்திட வுனக்கே வழங்கிடு மவனென்றாளே. ௫

அம்மனை யுரைத்தமாற்றங் கேட்டலுஞ் சிறுவ னன்றாய்
எம்முன துடல்போற கேச மென்மெயி லில்லை யெந்தை
வம்மெனத் தைவந்தங்கென் வஞ்சனை யுணரு மென்றால்
அம்மநல் லாசிக்காகச் சாபமே யடைவேனென்றான். ௬

அன்னையங் கவனை நோக்கி அந்தவெஞ் சாப மைந்தா
என்மிசை வருவதாக எனதுசொன் மறுமனீபோய்
நன்மைபெற் றுய்யுமாறு நல்கென நல்கினால்
மின்னுமங்கதனை மிக்கசுவையுற விரும்பி யட்டாள். ௭

அட்டபின் னன்னையில்லத் தக்கிர சதனதாக
இட்டநல் லுடையை யன்றற் கியைபுற வுடுத்தி யாட்டுக்
குட்டியின் சருமப்போர்வை கொண்டுகை கழுத்துக்கிட்டு
நட்டநற் சுவையூணப்பம் நல்கென நல்கிவிட்டாள் ௮

சோர்வற வாய்சொற் கேட்டுச் சுதன்கொடு தந்தை தன்முன்
சேர்தலும் யாரென்றானுன் சேட்டபுத் திரன்யானையா
எர்பெறு நின்சொற்போல வியற்றினே னெனக்குன் ஞான்மா
ஆர்தரு மாசிநல்க அமுதுசெய் தருள்க வென்றான். ௯

தந்தையெவ் வாறுமைந்த சடுதியிற் கிடைத்ததென்ன
மைந்தனு நினதுதேவ னருளினால் வாய்த்ததென்றான்
அந்தநன் மகனோ அன்றோ வெனத்தைவந் தைய நீக்க
வந்தரு கணுகிங்கென்ன முன்னுற மருவி னின்றான். ௧௦

தைவரும் போதுசத்த மிவையவன் றனதேயாகும்
கைவலி மருவுமூத்தோன் றனதெனக் களறினவும்

மெய்வரு முரோமம் மூத்தோன் மேனிபோல் விளங்குமாற்றால்
நைவரு முதியோனாசி யவனென நம்பியீந்தான். ௧௧

ஈசரும் பொழுதிற் றுனை யுண்மையா வேசா நீயோ
ஓதென வவனு மாமென் றுரைத்தன னனையகாலை
தீசறப் படர்ந்து வேட்டஞ் செய்துவந்தட்ட வூனை
நீதருமென்ன மைந்த னீட்டலும் வாங்கியுண்டான். ௧௨

மற்றசன் பின்றிராட்ச மதுவையும் வாங்கியுண்டே
துற்றிடு மகிழ்ச்சி பூத்துத் தோமிலான் சுதனை மைந்தா
உற்றுநீ முத்தந்தாவென் றுரைக்க வவ்வாறு செய்தான்
சுற்றிய உடையின கந்தந் தொன்மையோன் மோந்தானன்றே. ௧௩

ஆயின துரையாற்சுற்று மம்முனோ னுடையைத் தந்தை
மோயின னனையகாலை முழுதுள மகிழ்ந்தா வென்றன்
சேயினற் கர்தந் தேவின் றிருத்தகு மாசீர்வாத
மேயின பழனவைப்பின் இனியவாசனையே போன்மால். ௧௪

இறையவன் வானின்றெய்து மிமத்துடன் செழுந்தண்பாருங்
குறைவிறு னியந்திராட்ச விரசமுங் கொடுப்பானாக
நிறைபல வகைச்சனங்க ணின்னைச்சே விப்பாராக
அறைதரு மநேகசாதி வணங்குக வுன்னையன்றே ௧௫

மிக்கவுன் றுணைவருக்கும் மேலவனாயிருப்பாய்
தக்கநின் னன்னைநல்குந் தனயரும் நின்னைத்தாழ்க
புக்குனைச் சபிப்போர் சாபம் பொருந்துக வாசிநின்மேல்
வைக்குமவ் வவர்களாசி மருவுகவென்றான் மன்னோ. ௧௬

இம்முறை தந்தையாசி யியம்பியங் கானபோதே
அம்முக மொருவிமைந்த னகன்றிடு மமயந்தன்னிற்
சொம்மென வேட்டஞ் செய்து கொணர்ந்தநற் சுவையவூனைச்
செம்மனத் தாதைதன்முன் சேட்டபுத் திரன்கொண் டுற்றான். ௧௭

சொண்டுவந் தளியேனாசி கொண்டுய்ய விளையவூனை
உண்டுவந் தருள்கவெந்தா யெனப்பணிந் துரைத்துநின்றான்
எண்டகு மீசாக்கப்போ தியார்கொனீ யென்றுகேட்கத்
திண்டிறலவனும்யானுன் சேட்டபுத் திரனே யென்றான் ௧௮

சுதனுரை கேட்டலோடுந் துண்ணென நடுங்கித்தாதை
பதைபதைத் தொருவனீண்டென் பாலினீ வரற்குமுன்னே
இதமுறு முணவை யீந்தா னெவற்றினு முண்டேனன்ன
புதல்வனெங் கவனேயாசி பொருந்திடுவோ னவனென்றான். ௧௯

என்றவ னுரைத்தமாற்ற மிருசெவி யூடுமெய்தச்
சான்றவெந் துயரான் மிக்க சத்தமிட் டலறியெந்தாய்
என்றநல் லாசியின்னே யெனக்குநீ தருகவென்றான்
ஆன்றவ னும்பிசூதாற் கவர்ந்தன னதுமென்றான். ௨0

வருமுறை கேட்டபோதே மைந்தனு நோக்கியன்றன்
இருமுறை படிறேசெய்தான் என்முதற் பிறப்பின்மேன்மை
ஒருமுறை கொண்டானிப்போ தறமென தாசிகொண்டான்
தருபெயர் யாக்கோபென்ப திவனுக்கே தக்கதம்மா. ௨௧

எனக்குமின் னாசிநல்க இடமினி யிலையோவென்று
மனக்கவல் கூர்ந்துகேட்டான் மைந்தனைத் தந்தைநோக்கி
உனக்கவன் றலைவனாக உறம்படி வைத்தேனன்றன்
றனக்கனை வோருமேவ றனைச்செய நியமித்தேனால். ௨௨

எய்துதா னியக்கிராட்ச விரசமுமிவனே கொள்ளச்
செய்தியா னுதரித்தே னுதலிற் சேயேயென்னே
மைதப வுனக்குச் செய்வே னினியென்றான் மகனிவ்வொன்றோ
உய்தரு மாசியுள்ள தெனக்குமீண் டுதவுகென்றான். ௨௩

அத்தரு தாதை முன்னின் றப்படி யுரைத்தேயேசா
சத்தமிட் டழ விரங்கித் தாதையும் மகனே கேணின்
சித்திர வாசத்தானஞ் செழும்புவி யொடுமேல் வானின்
றித்தலத் திழிவதாகு மிமத்தொடும் பொலியுமன்றே. ௨௪

செங்கையிற் கட்கங்கொண்டே சீவனஞ்செய்து பின்னேற்
கங்குறு மேவல்செய்வாய் அனையனை மேற்கொள் காலத்
திங்குநின் கழுத்தின் மீதுற் றிடுமவன் றன்னுகத்தைப்
பங்குறச் சேதிப்பாய்நீ யென்றிவை பகர்ந்தான் மாதோ. ௨௫

இன்னதன் பின்ன ரேசா இளையவற் கின்றேனுசி
பண்ணிய வாற்றினாலே பகையுளத் தமைத்துவெய்ய
துன்னல னுகித்தாதை துஞ்சபின் றனைவனுகும்
அன்னவன் றனைக்கொல்வேனென் றெண்ணிய மதித்துளானே. ௨௬

கொடுமனக் காயினன்னான் கூறுசொல் லின்றான் காதிற்
சுடுதழலென்ன வெய்தச் சொற்றனர் கேட்டோ ரன்னை
படுதுய ருழந்துசெய்ய பாலகற் கூவியுன்னை
அடுவதற் குன்னியுமுன் னுறுதல் மனத்துற்றானால். ௨௭

ஆதலால் மகனே தாரை தரியவென் றுனைவன் பானி
மேதகு காரா னென்னும் வியனக ரணுகியாங்கே
தீதறு மாறுவைகிச் சிலபகல் கழியேசாவின்
மீதுறு பகைதீர் பின்னுள் விட்டுனை யழைப்ப லன்றே. ௨௮

இன்புறு மகனே கேளும் மிருவிர்க டமையு மெஞ்சத்
துன்புற வொருதினத்தே தொலைவுற விழக்க வந்தால்
என்பிற துயரமல்லா லென்றன விளைய சேயும்
அன்புறு தாய்சொன்மாற்ற மகத்தினில் மதித்துளானே. ௨௯

பெத்துவே லீன்றகன்னை பின்புதன் கொழுநன்பாற்போய்
எத்தமா மரபிலேசா வேட்டவேக் கிழைமாரால்யான்

மெத்துமா துயருற் றேனுங் கிழவனும் வேட்டா னென்னில்
இத்தரா தலத்தென் னுயி ரிருந்துமென் பயனுமென்றான். ௯௦

(வேறு) ஈசாக்கங் கவனுரைகேட் டிளையோனை வரவழைத்து
மாசாகா வாசிசொற்று மகனேகானா னியர்தந்
தேசாருங் குழல்மடவார் தங்களுக்குட் சேருமணம்
நீசாரப் புரிவதற்கு நின்னுளத்தி லெண்ணுறேல்.

பன்னுதல்கே ணீயேகிப் பதானராம் நன்னாட்டில்
உன்னனையோ டுடன்பிறந்த ஒங்கியசீர் கெழுலாபான்
கன்னலஞ்சேர் தரவுதவு நங்கையரி லுனக்கினிய
மின்னனையா ளொருத்தியைநீ வேட்டுயர்வாழ் வெய்துகவே. ௯௨

அனைத்தினுக்கும் வல்லபரா னுசியுனக் கீந்துபல
சனத்திரளாய் நீபெருகத் தயைபுரிக வாபிரகா
மினுக்குதவு மாசியினை யிறையுனக்குஞ் சந்ததிக்கும்
மனத்தினனி மகிழ்ச்சிபொங்க வழங்கியருள் புரிகவன்றே. ௯௩

என்றுமொழிந் திளங்குமரற் கீசாக்கு விடைகொடுத்தான்
அன்றவனுந் தந்தையன்னை யறைந்தமொழி தலைக்கொண்டு
துன்றுபல வளங்கணனி துலக்கமுற்ற பதானராம்
என்றுரைக்குந் திருநாட்டுக் கிலாபான்பா லுறநடந்தான். ௯௪

ஆண்டுபிதா விளையோனுக் காசிப்கன் றதுவுமணம்
பூண்டவெழிற் கானானிற் புரியற்க வெனப் புகன்று
மூண்டதிருப் பதானராம் மூதூருக் கனுப்பியதுந்
தூண்டுகணைச் சிலைத்தடக்கை யேசாவுந் தொகுத்துணர்ந்தான். ௯௫

கானானின் மடந்தையரைக் கடிமணஞ்செய் செயலீன்றோ
னானுக் குளம்வெறுப்பென் றறிந்தேசா விசுமாவேல்
மேனானீன் றிடுசேயே யோத்தினுக்கு வியன்றுணைவி
தேனோர்சொன் மகலாத்தாந் தெரிவையையும் வேட்டானே. ௯௬

பேர்சேபா நகர்நீங்கிப் பின்னவனன் றாரானும்
ஊர்சேர வழிநடந்தே ஒங்குசுடர் சாய்ந்தந்தி
நேர்போதி லோரிடத்தே யிராத்தங்க நினைந்தங்கே
சேரோர்கற் றலைக்கணையாச் சேர்த்துவிழி துயின்றானே. ௯௭

பூணினிய நித்திரையிற் பொற்புடையோன் சொப்பனத்தோ
ரேணிதரை மேனிறுத்தி யிருப்பதுவு மதனுனிநீள
சேணினளா விடமேலோன் றிருத்தூத ரதனிடையே
ஏணுறவங் கேறுவது மிறங்குவதுங் கண்டானே. ௯௮

அன்றுதெரி திருவேணி யதன்மிசையே யெம்பெருமான்
நின்றுனது மூதாதை தாதையெனு நீள்புகழோர்க்
கென்றுமருள் புரிதேவன் யானுனக்கும் மரபினுக்கும்
இன்றிவணீ துயில்காட்டை யினிதுதவு வேனன்றே. ௯௯

வரக்குலவு நின்குலம்பார் மணலின்மிக மல்கலுறும்
திரக்குலவு காற்றிசையுஞ் சிறந்தனது திருமரபு
பரம்புமித்தப் பாரிலெர்தப் பயில்குலமு முன்னாலும்
உரம்பெறுமுன் குலத்தாலு முயராசி மருவிடுமே. ௬0

உன்பால்யா னிருக்தேகீ யுற்றழியெல் லாம்புரக்தே
அன்பாக மீண்டுமிந்நா டடையவுனக் கருள்புரிவேன்
நின்பால்யான் புகலுமிவை யெவற்றினையும் நினைப்பகலா
தின்பாக வருள்வலென இசைப்பதுவுங் கேட்டானே. ௬௧

ஆனதுயி லகன்றெழுந்தே யவன்மெய்யா வித்தலத்தே
வானவன்வை கினனறிந்தேன் யானென்று மனத்தஞ்சி
ஈனமறு மினையதலம் எங்ஙகோமா னுறைபதியாம்
வானமதின் வாசலிது வாமென்ன வகுத்தானே. ௬௨

தக்கபுகழ் யாக்கோபு தலைக்கணையா வைத்தகந்த
மிக்கபெருங் கல்லதனை விடியலிலே தானெழுந்து
அக்கலின்மேசர் தலமதிற்றா னுறிறுத்தி யெண்ணெய்சொரிந்
திக்கடிகொ ளூலூசெனுநா டினிப்பெதகே லென்றிசைத்தான். ௬௩

என்றுமொழிந் திறையென்னோ டிருந்துவழி தோறுமிகத்
துன்றருளாற் புரந்துணவுந் துகிலுமருள் வதுமன்றி
என்றனது தாதையுழைக் கியான்சாந்த மொடுமீண்டுஞ்
சென்றிடநல் லருள்புரியிற் றேவனவ னெனக்கென்றும். ௬௪

நின்மலனே யான்றானு நிறுத்துகன்னின் னாலயமாம்
இன்னருளா னீயெனக்கீ யெவற்றினிலும் பத்திலொன்று
நன்மனதா னல்குவல்யா னென்றுமங்கு நவின்றெழுந்து
துன்னுகுண திசையார்தந் தொன்னாடு விரைந்தடைந்தான். ௬௫

ஆன்றோன்போய்ப் பழனத்து டாங்கேயோர் கிணறுமயல்
மூன்றாடு மருங்குநண்ணி முடுகுறவே துயில்வதுவும்
தான்றோன்றக் கண்டானத் தண்கூபந் தனில்மேய்ப்பர்
கான்றூரும் புனல்மந்தைக் குண்ணுதற்குக் காட்டுவரால். ௬௬

(வேறு.) பீடுறுங்குழி பெரியதோர் கலால்
மூடுறப்படும் மூடுகி மந்தைகள்
கூடுமங்கெலாங் குழுமு போதுகன்
யாடுமேய்த்துண வழங்கி மூடுவார். ௬௭

அந்த மேய்ப்பரை யண்ண னோக்கினீர்
எந்த நாட்டினீ ரென்ன நற்றிரு
உந்தி யிக்கரா ரானி னோமெனத்
தந்த வாசகந் தன்னை யோர்த்தவன். ௬அ

குலவு செல்வநா கோரனித்த பொற்
புலவுசீரிலா பானை யோர்திரோ

*சொலுதி ரென்னவா மென்று சொற்றனர்*
*வலிய னேகொணீர் வழுத்துமென்னவே.* ௪௯

*தீங்கி லானவன் றந்த செவ்விசேர்*
*மாங்குயிற்குநேர் செஞ்சொல் வஞ்சியா*
*டாங்கு சேர்த்திவண் அடைதல் பாரெனாப்*
*பாங்கி னின்றவம் மேய்ப்பர் பன்னினார்.* ௫0

*அன்னபோதிவன் ஆடு கூடுதற்*
*கின்னமும்பொழு தேற வில்லையே*
*தன்னு மின்னவை தோயமுண்ணுறப்*
*பின்னுமேயலாம் பெரும்பு லென்றனன்.* ௫௧

*ஆட்டுமந்தைகள் அனைத்துஞ் சேருமுன்*
*னூட்டலோமவை ஒருங்கு வந்துழி*
*மாட்டினிக்கலைப் புரட்டி வைத்துநீர்*
*காட்டுவோமெனக் கழற லுற்றனர்.* ௫௨

*(வேறு.) இன்ன வாறிவன் பேசிடுமெல்லையி லிராசேல்*
*துன்னுமாடுக டிரத்தின ளவ்விடை தொக்காள்*
*அன்னமென்னடை மலரடித் துடியிடை யயிற்கண்*
*மின்னைமுன்னுற விழியிணை களித்திடக் கண்டான்.* ௫௩

*கண்டபோதவ னெழுந்துபோய்க் கிணற்றின்வாய்க் கற்பேர்த்*
*தண்டுமென்புடை மாதுலனாடுக ளமுதம்*
*உண்டு வெவ்விடாய் தீர்தர வுதவிய பின்னர்*
*மண்டுகாதலால் முத்தமிட் டழுதனன் மன்னோ.* ௫௪

*அழுதுதன்னையின் னானென வினையவை யறியக்*
*கெழுதகுந்திற லுடையவன் கிளத்தின னவள்போய்ப்*
*பழுதிலன்புடைத் தாதைமுன் பகர்தலு மனையான்*
*தொழுதகும்புகழ்க் குமரனைத் தொடர்ந்துபொய்க் கண்டான்.* ௫௫

*உருகுமன்பொடு தழுவியே முத்தமிட் டுவந்து*
*மருகனைக்கொடு மாமனை மருவிடப் புகுந்தான்*
*பொருவில் டோற்பினான் பொருந்துமெக் கருமமும் விரிவாப்*
*பெருகு சீருடை மாதுலற்குரைத்தனன் பெட்பாய்.* ௫௬

*தன்மைகூர்ந்தன னெஞ்சொடு சாற்றுசொற் கேட்டே*
*உண்மையாகவென் னென்புமென் றசையுமென் றுவப்பாற்*
*றிண்மை கூர்புய மாதுலன் செப்பின னவன்பால்*
*ஒண்மையாருள முடையவ னொருமதி யுறைந்தான்.* ௫௭

*இல்லில் வைகிய பொழுதழைத் தினையனை யிலாபான்*
*மல்குமன்புடை மருகனே யாதலின் வாளாச்*
*சொல்லுமென்பணி தொடர்ந்துநீ செயனெறி யன்று*
*நல்கு சம்பளம் வேட்டதை நவில்கென நவின்றான்.* ௫௮

எண்ணுசாரா மேயலனு மனைபதன மடேகா
கண்ணுமேழுவர்ச் சரம்பணி காண்புரிவே னென்
றண்ணலோதின னக்கியற் கருளலி லுனக்குப்
பெண்ணையீவதே நலமெனப் பேசினன் மாமன். ௫௯

கூசுகண்ணினள் மூத்தவ ளிளையவக் குமரி
தேசுவாய்த்தவ ளாதலி னிவளிடை செய்யோன்
ஆசைகூர்ந்தவற் கவவிடை பணிவிடை யயர்ந்தான்
மூசுமன்பினேழ் வருடமு முடிந்தன சிறிதாய. ௬௰

பொறித்த வாண்டுகள் போனபின் மாமனைக் குறுகிச்
செறித்த வன்புடைத் தெரிவையைத் தருகெனச் செப்பக்
குறித்தநாளையிற் பலரையுங் கூட்டியே விருந்திட்
டெறித்த பொன்னிழை முன்னையை யிரவினி லீந்தான். ௬௧

சொன்ன நற்பணி சோர்வற வாற்றிடுஞ் சில்பான்
என்னுமின்னிளை யம்மகட்கீந்தன னிலாபான் *
அன்னயாமினி யகன்றபி னனையவ ளிலேயாள்
பின்னையன்றெனக் கண்டனன பீடுறும் பெரியோன். ௬௨

தெரிந்தகாலையில் மாமனை நோக்கியச் செம்மல்
விரிந்த பொற்புடை யிளையவ டன்னையே விழைந்து
புரிந்துளேன்பணி யனையளைப் பொருந்துறத் தராதே
பரிந்த வஞ்சநீ பண்ணிய தென்னெனப் பகர்ந்தான். ௬௩

மூத்தமாமக ளிருக்கவே யிளையவள் மூந்த
வத்துமாமணம் புரிவழக் கிவ்வுழியின்றால்
மாத்தடங்கணிக் காகவும் வருபணியவ்வா
ருத்தகச்செயி லவளையுமருளுவ லென்றான். ௬௪

வழுவர்ச்சர மிளையவட்காகவு மியற்றத்
தாழுமங்குழ லவளையுமருளினன் றாதை
சூழுநற்பணித் தொண்டினுக்கிசைந்த பில்காளை
யாழும்வெள்குசொ லிம்மகடனக்கென வீந்தான். ௬௫

பூத்தபைங்கொடி போலுமெய்ப் புனைகுழல் மலர்க்கை
மாத்தடங்கணிவ் வஞ்சிமேல் மூத்தமங்கையிலும்
வத்துமன்புவைத் திருந்தனன் பின்னுமேழ் வருடம்
கோத்தசீருடன் பணிசெய்தா னவனிடைக் குரிசில் ௬௬

விருப்பமின்றியே மூத்தாயஇயினை மிக்க
திருப்பொருந்திறோ னலட்சயஞ்செய்தலிற் றேவன்
சருப்பமன்னவ ளெய்திடக் கருணைகூர்ந்தனனால்
மருக்கருங்குழ லிளையவள் மைமையாய் வதிந்தாள். ௬௭

வர்த்தகுஞ்சத னொருவனையருளின ளிலேயாள்
சீர்த்தநம்பினி நாயகனென்மிசை சிறக்கச்

சேர்த்துவானவ னெனக்குள சிறுமையையின்னே
பார்த்துநல்லருள் புரிந்தனனென்மனைப் பன்னி. ௬௮

உருபனென்றுபே ரம்மகற்குதவினள் மீண்டுங்
கருவிளைந்தொரு கான்முளை பயந்து காதலனாற்
றிருவிலற்பமாயா னெனைப்பட்டது தெரிந்தே
பொருவிறேவனென் வேண்டுதல் கேட்டருள் புரிந்தே. ௬௯

இந்தமாமகன் றன்னையுமீந்தன னெனக்கென்
றந்தமைந்தனைச் சிமெயோ னென்றவ ளழைத்தாள்
சந்துவேறுமோர் சுதனையுப் புகல்வரைத் தரலால்
உந்துமன்பினி யுறுவலென் றிலேவியென் றுரைத்தாள். ௭௰

சாற்றுமற்றொரு மதலையைத் தந்திணியிறையைப்
போற்றுவேனெனச் சொல்லியூ தாவெனப் புகன்றாள்
ஏற்றமெய்தவிம் மைந்தரை யீன்றபின் மக்கட்
பெற்றைநீங்கினள் பெறும்பய னடைந்துயர்பேதை. ௭௧

(வேறு) மைந்தரைப்பெறுத லின்மையாலிளைய மாதுமிக்கினிய மக்களைத்
தந்தவௌவையை வெறுத்துநண்புடைய தலைமகன்வதன நோக்கியே
சுந்தரப்புதல்வர் யானுநல்கவரு ளின்னுமாயலதெ னின்னுயிர்
ஓந்தமானில மகன்றுபோகுமென வெவ்வமோடெதி ரியம்பினள். ௭௨

தேவியிவ்வுரை நவின்றபோதுபுகழ் சேருமண்ணல்மிகு சினமுளம்
மேவியுன்வயி னிருங்கருப்பமதின் விளைவுவாய்க்கவருள் செய்யயான்
தேவினுக்குவதி லோவெனச்சிறுவ ரென்மடிக்குதவல் செய்யவே
மேவியென்பணி மகட்புணர்ந்திடி விதத்தினெனுமர புய்யவே. ௭௩

அன்றுதேவிமொழி யாலிசைந்தவளொ டவனுமின்பொடு கலந்தனன்
மன்றலங்குழலி கருவிளைந்தினிய மகனொருத்தனை வழங்கினள்
இன்றுதேவெனது வேண்டல்கேட்டுமக வீந்துநீதியை யியற்றினன்
என்றுநற்றலைவி தாணிவன்பெய ரெனவிளம்பி மகிழ்வெய்தினள். ௭௪

வேறுமோர்மகவை யவளுயிர்த்தனள் மிகுத்தஅன்பினொடு முதல்வியும்
மீறுவன்பினொடு வாதிலின்றுவலி மேவுதௌவைதனை வென்றனத்
தூறுமின்பமடை வுற்றுளேனென வுரைத்திவற்குநவு தலியெனக்
கூறுநாமமிசை வித்துநாளுமகிழ் கூர்கருத்தினொடு வைகினள். ௭௫

மூத்ததேவியு மகப்பெறுஞ்செய றனக்கொழிந்தமையின் மொழிபணி
காத்துநின்றுபுரி யடிமைமாதையுயர் கணவனுக்கினிது நல்கினள்
மாத்தகுஞ்சுதனை யவளுமங்குதவ மருவிவந்ததொரு படையெனக்
காத்தெனும்பெய ரவற்களித்தனள் களிப்பின்மிக்கபெரு முதல்வியே. ௭௬

மீண்டுமவ்வடிமை யானமங்கையொரு மேதகுஞ்சுதனை யுதவினள்
காண்டலுந்தலைவி நெஞ்சமவ்விடை களித்துவாழ்வுடைய ளென்றனை
மாண்டகுந்தரையில் வாழ்மடந்தையர் வழுத்துவார்களணி வாழ்வியான்
பூண்டுளோமெனை நவிற்றிபாசெரெனு நாமமும்புகல லுற்றனள். ௭௭

மேயபோதுமையின் விளைவுகோட்குரிய காட்கனிற்பழன மீதுற
தாயிமின்கனிகள் கண்டுகொண்டுருப னாதயிற்றனுதவு தாய்கையில்
ஆயலிச்சனியி லீமெனக்குமென அக்குதகவையுரைசெய்யவென்
நாயகற்கவர னுற்றுனாய்க்கனியி னசையுமூண்டுகொ ணவிற்றெனு. ௮

முனியுநெஞ்சிறெனு தௌலைசொற்றிடலு மொய்த்தசிரிளைய வல்லியிக்
கனிநிமித்தமுனை மருவுமின்றிரவில் அனையனென்றகளறுற்றனன் [கநீள்
குனிதரும்மொழியின் மகிழ்வுகொண்டனைய கோதைமாவையிலடமொபு
பனிதரும்பழன நின்றுமீள்பொழுது பரிவுகொண்டெதிர் படர்த்துளாள்.

அடைர்துகண்டினையகனிகளாலுனை அடைந்துளோனனைக வெளையென
மடந்தையோடவனு மந்தநல்லிரவில் மருவலுற்றுமகிழ் வெய்தினான்
அடங்கலாதபுகழ் மேலவன்கருணை யாலடைந்துகரு வளையவள்
இடங்கொளித்தரையி னிற்சிறக்கவொரு மகவையீன்றுபரி வெய்தினாள்.

அடிவமமின்னையென தன்பனுக்கருளி னேனெனக்கிறைவனுதலாற்
படியினல்லருள் புரிந்ததென்றுரை பகர்ந்துவந்திலகாரெனுத்
துடியினேரிடை மடந்தை சொற்றனள் சுதற்குநாமமது மீளவும்
மடியில் வைக்கவுயர் கருவிளைந்தினிய மகனொருத்தனை வழங்கினாள். ௮௧

வீறுமிக்கபர னல்லசிதன மெனக்கு நல்கினன் விழைந்தியான்
ஆறுமக்களை யுயிர்த்தவச்செயலி னலுவந்தரிய காதலன் [கையாய்க்
ஊறுமன்பினுட னினியிசைந்துறையு மென்றனுடன் றுரைசெய்துவ
கூறுமப்புதல்வ னுக்குமிக்கசெபு லோனெனப் பெயர் குறித்தனள். ௮௨

(வேறு.) விஞ்சுவகை யோடுகரு மீளவுமடைந்தோ
ரஞ்சொலின வஞ்சியை யளித்துயரி லேயாள்
நெஞ்சிடை மதித்துரிய நீடுபெயர் தீனாள்
எஞ்சிலெழில் சேருமி மகட்கென விசைத்தாள். ௮௩

பன்னவரிதாகிய பரம்பர னிராகேல்
தன்னையு நினைந்துசெவி சாய்த்தருள் கொடுத்தான்
மின்னையனையாள்கரு விளைந்துவகை மேயோர்
நன்னல மிகுஞ்சுதனை நல்கியுயர்வுற்றே. ௮௪

நீடுமவ மானமதை நீக்கின னெனக்குக்
கேடில்பர னின்னுமொரு சந்ததி கிடைக்கும்
பீடுதவு மென்றுதகை பேற்றபெயர் யோசேப்
பீடுதரு மிம்மக வினுக்கென இசைத்தாள். ௮௫

ஈதுநிகழ்வுற்றபினி ரேகனருள் பெற்றோன்
மாதுலனை நோக்கியணி யேனலிவருந்தி
ஓதுபணியுன்னிடை உஞற்றியது தேர்ந்தாய்
போதுவிடை நல்குக வினிப்புகழ் பொலிந்தோய். ௮௬

நின்பணி புரிந்தடிய னேனெறியி னின்றே
அன்புற வடைந்தமனை மக்களொடு மாக

என்பதிவை யானறுக வேண்டுமின்னே
இன்பமுற வேண்டுமென வென்னவுரை செய்தான். அஎ

மருகனிவை சொல்லுதலு மாமனெதிர் நோக்கி
உருஞ்சவை யெற்குறுள முற்றதெனி லின்றும்
இருபரிவி லேனுமிறை யென்னையு னிமித்தம்
பெருகுற விருத்திபுரி பெற்றியறி வுற்றேன். அஅ

கேட்டபய னீகுவல் விளத்திடுக வென்றான்
நீட்டுபுகழோ னெனது நீள்பணியு நின்றேல்
ஆட்டினது தன்மையு மறிந்தனையி வேர்சால்
நாட்டினிடை யான்வரமு னனிசில தெரிகலில். அகூ

வந்தபின் மிகுங்கருணை வானவ னளிக்கும்
அந்தவுய ராசியினி லாயது விருத்தி
இந்தவெனதாகிய குடும்பமினி யெய்த
வெந்தவுயர் போதுபொருள் யான்பெறுவ லென்றான். கூ0

ஓதுமொழியாவையு முணர்ந்தருளி மாமன்
யாதுபெற வுன்னினை யிசைத்திடுக வென்றான்
தீதுதவிர் சிந்தைபெறு செம்மலு முவந்து
மாதுலனை நோக்கிவரு மாற்றமுரை செய்தான். கூக

நீயுதவ யான்விழைவ தொன்றுமிலை நினதே
யாயசெழு மந்தையினு ளாங்கடைவி னேடும்
போயுலவ லூற்றிலகு புள்ளிவரி கருமை
யெயதொறி பன்னையிலை யாவையு மெடுப்பேன். கூஉ

நின்னிடை பெறற்கிவை நினைப்பிலைகள் பெற்றாற்
பன்னுவரி புள்ளியகல் பனிலைகளு மெய்யில்
மன்னிய கறுப்பகலு மையுமனை தம்முட்
டின்னிலவை யான்றிருடி தோமுடைய வென்னே. கூங

இம்முறையெ னீதிகள் விளக்கிடுவ லினிநீ
அம்முறை புரிந்திடுகில் யானுமுன தாட்டைச்
செம்முறை புரந்திடுவ லென்னவுரை செய்தான்
உம்முறை சிறந்ததென மாமனு முரைத்தான். கூச

ஓதியபி னம்முறை யுறப்பிரி வுறுத்தே
மாதுலன் மறுக்குல் வெவற்றினையு மக்கள்
சூதகல மூன்றுதின மெவுவழி யாரம்
போதருத லுற்றவை புரந்திட விதித்தான். கூரு

மாசகலு மேனியுறு மற்றையவை யாவும்
பேசியுள வம்முறை பிரித்தவை தனக்காத்
தேசுபெறு மம்மருமகன்புடை செறித்தே
யேசறவளித்திடென நந்தன னிலாபான். கூசு

புன்னையொடு லூசுசினை பொங்குசெழு மர்மோன்
ஏனனுமர நற்கிளைகள் வெட்டியிடை யிடையே
துன்னநனி வெள்ளைமறு தோல்களைத லுற்றே. ௯௭

அம்புநசர் தாசமுட னூடுவரு போழ்திற்
பம்புநசை யிற்பொலியு மவ்விடை படர்ந்தக்
கொம்புகளை சீர்பரு கிடத்தினயல் கொடுபோய்
கம்பியவை நோக்கிடமு னண்ணவெதிர் வைத்தான். ௯௮

இன்னசெய லாலவைக ளீறுபொழுதெல்லாம்
பன்னிற மறப்பறள்கள் பாரிடை யுயிர்த்த
அன்னவை யனைத்தையு மவன்பிரிவு செய்தே
தன்னவை யெனக்கொடு தனித்துற வமைத்தான். ௯௯

கூடுபொழுதிற்பொது திறங்கருமை மேவும்
ஆடுகளின் மாமுசமு மங்கெதி ரமைப்பான்
ஆடல்செறி போதுகிலை யாங்கமல னெய்தப்
போடுதை லாதுபொலி யாதவிடை போடான். ௧00

ஆயிவைக ளாற்பல மகன்றவைக ளெல்லாம்
மாமனவை யாகவலி மனனுவ தனக்காய்ப்
போமுறை புரிந்தனனி வாறுநனி பொற்போ
டேமுற விருத்தியவ னெய்தின னிருந்தான். ௧0௧

(வேறு.) எந்தைதன் பொருள்க ளெல்லாந் தன்வசமாக வெய்தி
அந்தநன் னிதியாற்செல்வ னாயினனென விலாபான்
மைந்தர்க ளுரைத்தவாறும் மாதுலன் முகம் வெறுப்பாய்
வந்ததும் யாக்கோப்பென்னும் வள்ளலங் குணர்ந்தானன்றே. ௧0௨

இன்னவக் காலந்தன்னி லிறையவ னவனை நோக்கி
உன்னிருந் தாதையோடுன் மரபினோ ரொன்றிவாழும்
பொன்னகரினுக்கு மீண்டும் போதரல் புரிகவுன்பால்
மன்னுவான் றுணையதாக வைகுவல் யானென்றான். ௧0௩

மேலவர் வாய்மைகேட்டு விளங்கிழை மனையாரைத் தன்
பாலவன் பழனந்தன்னிற் படர்ந்துற வழைப்பித்தென் றன்
மேலுமை யீன்றதாதை முகமுன்போ லின்றிவேறு
கோலமாய் மாறுகொண்ட கோளினைக் குறித்துக் கண்டேன். ௧0௪

ஆயினு மெந்தை தேவன் றுணையுளே னாதலஞ்சேன்
எயின பணிக ளுந்தைக் கியான்புரிந் ததுநீர் தோவீர்
மேயின சம்பலத்தைப் பதின்முறை மாற்றி வெய்யோன்
தீயன புரிந்தானேனுந் தீங்குறு தமலன் காத்தான். ௧0௫

எந்தநன் னிறத்தகுட்டி யெனக்கென வவன்சொன் னாலும்
அந்தநன் னிறத்தவாக வாடுக ளீன்ற வும்மா

இந்தனன்முறையுந் தந்தைக் குடையன விலையை யென்பால்
வந்தறவருளால் மேலோன் வழங்கின னெனக்கு மாதோ.

ஆடுகள் பொலியும்போதில் ஆனவென் கனவிலாங்கே
கூடுறுங் கடாக்களெல்லாம் பன்னிறங் குலவக்கண்டேன்
சேடுறுந் தேவதூதன் கனவினிற் செறிந்துன் மாமன்
வாடுற வுனக்குச்செய்த வஞ்சனை யாவுங்கண்டேன். ௧0௭

ஏற்றிநீ விழியானேக்கு சென்றன னப்போ தன்னன்
போற்றிய மொழிபோற் பார்த்தேன் பொருந்துமை வரிபல்புள்ளி
மேற்றிகழ் படிவமெய்தி மேயவாய் விழைந்துகூடித்
தோற்றிய கடாக்கடம்மைத் தொகுத்துநீ நோக்குவாயே. ௧0௮

நீயொரு தூணினன்று நேர்ந்தபி டேகஞ் செய்து
தூயசங் கற்பஞ்செய்பெத் தேலினிற் றோன்றி நின்முன்
மேயநற் காட்சிதந்த மேலவன் யானே யின்னே
யேயநின் சுற்றத்தார்பா லேகுக வென்று னென்றான். ௧0௯

இங்கவ னியம்பக்கேட்டுத் தேவிய ரெந்தை யில்லிற்
பங்குட னுரிமை யெங்கட் கினியுண்டோ பகருவாய்நீ
அங்கவன் றனதுபார்வைக் கந்நிய ரானோமந்தோ
எங்களை விற்றுக்கொண்ட பொருளெலா மினிதுண்டானே. ௧௧0

எந்தைபா லிருந்து தேவ னெடுத்தரு ணிதியமெல்லாம்
வந்துள நமக்கு மெங்கள் மகார்க்குமே யுரியவாகும்
முந்துற வுனக்குத் தேவன் மொழிந்தபோற் புரிகவென்றே
சந்திர வதனமாதர் சாற்றின ரென்ப மன்றே. ௧௧௧

மனைவியர் வாய்மைகேட்டு வாய்ந்ததன் மக்களோடுங்
கனகதமிவர்ந்து செல்வங் கவினுநீள் பதான ராமில்
தனதெனக் கிடைத்த வாடுந் தரும்பல நிதியுங் கொண்டே
அனகன தருள்பெற்றேனு மவருடன் வழிக்கொண்டானே. ௧௧௨

தாதையன் றூட்டின் பாலில் மயிர்களை தருதற்காகப்
போதலுற் றிருந்தா னந்தப் போதினி லிராகேலன்னு
ளைதரம்புரியுந் தேராபீன்களை யன்று வெளவி
மேதகு கணவனோடும் வழிச்செல மேவினாளே. ௧௧௩

இவ்வகை யிலாபானென்று மறிந்திடாதன்றி யாக்கோப் [இக்
கெவ்வகைப் பொருளுங்கொண்டே யெழுந்தன னொளித்தாங் கே
கௌவை கொடிரை நீராற்றைக் கடந்துபோய்க் கிலியாத்தென்னும்
அவ்வுயர் கிரியைநோக்கி ஓடின னகன்றுபோனான். ௧௧௪

ஓடிய மூன்றாநாளி லுணர்ந்தடல் மாமனன்று
கூடினன் றுணைவரோடுங் கொம்மெனப் பின்சென் றோடித்
தேடினன் கிலியாத் தென்னுங் கிரியி லெழுநாளின்பின்
நாடின னவனையங்கே கண்ணிடக் கண்டானன்றே. ௧௧௫

சொப்பன மதனில் மேலோனை தோன்றியே யிலாபனுக்கன்
றப்புகழ் யாகோப்போடே யன்புறு மொழிகளன்றி
வெப்புறு மொழியாதேனும் விளம்புத லொழிகவென்றே
செப்பினன் விழித்தங்கன்னோன் மருமகன் பாலிற்சேர்தான். ௧௧௬

அக்கிரி மருங்கில் யாக்கோப் பமர்ந்தனன் படங்கில் மாமன்
புக்குறு துணைவரோடப் பொருப்பக மருங்கிற்றானும்
தொக்குற விரிகூடாரந் துலக்குற வமைத்து வைகித்
தக்கதன் மருகனறன்னை நோக்கினன் சாற்றலுற்றான். ௧௧௭

வஞ்சநீ யெனக்குச் செய்தே வைவடி வாளங்கொண்டு
வெஞ்சிறைப் படுத்துவார்போல் மிக்கவென் புதல்விமாராம்
வஞ்சியர் தம்மைக்கொண்டு வந்ததென் மறைந்தெனக்கோர்
செஞ்சொலு முரையாதோடுஞ் செய்கையென் செப்புவாயே. ௧௧௮

கீதபேரிகைநற் றாளங் கின்னர முழக்கமிஞ்ச
ஓதரு மகிழ்ச்சியோடு முனையா னனுப்பவின்றி
ஏதமிலெனது மைந்தர் முதலினோரிடுமின் முத்தம
காதலிற் பெறலுமின்றிக் கரந்துபே தமைசெய் தாற்றாய். ௧௧௯

உந்தமை வருத்தவன்மை யுண்டெனக் கெனினு முங்க
டந்தையின் கடவுளென்னைத் தடுத்ததா லிடர் தந்திலேன்
வந்திடும்பொழுது நீரென் மனையினிற் றேவர் தம்மை
முந்துறத் திருடலுற்ற தென்னென மொழிந்திரென்றான். ௧௨௰

குறித்தசொற் கேட்டபோதக் கோதிலா னெனதில் லாரைப்
பறித்தெனை விடுவையென்று பயந்துளேன் தேவர்தம்மைச்
செறித்தவெக் கள்வனேனுஞ் சீவனுக்குரிய னல்லன்
மறித்துநீ யிவர்சான்றாயெம் மாட்டுறி லெடுதியென்றான். ௧௨௧

சேல்விழி யிராகேலன்று திருடிய தோரா தன்னனல்
சால்புற வுரைத்தல் கேட்டச் சாரலஞ் சிகரக் குன்றின்
பாலவர் செறித்துவைகும் பாளய மொவ்வொன்றாக
வெலுமவ் வளவுந் தேடிப் பார்த்துமங் கெய்திலானாய். ௧௨௨

மானனவிழி யிராகேல் வதிந்தபா ளயத்திற் போனான்
தேனன மொழியா டந்தை சேருமுன் தேராபீங்க
ளானவை தமக்குமேலாங் கத்திரிக் கலணை வைத்துத்
தானதன் மேலதாகத் தங்கின ளிருந்தாளன்றே. ௧௨௩

பாடியெங் கெங்குநாடிப் பார்த்துமுன் வரயிருந்தே
நீடிய விழியாள் பூப்பால் நீவர யெழாதிங் குற்றேன்
கூடியபுகழோய் கோபங் கொண்டிடே லென்று ளங்குந்
தேடியுங் காண்கிலானாய்த் திகைப்பொடு நின்றான் மாதோ. ௧௨௪

அஞ்சிடும் பழிக்குநீங்க லானபின் மாமன் றன்மேல்
வெஞ்சினங்கொண்டு வெஞ்சொல் விளம்பியவ் வண்ணனோக்கி

விஞ்சுழுக் கிரமோடென்னைத் தொடர்ந்துநீ மேவயான்செய்
நஞ்சினை யனையகுற்றம் பாவமென் னவிற்றுவாயே. ௪௨௫

தொக்கவெம் படங்குமுற்றுஞ் சோதனைசெய்து ளாய்நீ
தக்கநின் பொருளில்யாது சார்தரக் கண்டா யிங்ஙன்
புக்குறப் பார்த்தெடுத்தாற் போந்தவித் துணைவர் முன்னீ
வைக்கமற் றிவர்கியாயம் நமக்கிடை வகுப்பர் மன்னே. ௪௨௬

இருபதுவருடம் யானுன் னிடத்தினி லிருந்தே னங்குன்
றிருவைவற் காலிதானுந் தொகுஞ்சினை யழிந்ததில்லை
மருவுநின் கடாக்கடம்மை மற்றியா னுண்டதில்லை
உருவுயி ரிழந்தவெல்லா முனக்கின்றி யெனக்காவுற்றேன். ௪௨௭

இரவினிற் பகலிற் சோரம் போனவை யெவையும் யானே
தாலுற வேண்டுமென்று சாற்றினை திவாவில் வெய்தாய்
விரவிய வெயிலு மல்லில் மிக்கெழு பனியுநாளும்
பருவரலெய்த வென்னைப் பட்சித்த வாகுமன்றே. ௪௨௮

துயிலிரு விழிகளுக்குந் தூரமே யாகவிவ்வா
றியலவைந் நாலாண்டங்குன் னில்லிடை யிருந்தே னம்மா
பயிலுறும் பதினாலாண்டுன் பாலகிமார்க்கா வாறாண்
டுயருமுன் மந்தைகட்கே யாகவு முழைத்தே வித்தேன். ௪௨௯

பற்றுமென் சம்பலத்தைப் பதின்முறை மாற்றலுற்றாய்
உற்றவென் றந்தைக்கன்னான் றந்தைக்கு முரியதேவன்
பொற்புற வெனக்குநாளும் புரிந்துநற் றுணையுறானேல்
ஏற்றிட யாவுங்கொண்டு வெறுங்கையோ டனுப்புவாயே. ௪௩௦

கடவுளென் சிறுமையோ டென் கைப்பிரயாசந் தன்னைப்
படர்வுறு மிரக்கத்தோடும் பார்த்தன னதலாலே
அடலுறு முன்னைப்போன அலிலெனக் காகத்தோன்றி
மிடலுறக் கடிந்தானென்றும் விளம்பின னென்பமாதோ. ௪௩௧

மருகனன் றுரைத்த மாற்றம் மாதுலன் கேட்டே யிந்தச்
சுரிகுழல் நங்கைமாரென் சுதைகளா மினைய மைந்தர்
உருகுமென் புதல்வருன்பா லுற்றவிம் மந்தை யாவும்
பெருகுமென் னவைநீகாணும் பிறவுமென் னவைகளாமே. ௪௩௨

மான்விழி மக்கடம்மை மற்றவ ரினிதினீன்ற
கான்முளை களையானென்னே செய்யலாங் களறுவாய்நீ
கோன்கெழு விளக்கமாக நுவலுமோ ருடன்படிக்கை
யான் விரும்புற்றே னெங்க ளிருவர்க்கு மியற்றவென்றான். ௪௩௩

மல்லலம்புயத்தோன் மாமன் வழங்கிய மாற்றங் கேட்டோர்
கல்லினை யெடுத்துத் தூணாக் காண்டக நிறுத்தலுற்றுப்
பல்கலிங் குதவுமென்னப் பகர்தலுந் துணைவ ராணோர்
அல்கலில் சற்கள்கொண்டே அவ்விடை குவைசெய்தாரே. ௪௩௪

பொருந்துமக் குவைக் கணமீதே புசித்தருந்தசன முண்டார்
அருந்தியல் இலாபானேகார் சத்ததா வுதன்பேரென்றுன்
இரும்புகழ் யாக்கோப்பெண்போ னெழிற்கலே பேசுசுதற்கு
வருந்திரு நாமமென்று வழங்கினனெனப மன்றே. ௬௰௫

மாதுலன் மீண்டும் நோக்கி மருகனே பிரிந்து நாகநன்
போதரலுற்ற பின்பெண் புதல்விய ராஞேர் தம்மைப்
பேதுறவருத்தி வேறுபெண்களை மணஞ்செய் வாயேல்
ஏதமில் பரமனெங்கட் கிடைகரிதை தீர்ப்பனன்றே. ௬௰௬

யாருமிவ் இல்லேத்தேவே யெமக்கொரு சான்றதாகும்
பாரென விலாபான் சொன்னபடியிறு விசற்று மிளப்பா
போதா மிளையகல்லின் குவைகரி யெனலாற் பேசும
சீருறு கலேயேதனென்னும் நாமமாக் தெரிசகுயகாமே. ௬௰௭

மீண்டுமம் மாமனிக்கற் குவையொடிவ் வியன்கற்றூணைக்
காண்டியா னுனக்குசதிமை கருதியித் தொகுத்திக் கப்பலே
தாணடுத லறவு மெனமேற் றீதுக் தரக்கடாதே
யீண்டுறலறவு மெமகட் கிவைகளே சாட்சியென்றோ. ௬௰௮

உக்கைதயோ டெக்கைதயாதி ஒதாநங் குரவராஞேர்
தந்தயா பரனுமேலோன் தகுநடுத் தீர்ப்போனுகி
வந்துநம் மிடையே மன்னக கடவனென் றுரைத்தான் வள்ளல்
தங்கைதன் பரனமே லாணை சாற்றின னனேயபோதே. ௬௰௯

ஆணையிட்டதன்பின்வெற்பில் அரும்பலி யுதவிப்பினனர்
ஊணையின் றிடுமினென்றுன உண்டிராத துயினறெழுதார்
பூணுறு புகழிலாபான் புதல்வர்புத் திரிகள்யார்க்கும
வணுறு மாசிசொல்லி முத்தமிட் டெழுந்துபோனுன். ௭௰

(வேறு) மாதுலனும் பிறருமெழுந் தகன்றபின்னர் வழிக்கொண்டு யாக்கோப்பவ் வரையை நீங்கிப்
போதலுறு நெறியினெதிர் தேவதூதர் புகுந்தவனைச் சந்தித்தார் புகழ்சேரன்னுன
ஈதுபரன்சேனையென்றுசொல்லியந்த இருந்தலத்தினுமமா னயீமென்றுன்
தீதுதவி ருளமுடையோன் அதன்பின்றம்முன் செய்யமுகவு காணவகை சிந்திததானே. ௭௰௧

சிந்தனைசெய் தவன்றனது தூதர்தம்மைச் சேரவழைத் தின்னேசீ ரெம்முன்பாற்போய்
இந்தவுயர் தினமளவு மிலாபான்பாலில் யானிருந்த செயலுங்கொ ரங்கள்மந்தை
தந்தனபல் பணிபுரியுந் தாசராதி தகப்படைத்தே னென்பதுவுந் தயையுன்பாலில்
வந்துபெறு மாறெனையாள் வள்ளலேயுன் மலரடிமுன் தெரிவித்தே னென்னுமாறும். ௭௰௨

போயீர மவனுளத்திற் பொருந்துமாறு புகன்றிடுவீ ரெனவவரை யேசாவைகுஞ்
சேயீர்நாட் டினுக்கேக முன்னேவிட்டான் சென்றுகண்டத் தூதுவர்கள் திரும்பிச் சேர்ந்து
நீயியம் மொழிநும்முற் குரைத்துமீண்டோம் நின்னையெதிர் கொளநானூ ருட்கள் சூழ
மேயீண்டு வரவெழுந்தம் மிக்கோன்றானும் விரைந்திட்டா னெனவவற்கு வினைடாரன்றே. ௧௪௪

வருகின்றா னெனுமாற்றங் கேட்டபோதே மனங்கலங்கி யாக்கோப்பு தம்முன் வன்பால்
ஒருதன்கூ றுடைந்தாலு மொருகூறேனு முய்யலா மெனவுளாத துன்னித்தன்பால்
மருவுற்ற சனத்தொகைக டமையுமாணின் வகைகளையு மொட்டையையு மங்கப்போதே
இருநற்கூ றாகவகுத் திருபாலாக ஈரிடத்தேநிற்கநிறுத்திட்டான்மன்னோ.
இந்தவிதப் படிவகுத்து நிறுத்தியன்னோன் எவராலுமளக்கவொண்ணா இறையை நோக்கி
எந்தையெனுமாபிரகாமேத்துந்தேவேஎனையீன்றவீசாக்குக்கினியகோவே
வந்துனது தேயந்துன் சுற்றத்தார்பால் மன்னுநன்மை வழங்குவலென் றருளுநாவோய்
எந்தவுன திருந்தயைக்குஞ் சத்தியங்கள் எவற்றினுக்கும் அபாத்திரனா யிருக்கின்றேனே. ௧௪௫

கைத்தண்டி னுடனொழுந்தன றியோர்தானுற்றைக் கடந்துசென்றே னின்றிருகூ றாக்கானும்
இத்தண்டி னெடிமீண்டே னேசாவென்னோ டிளஞ்சுதருமன்னையரா மிவருஞ்சேர
மொசதுண்டு முரியவடித் திடுவானென்று முன்னியஞ்சு மெனைக்காப்பாய் மெய்யாநன்மை
வைத்தென்றன் குலமதனைக் கடற்சார்மண்போல் மலிவிப்பே னென்றனையே யென்றான்மாதோ. ௧௪௬

தருமொழிமற்றிவைகூறியங்கக்கங்குற்றங்கியவன்றம்முன்னுமேசாவுக்கு
வெருமதியாத் தன்வசத்தி லுள்ளவற்றில் வெள்ளாடோ ரிருநூறுங் கடாவைந்நான்கும்
தொகுதுருவை யிருநூறு மைநான்கேறுஞ் சுவைப்பால்கொ ளொட்டைமுப்பான் றொடர்கன்றோடும்
மிகுநாற்பான் கடாரிகளுங் காளைபத்தும் மேவிருபான் பெண்கரமுங் குட்டிபத்தும். ௧௪௭

பிரித்துத்தன் பணிசெய்யொவ் வொருவன்கையிற் பெயர்த்தொவ்வோர் தொகுதிகல்கிப் பெரியோனுக்கித்
தெரித்தொவ்வோர் தொகுதிக்கும் வெளியூடாக்கிச் சேர்த்தென்முன் நடந்திடுவீ ரெம்முன்கண்டே

தரித்தங்கே யெதிர்பகலை யாரானெக்கு சார்கின்ற யார்க்குடைய வ்வை
சாற்றென்றால்
விரித்தன்பு தம்முனுக்கின் றியாக்கோப்பீயும் கெகுமதியின் மேவுகின்ற
னவனுமென்க. கசஅ

என்றுபணித் தேலையர்க்கு மிதுபோலோதி யிம்மென்ன விசைத்திட்டா
ளிலையவாறே
அன்றவற்றை முன்னனுப்பிச் சாந்தமாக்கி அவன முகத்தைப் பின்புக
ணடா லங்கீகாரம்
இன்றுபுரிந் துவந்திடவுங் கூடுமென்ற இயம்பியுய்த்தான் வெகுமதிமு
ன் பேகிற்றன்றேன்
பொன்றிகழும் பாளயத்திற் றங்கிக் கங்குல் புலர்ந்திடமுன் னேயெழுந்
து புறப்பட்டானே. கசக

மனைவியர்க ளிருவரையு மடிமையாகும் மகளிரையும் பதிெனாருமா மக்க
ளோடிவ்
வனைவரையு முடன்கூட்டி யாப்போக்காற்றை அன்றுகடந் தனைத்துள்
ள பொருள்களோடும்
கனைதிரைநீர்க் கரையேறிப் பின்பங்கோர்பாற் கடவுளருள் பெற்றுடை
யோன் றனித்தேயுற்றான்
புனைபுகழ்மே லவனொருவன் அவன்முன்றோன்றிப் பொழுதுவிடி வள
வுமற்போர் புரிந்தானம்மா. கஙo

புரிந்தவனைச் செயிக்கவொண்ண தென்றுகண்டு புங்கவனங் கவனிடுப்பு
ச் சந்தைத் தோட்டான்
பரிந்தவனே டிவ்வாறு மல்லயுத்தம் பயிலுகையி லிடைச்சந்திற் சுழுக்கி
ற்றுமால்
பிரிந்தகல விடுகவினி யென்னைவைகல் பெயர்ந்ததென்ற னம்மேலோ
னுசி யென்மேற்
சொரிந்தகல்வ தன்றிவிடே னெனவத்தோன்றல் சொல்லினன் றாயோ
னுன் பேர்சொல்லென்றான். கஙக

என்னுமம் யாக்கோப்பென் றிசைத்தான் றேவை இங்குவென்றாய் மனு
டரையும் வெல்லுமாற்றால்
நின்னும மினியிசிர வேலென்றையன் நிகழ்த்தநின்பே ரெவனென்றான்
நிற்கேனென்று
பொன்னும் புயத்தவனுக் கங்கனுசி புகன்றகன்றான் புங்கவனவ் வள்
ளறேவை
முன்னக முகமுகமாக் கண்டவாற்றால் முடியாதென் னுயிர்க்குய்வு முன்
பெற்றேனே. கஙஉ

எனவுரைத்தத் தலத்தின்பேர் பெனியேலென்றே இசைத்ததனைக் கடந்து
வழி யேகும்போதிற்
கனகிரணவொளியிரவி யுதித்ததன்னால் கவினிடுப்புச் சந்தினிடை வா
க்கலானன்

அனைவ னிடைக்கந்து நரம்பைத்தொட்ட வாற்றினல் அவன்குலத்
தோ ரிக்நான்காறும்
மனநெறியா லிடைச்சேர்ந்து நரம்புதன்னை வாங்கியுணும் வழக்கமதை மறு
த்தார்மாதோ. க௫௩

பொருவரிய பெருங்கருணை முதல்வனுங்கே புகன்றருளு மாசிபெற்றுப்
புரிவினுேடும்
மருவுமனத் துறுபணிப்புச் சிறிதுமாறி வள்புகழ்சேர் யாக்கோபு வழிச்
செல்போதில்
பொருவலிசேர் வரிசிலைக்கை யேசாவென்போன் போந்திடநா னூருட்
சன் புடைதற்சூழ
மருவுறவன் றெழுந்துபடர் வுற்றுமேவி வள்ளலையங் கெதிர்கொள்வான்
வந்தானன்றே. க௫௪

வருவதுகண் டெழுந்துமக்க டம்மையீன்ற மாதரிட மிருக்கவைத்திட் ட
வரில் முன்னுத்
சருபணிசெய் மகளிர்தமைத் தனயரோடுஞ்சாருவித்தா னிலேயாளைப் புத
ல்வரோடும்
மருவவிடை யாகவைத்தா னிராகேல்தன்னை மைந்தனொடும் பின்னாக
வைத்தான் முன்றான்
இருநிலமே ரேழுதரங் குனிந்துதாழ்ந்தே யேசாவின் சமீபமதி லெய்தினு
னே. க௫௫

தனக்கெதிராய் வருதல்கண்டே யோடிமுன்னேன் தம்பிகழுத்தினைத் தழு
வி முத்தந்தான்
மனக்களிவு பெற்றழுதா ரிரண்டுபேரும் மகளிரையும் மைந்தரையும் நோ
க்கி யேசா
உனக்கிவர்யா ருரையென்று னிளவல்நோக்கி உனதடியேற் கிறைதருமி
ன் மக்களென்றான்
புனக்கொடிபோல் பவர்சிறந்த முறையே போந்தப் பொருதிறலோன்
முன்னணுகிப் போற்றினரே. க௫௬

(வேறு) முன்னவ னிளையவன் முகத்தை நோக்கியே
என்னெதிர் வருதிரள் யாவுங் கண்டுளேன்
அன்னவை யென்னென வவைகளண்ணலே
உன்னருள் பெறற்கென இளவலோதினன். ௫௭

எனக்குள தெம்பியே யெனக்குப் போதுமால்
உனக்குள துன்னதா யுறுகவென்னவே
மனக்களி வுறுமுன்னேன் வருத்தனம்பின்னேன்
நினக்கெனிற் றயையுறில் நீகொளண்ணலே. ௫௮

அடியனேன் மிசைநினக் கன்புண்டாகுமால்
கொடியவான் புகழினேய் நின்முகத்தையான்
கடிமகிழ் வாகவே காணப்பெற்றது
முடிவிலா முழுமுதல் முகங்கண்டன்னதே. ௫௯

பேரண லவைகளை நயகண் டயருள்
ஆருரு மெம்மிறை யருள் லுற்றனன்
பூரண செல்வம்யான் பொருந்தி னேன்கொளென்
றேரணி யிளவல்போற் றுதலினேற்றனன். ௧௧௦

இளையவன் வெகுமதி யேற்ற பின்னரிங்
குளைவற யாமினி யொருங்கு போதுவோம்
வளைதரு மெவற்றெடும் வருக வென்பினே
களைகளு முன்முன்யான் கதிக்கொள் வேனென்றான். ௧௧௧

ஈதவ னிசழ்த்தலு மிளவ ஞேக்கியென்
காதலர் சிறியவர் கறவை யின்குலம்
போதுவ வென்னுடன் பொருவி லண்ணலே
தீதற வின்னவை தெரிந்து ளாயன்றே. ௧௧௨

வேகமா யோர்தினம் விரைவின் மந்தைகள்
ஏசவுய்த் திடினவை யிறந்து போவலால்
ஆகமா ரழகுடை யண்ணல் முன்னர்நீ
போகயான் பின்னருன் புக்கில் சேருவேன். ௧௧௩

என்னவாங் குரைத்தன னிளவ லென்றெடெய்
தின்னவர் சிலரைவிட் டேகு வேனென்று
முன்னவ னவ்விடை மொழிய வேண்டிலேன்
உன்னருள் போதுமென் றிவனு மோதினன். ௧௧௪

அந்தநற் றினத்தினி லதன்பின் மூத்தவன்
வந்தவவ் வழிமரீஇ நடந்து மல்குசீர்
முந்துதன் னூர்முக நோக்கி முந்தினன்
இந்தநல் லிளவல்சுக் கோத்துக் சேகினன். ௧௧௫

கடிமனை யொன்றவன் கட்ட லுற்றனன்
குடிசைகள் மந்தையா னிரைக்குங் கோலினன்
படியினிற் சிறந்ததப் பதியங் காதலால்
கெடியசுக் கோத்தென நின்று பேர்பெறும். ௧௧௬

பண்புறு மூத்தமன் பதான ராமைவிட்
டெண்பெறு கின்றகானி லெய்தியே
கண்ணுசா லேமென நவில் சிகேமரு
கண்ணுறப் படங்கெதி ரவணிறுத்தினன். ௧௧௭

இத்தகு வெளியினி லிவன் சிகேமின
தத்தனு யமர்ந்தகா மோரனித்திடும்
புத்திர ரிடத்தினிற் பொருந்து வெள்ளிநூ
றொத்திடுநன்னில மொன்று வாங்கினன். ௧௧௮

அவ்விடை மிகுபுக ழுடைத்த வண்ணலோர்
திவ்விய வேதிகை செய்ததற்கவன்

செவ்வியெல் லெலோகையீ சிரவெலென்றிடும்
அவ்விய ஞமம் நறைந்திட் டானரோ. ௧௬௯

(வேறு.) எண்ணார்புகழ் யாக்கோப்பொடு லேயாளருள் புதல்வி
விண்ணார்மதி யிடைமான்விழி மிளிர்வுற்றென வொளிர்மைக்
கண்ணாளுயர் தீனுவணி கவினத்தரு நாட்டின்
தண்ணார்மொழி தருகன்னியர் தமைக்காண நடந்தாள். ௧௭௦

யோமோர்திரு மாணெழில் புகழுங்க ரரசான்
காமோர்தரு சிகேமெதிர் கண்டேமயல் கொண்டே
ஆமோருழை யகலைக்கவர்ந் தனையாங்கிறை தொலையா
யாமோர்வரு கொடிதாம்பழி யெய்துற்றன னன்றே. ௧௭௧

இப்பாவ மியற்றுற்றவவ் வீவிக்குல வஞ்சன்
துப்பாரித ளப்பாவையிற் றெருமன்புளம் வைத்தே
அப்பரன்மிகு நண்புய்த்தவ ளகத்தைக்கவர் மொழிகள்
செப்பாவித முறநெஞ்சிடை சிந்தித்தொழு குற்றான். ௧௭௨

தன்னெஞ்சுறு நினைவைத்தரு தாதைக்குரை தந்தே
இன்னங்கையை யான்மாமண மெய்தற்கரு ளென்றான்
பன்னற்கரு மித்தீவினை பரவும்புகழ் யாக்கோப்
பென்னுந்தகையுடையான்செவிக்கெரியுற்றெனக்கேட்டான். ௧௭௩

கேட்டின்பகல் நெஞ்சங்கொடு கேடற்றவன் மக்கள்
ஆட்டின்புடை வெளிபுக்கவ ரணுகும்பொழு தளவும்
வாட்டங்கொடு மௌனத்தொடு வைகுற்றன னப்போ
தீட்டுந்திற லுறுமீவிய ரிறையவ்விடை யானான். ௧௭௪

இசைதுற்றிடு புகழ்சிர வேலீன்றிடு மீளஞர்
அசைவுற்றிடு முளமோடது கேட்டேயவ ணணு
நசைபெற்றிட வொண்ணாப்பழி வலிதிற்புரி நவையால்
வசையுய்த்திடு படிறன்மிசை மனமொத்து கொதித்தார். ௧௭௫

அவ்வேலையி லடலீவிய ரதிபன்றன தெண்ணம்
செவ்வோர்க்குரை செய்தென்சுதன் சிகேமின திதயம்
வெவ்வேல்விழி நும்மங்கைதன் மீதுற்றுள ததனால்
இவ்வார்குழ லியைமாமண மிவனெய்திட வீவீர். ௧௭௬

உம்மங்கையர் தமையெங்குல முறுமைந்தருக் கருள்வீர்
எம்மங்கையர் தமையுங்குல விளமைந்தருக் கீவோம்
நம்மன்பு தழைக்கும்படி நாமிப்படி குழுமிச்
சம்பந்தமுறும் வாழ்வது தகவுற்றிட விசைவீர். ௧௭௭

எம்மோடிவண் வாழ்வீருழ தெதிரிங்குள திந்நா
டிம்மாட்டினில் வைகிப்புய ளிசைவாணிக மாற்றி
உம்மாநிதி பெருகுஞ்செய லுறவேபுரி வுற்றுச்
செம்மாந்துறை தருவீரெனத் தெரித்திட்டன னன்றே.

நிறைப்புரி சீகேமுமப் போதிற்றவை செய்வீர்
எறைப்பெற நீரெண்ணினு மீவேனிசை பரிசம்
ஒதெப்பெரு முபகாரமு முளமுற்றள வருவ்வேன்
மாதைத்திரு மணமெய்திட வழஙகும் மெனக்கென்றான். ௧௬௯

(வேறு.) அம்முறை சொலக்கேட் டன்னோர் ஒளவிய மகத்துட்கொண்டே
செம்முறை திறம்பிச் சீகேம் சேயிழைத் தீனாளுக்குத்
தெம்முறை யாகச்செய்த தீமையினிமித்த செஞ்சி
னெம்முறை யுளதென் றோரா வகையெதி ரியம்பினாரே. ௧௭0

விருத்தசே தனமுறாதார் மேவிட நங்கைதன்னை
அருத்தியோ டதலெங்கட் கடாதது நிந்தை யாமால்
திருத்துமச் செயலாண்மக்கள் அனைவிருஞ் செய்தீராணற்
கருத்துற நீவிர்சொற்ற முறைப்படி கலந்து வாழ்வோம். ௧௭௧

இம்மொழிப் படிநீர் செய்ய இசைகிலீ ராகில் யாங்கள்
எம்மெழினா மானைக்கொண்டே யிப்பொழு தகல்வோ மென்றார்
அம்மொழி கேட்டலோடு மவன்மிசை கொண்ட கட்பால்
விம்முறு காதறாண்டத் தடையற விழைவுற்றாரே, ௧௭௨

வெர்தொழிற் படிற்றொழுக்கம் மேவுமச் சீகேமென்போன்
தந்தைதன் மனையிலுள்ளோர் யாரினுந் தலைமை பூண்டோன்
அந்தநற் புரத்தின்வாயி லதனிடைத் தாதையோடும்
வந்துயின் றங்கணெய்து மாந்தரை வதனநோக்கி. ௧௭௩

ஈசிரவேல ரெம்மோ டிணக்கமா யுற்றாரிங்கு
வாசமா யவர்களேற்ற வாணிகஞ் செயவா ரிந்தத்
தேசமாங் கவரும்வாழ விரிவுறச் சிறந்ததாகும்
ஏசறு மணஞ்செய்தன்னோ ருடன்கலந் தினிதின் வாழ்வோம். ௧௭௪

அல்லதிங் கொருப்பாடெயதார் அவருடன் கலந்தா லன்னோர்
செல்வங்கள் பலவுநம்பாற் சேரவுங் கூடுமென்றே
நல்லதென் றுளநேர்பட்டு நாமவர் போலாயன்னோர்
சொல்லியபடியே செய்யத் துணிவதே கருமமென்றான். ௧௭௫

அன்னவக் காலந்தன்னில் அணிநகர் வாயிலூடாய்த்
துன்னின ரெவருங் காமோர் சொற்றிடு மொழியுஞ் சீகேம்
பன்னியவுரையுங் கேட்டுப் பகருமாண்மக்கள்யாரும்
உன்னுமப் படிவிருத்த சேதனமொருங்குற் றாரே. ௧௭௬

ஆர்ந்தக வெண்ணிமூனாம் தினத்தினோ வவர்க்காம்போழ்தில்
வந்தெழிற் சிமேயோனு மெறள்வலி யிலேவிதானும்
காந்தகவ் காத்திற்றங்கி கண்ணலர் புரத்தைநோக்கிப்
போந்தனர் சிறிதுமச்ச முளத்தறப் புகுந்தாரம்மா. ௧௭௭

புக்கனர் துணிவேகொண்டு புருடராயுள்ளோர் யாரும்
ஒக்கவன் ஞெழியுமாறுங் குடலுயிர் வெவ்வேறாக்கித்
தக்கவன் றிறற்காமோருந் தநயனு மடியவானால்
மிக்கதம் வலிமைகாட்டித் துணைவியை மீட்டாரன்றே. ௧அ௮

அணியிழைத் துணைவிதனபால் அமர்ந்துள நிறையைநீசர்.
துணிவொடு கவர்ந்தவாற்றாற் ஞெடர்ந்தினர் மீளமாய்ந்தோர்
தணிவறு செல்வமெல்லாந் தமதெனக் கவர்ந்தாரந்த
மணிநக ரத்துமிக்க வெளியினு மருவினரே. ௧அ௯

கண்டன மந்தையாவுங் கத்தபத் தொகுதியாவுங்
கொண்டன ரொன்றானீன்ற குழவிக டமையுந் தொக்க
ஒண்டொடி மகளிராஞெர் தம்மையு மொருங்கு வௌவித்
திண்டிற லுடையவீரர் சிறைசெய்து மீண்டார்மாதோ. ௧௯0

மருவரும் வலிமை காட்டி மாற்றலர்க் கடிந்தவீரர்
இருவரும் வாசநோக்கி யேகியாங் குற்றகாலைத்
திருவரும் புகழான்மிக்க செம்முறைத் தாதையந்த
வெருவரும் வாட்கை மேவுந் தநயரை விளித்துநோக்கி. ௧௯௧

மன்னுமிந் நாட்டிற் கானன் மரபினர் பெரீசர்தம்முள்
என்னைநீர் தூர்க்கந்தம்போ லிருத்தியே கலக்கமீர்தீர்
துன்னுமென் சனங்கள் சில்லோர் அனையவர் சூழ்ந்தேயென்னை
முன்னுறுங் குடும்பமோடு முடிவுறப் பொருவர்மன்னே. ௧௯௨

என்றுளங் கவலைகூர்ந்தே யியம்பின னதனைக் கேட்டவ்
வன்றிறல் வயவர்நோக்கி வயங்கெழி லிளையாடன்னைப்
பொன்விலை மகளிர்போலப் புரிந்தவர் நடத்துமாறிங்
கின்புறுந் தகையதாமோ இயம்புக வெந்தாயென்றார். ௧௯௩

(வேறு) ஏகநாயகன் இசிரவேலைநீ இனறெழுந்துபெத் தேலினுகிமுன்
வேகமாமனத் தம்முன்வெஞ்சினம் வெருவியோடிநீ மேவுகாலையிற்
போகுமாநெறி தன்னிற்றோன்றிய புங்கவ னறனக் கங்கொர் வேதிகை
சேகலாமன முடையசீரினய் செய்கவென றுரை செய்யலுற்றனன். ௧௯௪

ஆனபோதவன் அகத்துளோரையும் அங்குதன்னுழை யாகிவைகிய
ஏனையோரையும் நோக்கியும்மிடை எய்துமங்கிய தேவர் யாரையும் [ர்
ஊனமெய்திடாதொருங் குநீக்கிநும் உடைகள்மாற்றியேபுனிதமொன்றுவீ
மானமெய்துபெத் தேல்வளம்பதி மருவவின்றெனு டெழுந்துவம்மினே.

முன்னரேவிபத் துற்றகாலையான் மூந்துபாதையில் முடுகியன்பிஞெ[ருன்
டென்னையாதரித் தருள்சுரந்தநம் மிறைக்குமேடையங் கியற்றுவேனென்
துன்னுமன்னிய தேவர்யாரையுந் துற்றதங்குழைப் பூணுமீந்தனர் [வன்.
மன்னுறுஞ்சிகேம் மருங்கிலோரலோன் மராடியிற்புதைத் தன்னமற்றன்ன

இசையுமெண்ணமோ டிதன்பினன்றிவர் ஞெழுந்ததம்வழி யேகினர்களைத்
திசையினுள்ளமா நகருளோர்களுந் தேவனுற்பயஞ் சேர்ந்தவாற்றினல்

வசையில்சர மேவலனிதனும மைந்தரைத்தொட மனத்திலஞ்சினர்
அசைவினற்குணத் தோனிவாறுசென் றனைவரோமெத் தலத்திலாயினன்.

அங்குவேதிகை அவனியற்றினன் அன்றதம்முனுக் கஞ்சியோடியே
தங்குபோதினிற் காட்சிமேலவன் சநிதித்தலத் தானதன்மையால்
இங்கிதன்பெய ரெல்பெத்தேலெனு இசைத்துளானெனு மிறைவனீங்கிடும்
பொங்குமாசிபெற்றுலகில்யாரினும்பொலிவுபெற்றிடும்பொற்பினனரோ.

அவனைநல்கிய அன்னைபாலினி தமர்ந்ததாதியாம் அன்னதேபொரான்
புவனவாழ்வொரீஇப் போற்றுமத்தலப் புடையிலோரலோன் பொலியு
நீழலிற்
சவமடைந்திடுஞ் சேமமெய்தினள் சாற்றுமப்பதிக் கனையதன்மையால்
நவலுமல்லலோன் பாகுத்தென்றுபேர் நோன்மையெய்தினோன் கொடு
க்கலுற்றனன். ௧௯௯

இன்னதின்பினங் கிறைவனேக்கியான் யாவும்வல்லதே வெங்குமல்குறும்
துன்னுசாதியொன் றலவுநேசமே தோன்றுநின்வழி யாத்தலக்குவார்
மன்னர்தாமுமுன் குரவருக்கியான் வழங்குமிப்பதி நீயுமுன்வழி
மன்னுசந்ததி யாருமெய்தவே வழங்குவேனென வகுக்கலுற்றனன். ௨௦௦

(வேறு) எம்பரனிவ் வாறுரைத்தே யெழுந்தருளியேகியபின்
வம்பகலு நெஞ்சகத்தவ் வள்ளலந்தத் தலத்தொருகற்
றம்பமதை நிறுத்தியதிற் பானபலி தைலமுகுத்
தம்பதியங் கதற்குயர்பேர் பெத்தேலென் றழைத்தனனே. ௨௦௧

இப்பதியை விட்டவர்க ளெப்பிராத் தாவென்னும்
அப்பதிக்குச் சிறிதப்பா லானதொரு தலமடைந்தார்
செப்பியவத் தலத்தவர்கள் சேர்ந்தபொழு திராகேலாம்
மைப்பிரச மலர்விழியாள் வயாவருததம் பெரிதுழந்தாள். ௨௦௨

பொறையுயிர்க்குங் காலமது புகுந்துமலர்க் கொம்பனையாள்
நிறைவருந்த முறும்பொழுது நேர்பிரசா வைத்தியையப்
பிறைநுதலைப் பார்த்தஞ்சேல் பெண்கொடியே யிப்பொழுதுங்
குறைவகல வையகத்தாண் குழவியைநீ பெறுவையென்றாள். ௨௦௩

அகலிடம்விட் டவளான்மா வகன்றிடுமவ் வளவிலவள்
மகவினுக்குப் பென்னோனி யெனுநாமம் வகுத்துரைத்தாள்
பகவனருட் பேறுடையோன் பன்னியவப் பாலகற்குத்
துகளறுநற் பெயர்பென்ய மீனென்று சொற்றனனே. ௨௦௪

துப்பிதன்மா மலர்நிகர்வாய்த் தோகையுயிர் நீங்கியபின்
எப்பிராத் தாரென்ன இயம்பியபெத் திலகேமாம்
அப்பதிக்குப் போமார்க்கத் தயலிலவ டன்னுடலைச்
செப்பமிகு முளத்திசிர வேல்சேமஞ் செய்தானே. ௨௦௫

மாணுடையோ னக்குணவம் வைத்திடுமக் குழிமீதோர்
தூணடைவுற் றிட்டிறுத்தித் துல்க்கினோ னத்தூணைப்

பேணுபுக ழிராகேலின் பிரேதமறைத் தூணையே
ஏணுடைய் பெருகாம மின்றளவும் வழங்குவரால் ௨0௬

இங்கிதன்மே லிசிரவே லெழுந்தேகி யேதேராம்
பொங்குயர்கோபுரத்தப்பாற் பூம்படங்குடைசமைத்தமர்ந்தான்
அங்குறையும் போதுருப னையன்மறு மனையவளாய்த்
தங்கியபில்க் காளுடனே சயனமதிற் சேர்ந்தானே. ௨0௭

மாசுதரு மித்திய மாற்றமது தந்தையெனு
மிசிரவேல் தன்செவிக்கு மேறியதாங் கதன்பின்னர்
பேசியவப் பன்னிருமா மைந்தரொடும் பிறரொடும்போய்த்
தேசுடையோன் தன்றாதை செறிந்தவளம் பதிசேர்ந்தான். ௨0௮

நல்வளஞ்சேர் மமரேயி னண்ணியிறை யருளொடெய்ந்த
செல்வனெனு மீசாக்கு சிறப்பொடூநூற் றெண்பானுண்
டல்லலறும் வாழ்வுபடைத் தாயுளமிக முதியோனாய்
மல்லலுறும் புவியொருவி வானுலகம் படர்ந்தானே. ௨0௯

தந்தையுயிர் முன்னோர்தந் தகுமுயிரின் குழாத்தணுக
மைந்தரெனு மேசாவும் மற்புயவி சிரவேலும்
அந்தவுயர் தேகமதை யாங்கடக்கம் பண்ணியபின்
தந்தமது வாழ்பதியிற் றுயரமொடுஞ் சார்ந்தனரே. ௨௧0

யாக்கோப்புப்படலம் முற்றும்.



## ௧0. ஏசாவின்மரபுரைத்த படலம்.

போதாருநறுந்துடலை பொலிகானன்வளம்பதியிற் புகழேச
காதாளின் றருள்குமர னெலிபாசே யாம்பசுமாத்திரோகுவே
ரூதாகின்றுளசுதனை யுயிர்த்தனளங் ககோலிபாமாளென்றுற்
மாதாட லேபூசு யாலாமேர் வனர்கோரா கினையுமீன்றுன்.

இறையருள் சேரீசாக்கின் புத்திரர்களிருவருக்கு மிருந்தசெல்
நிறைவதனு லவரொருபால் கேர்ந்துவைகவொண்ணுத நீரானுர்
குறைவறுநன் மர்தைதொறுக் குழுக்களுறு நிமித்தமுமன்னவர்கள்கூடி
புறைதருபொற்புடையதலமொருங்கவுரைத்தாங்கவொண்ணுதற்றன்றே

(வேறு) இங்கிதனு லேசாதன் மனைவிமக்கள் இல்லகத்திற் றனக்கிருந்த
யாவரோடும்
தங்கியவெச் சிவசெத்துக்களையுங் கூட்டித் தான்கானு னாட்டினிலே சம்
பாதித்த

பொங்குசீதி யெவ்வெவையுங் கொண்டுபின்றொன் பொருந்துகின்ற சமு
கமதைப் போக்கிப்போந்து
உங்கருவிசொரிதருதண்சிகரச்சாறலுயர்சேயீர்மலைவாசமுற்றான்மாதோ. ௯

ஏற்றபுகளோதோமென் றிடும்பேர்பெற்ற ஏசாவின் வமிசமதை யியம்பக்
கேண்மின்
சாற்றுமெலீபாசளித்தோர் தேமானெமார் தருசேப்போ காத்தாம்கே ளு
சென்போராம்
போற்றுமறு மனையவளாந் திமிறுளெனனும் பூவையகற்குதவுசத னம
லேக்காகும்
ஆற்றலுறுமேசாவின்மனைவியானஆதாளின்பௌத்திரர்மற்றிவர்களாமே. ௬

நலந்திகழு மிரேகுவே லளித்தமைந்தர் நாகாத்து சேராகு சம்மாமீசா
வலந்திகழிப்பிரபுக்கள் பசுமாத்தினற மைந்தனருள் சத்தியா மகோலி.
பாமாள்
பலந்திகழு மேயூச முதலவாயபாலகரையுதவினளா லிவரேயேதோங்
குலந்திகழவருமவருங் குறித்தவந்தக் கோத்திரத்தின் தலைவர்களுங் கூறு
ங்காலே. ௭

ஏசாவின் மரபுரைத்த படலம் முற்றும்.



## ௧௧ யோசேப்புப்படலம்.

ஏறிய புகழான்மிக்க இசிரவே லினிதி னீன்ற
ஆறிரு புதல்வர்தம்மு ளதிகனுய்த் தந்தை பேரன்
பூறிய யோசேப்பாயுள் உயர்பதி னேழாய் மந்தை
கூறிய துணைவரோடுங் கூடிமேய்த் துற்றானன்றே. ௧

அத்தகு மினைஞன் றாதைக் கடிமையா மகளிரீன்ற
புத்திரருடனுற் றன்னோர் புரிந்தன தீமையாவும்
அத்தனுக் குரைத்து வந்தான் முதுமையி லளித்தவாற்றால்
இத்தகு சுதன்மே லின்றோ னெவரினுந் தயைமிக் குய்த்தான். ௨

பன்னிறங்குலவும் நல்ல சித்திரப் படமேயொன்று
துன்னிய வுடையு மந்தத் தோன்றலுக் கீந்தனாலுல்
அன்னதாற் றுணைவர்யாரு மம்மகன் றனைப் பகைத்து
கன்னய மொழிகள் யாதுங் கவிற்றுத லொழிந்தா ரன்றே. ௩

இப்படியிருக்கு நாளி லிசைவளர் யோசேப்பாங்கோர்
சொப்பனங் கண்டுமிக்க துணைவரை நோக்கியாங்கள்
பப்புறும் பழனத்துற்ற பயிர்விளை வரிந்துபோதிற்
செப்புமென் னரியின் கம்மை நிருத்தக நிற்கக் கண்டேன். ௪

நீங்கள்கொய் திட்டவனை சும்மைக ளொழியினோடும்
பாங்கினின் றதனைச் சூழ்ந்து பரவவுங் கண்டே னென்றான்
ஆங்கது கேட்டுமெய்யா வெமையர சாளுவாயோ
ஓங்கிய முதல்வனோயென றுரைத்துறு பகையுற்றாரே. ௫

வேறுமோர் கனவைக்கண்டு துணைவரை விளித்து நோக்கி
வீறுசா லிரவிசோமன் மீன்பதி னொன்றுமென்றே
கூறுமின் னவைகளென்னைக் குறுகித்தாழ் தரக்கண்டேனென்
றேறுமார் புகழான்மிக்கோ னியம்பினனென்ப மன்னோ. ௬

அணிகிளர் யோசேப்பிவ்வா றறைதரக் கேட்டபோதே
தணிவறு புகழ்சேர் தாதை யானுமுன் றாயுமற்றுன்
றுணைவரு நிலமேர் தாழ்ந்து சூழ்ந்துனை வணங்குவோமே
நணியநின் கனவெனவென்று கனன்றெதிர் நவின்றிட்டானே. ௭

பகருமிக் கனவினாலும் பகைமிகத் துணைவர் கொண்டார்
தகவுறுந் தந்தை நெஞ்சந் தனிலிதை நினைந்துற்றானால்
புகரிலான் றுணைவராடு புரந்திட வதன்பின் சீகேம்
நகர்வயினேகி யாங்கே நண்ணின ரென்பமன்னோ. ௮

நண்ணியபின்னர் தாதை நம்பியை நோக்கலுற்றான்
திண்ணிய துணைவராடு புரந்திடச் சீகேமின்கண்
அண்ணினர் நீயாங்கேகி அவர்களின் சுகமு மந்தைக்
கெண்ணிய செழிப்பும் நோக்கி யியம்பென வவனும் போனான். ௯

தாதைசொற் றலைமேற்கொண்டு தகவுளோ னெபிரோனின்று
போதரலுற்றுச் செல்வம் பொலிசெழுஞ் சீகேமூரில்
ஆதரமுடனே யிங்கு மங்குமா நடந்துதேடி
மேதகு துணைவர் யாண்டும் மேவிடக் காண்கிலானாய். ௧௦

ஓதுமவ் வெளியி லன்னான் றிரிவதை ஒருவன் கண்டு
யாதுநீ தேடுகின்றா யென்னவென் றுணைவரானோர்
நீதற மந்தைமேய்க்கச் சென்றன ரிங்ங னன்னோர்
போதிட முணர்ந்துள்ளாயே லெனக்குநீ புகல்கவென்றான். ௧௧

ஆயது கேட்டங் கன்னோ னனையவ ரிங்ஙனின்று
போயினர் தோத்தானுக்குப் போதர லுறுவோமென்ன
மேயசொற் கேட்டேனென்றான் மிக்கவன் றொடர்ந்தவ் வூரி
னாயின னவர்களாங்கே யமர்ந்திடக்கண்டா னன்றே. ௧௨

ஆங்கவன் வரவைத் தூரக்கண்டனர் துணைவ ரன்னோன்
பாங்குற முன்னேகொல்ல மந்தணம் பகர்ந்து கொண்டே
நோங்கருத் துடையொர் தம்முளொருவரை யொருவர் நோக்கி
ஈங்குறுகின்றான் பாரீர் சொப்பனக்கார னின்னே. ௧௩

கொன்றிவன் றன்னையந்தக் குழிகளி லொன்றிற் போட்டு
வன்றிறற் கொடுவிலங்கு மாய்த்திவ னுயிரையுண்ட

வாடினன் றளர்ச்சிகூர்ந்தான் வஸ்திரங் கிழித்தனெஞ்சி,
ஓடினன் றுணைவருற்ற வழியுடன் தவர்கடம்பால்
நாடினு மிளையோன்றன்னை நண்ணிடக் காணேனந்தோ
நீடினான் போவதெங்கே யினியெனப் புலம்பிநின்றான். ௨௪

இன்னவப் பொழுதினேபத் துணைவரோர் கொச்சையேற்றைத்
துன்னினர் தடிந்துசோருஞ் சோரியில் யோசேப்பின்பல்
வன்னநல் லங்கிதோய்த்து மற்றதை யீன்றதாதை
தன்னிடை காட்டச் சில்லோர் தமதுகைக் கொடுத்தாரன்றே. ௨௫

கொண்டவ ரேகியந்தக் குருசிலின் சமுகநண்ணிக்
கண்டுகோ மெடுத்தோமிந்தக் கலினுடை யிதுநீதந்த
திண்டிறல் மகனதேயோ அல்லவோ செப்புகென்றார்
அண்டருந் துயரத்தோடு மவனதைப் பார்த்தானன்றே. ௨௬

(வேறு.) கண்டா னெனக்கினிய கான்முளையி னங்கியெனக்
கொண்டா னவனிசமாக் கொல்விலங்கு தன்றாற்பீ
றுண்டா னெனநினைந்தே யுள்ளமிகக் கலங்கி
மண்டார் பெருந்துயரம் மல்கப் புலம்பினனே. ௨௭

ஏய வுடைகீண் டிரட்டுடுத்துத் தாளீன்ற
சேயின் நிமித்தந் தினம்பலவுந் துன்பமுற்றான்
மேய சுதர்முதலோர் மிக்கதுய ராற்றுவதற்
காய மொழியெவ்வா றறைந்தாலு மாறிலனே. ௨௮

துக்கம்படைத்தென் சுதனொடியான் மாய்ந்தோர்கள்
தொக்கதலத்திற் றொடர்ந்தடைவே னென்றுசொல்லி
மிக்கபெருஞ்சீர் விளங்குசிர வேல்தனது
தக்கமகவினுக்காத் தானழுது கொண்டிருந்தான். ௨௯

ஆனபொருளுதவி யன்றிசும வேலர்கடாம்
மானமுறுமிசிர வேலரிடம் வாங்கியவ்
வூனமறுஞ் சீர்தகி யுற்றவுயர் யோசேப்பைத்
தேனமருஞ் சோலை யெகிப்தினிடை சேர்த்தினரே. ௩௦

அன்னநகர் வேந்துக் கரியபிர தானியுமாய்த்
துன்னுகின்ற வன்கஞ் சுகித்தலைவ னுயுமுற்று
மன்னுமடல் வீரம் மலிதடக்கைப் போத்திப்பார்
என்னுமவற் கந்த இளையோனை விற்றனரே. ௩௧

(வேறு) இங்கிஃதுற்றபி னருள்வலியூதா வெனுமைந்தன்
தங்குழிநின்றுயர் துணைவரை விட்டுத் தனியேகி
அங்கதுலாமிய னாகியவீரா வாம்பேரோன்
பொங்கிய வாழ்மனை புக்கவனோடு பொருந்துற்றான். ௩௨

அவ்விடை சூவா வாமொருகானா னியனருளும்
கவ்விய நேர்விழி காரியொருத்தி யனைக்கண்டவ்

வெவ்விக லோனவ டன்னை யுவப்பொடு வேட்டெற்றான்
இவ்வினை யின்மக வீன்றிவ னுமமதேரென்றான். ௩௩

மைந்த னொருத்தனை மீண்டுமிருங்கரு வாய்த்தன்னாள்
தந்தவனற்பெய ரோனா னென்றன டருசேலா
வந்தனை யங்கவ ளைந்து யிடைப்பினி மாமகவை
முந்தருள்போது கெசிப்பினில் வையினை மூன்றுளை. ௩௪

ஏத்தடல்யூதா தான்மகிழ்வாயந ளோரென்றும்
மூத்த மகற்குயர் தாமாரென்னொரு மெய்க்குழலை
மாதகுமாமண மெய்திட நல்கினன் மற்றவமேர்
தீதுதொழில் மிக்கவ னுதலில்மாய்த்தான் றேகனுமே. ௩௫

ஓனானென்னுள மைந்தனையீன்றவ னுமமூன்னோ
னானுக்குயர் சந்ததிநின்று லவன மனையாளா
கானுனிற்றா நீயவளோடு கலந்திடெனா
போனானம்மொழி போலவடன்னிடை புரிவுற்றோ. ௩௬

சீரியமேதினி வாழ்வையகன்றிடு சேட்டன்றன்
காரிகையோடு கலந்து வழங்கிடு கானமுனோதன்
நேரியசந்ததி யாகுதலின்மை நினைவுவிழும
வீரிய மணமிசை வீழ்ந்து சிதைந்திட விட்டாரே. ௩௭

வலாதிச்செய லென்றிறை கொன்று வினையனையும்
சேலாவின்னுயிர் தானுமிறக்குஞ் செயலஞ்சி
பாலார்செஞ்சொன் மருகியை யூதா பார்த்தங்கன்
சேலார் வைவிழி யாயிப்புதல்வன் சிறுபாலன். ௩௮

திருவருமிம்மக னோங்கி யிருங்கடி செய்திமெய்ப்
பருவமுறும்பொழு தளவுமெழுந்து படர்ந்துனைமுன்
றருபவன் வைகுவைதங்குக வென்றுரை தந்தானல்
மருமலர்மென்கொடி போல்பவ டந்தைதன் மனையுற்றாள். ௩௯

நாள்பல சென்றபின் யூதாவென்பவ னன்மனையாள்
நீளபுவிவாழ்வை யகன்றனடுக்க நிறைந்தசல்பின்
தான்வலி யோனதி கண்பினனுயுறை தருமிரா
சோனுறவாழ்திமி னுகரத்தே குறுசுற்றான். ௪௦

சேடுபெறுந்திறல் யூதாவவ்விடை சேருந்தன்
னுடுகளின்மயிர் களைதருவோரிடை யடைவுற்றான்
நீடுகருங்குழல் சேர்தரு தாமார் கேர்ந்தவ்வூ
ருடுபெரும்புகழ் மாதுலனுற்ற துணர்ந்தாளே. ௪௧

(வேறு.) மதர்மைக்கண் மடமா னன்னாள் மணமெய்த வுரைபோல் மாமன்
சுதனைத்தந் திலனால் வேட்கும் பருவமே நோக்குமென்னா
விதவைக்கன் குரியதார்ந்தன் னுடைதன்னை விலக்கிமுக்கா
டதனைக்கொண் டன்றன்னுடன் னணிபொங்கு முகத்தைமூடி. ௪௨

அடைவுற்றா டிம்மினூ ரதற்குப்பேர் மந்தமார்க்கத்
திடையுற்ற வேனாயீம்ன் வாயிலினிருந்தாள் மாமன்
புடையுற்று முகமேலாடை போர்த்தலா லன்னவன்னை
நடையுற்றாள் மருகியென்று நாடுற்றுத் தெரிந்திலாதான்.

மருட்கொண்ட வுளத்தினோனாய் மற்றந்த வனிதை தன்னைப்
பொருட்பெண்டென் றெண்ணியன்னாள் புடையெய்தி மின்னே
யென்மீ
தருட்கொண்டு மருவவாவென் றறைந்துற்றா னதுகேட்டந்தச்
சுருட்கொண்ட கரியகூந்தல் சொல்லென்ன பணயமென்றாள். ௪௪

வற்காலிக் குட்டியொன்று வழங்குவேன் கிடைநின்றென்றான்
சொற்சாலு மளவுமீடு தருவையேற் சொற்றவாறே
நற்காத லொடுநீகூட நானுள்ள மிசைவேனென்றாள்
நிற்காகுங்கருத்தென்னென்றேதெளிவெய்தநிகழ்த்துகென்றான. ௪௫

மன்னுங்கை யாழியோடுன் மார்பிற்பொன் னாரங்கைக்கோல்
என்னச்சொல் பணைகடம்மை யெனக்கின்னே யீகவென்றாள்
பன்னுஞ்சொற் படியேநல்கிப் பரிவுற்றுக் கலந்துபோனான்
மின்னஞ்சு மருங்குனல்லாள் கருக்கொண்டு விளங்கினாளே.

அவிர்செம்பொன் வளைக்கைநங்கை யகத்திற்சென் றணிமுக்காடு
தவிர்த்து விதவைக்கேற்ற தனக்குள்ள உடைகொண்டுற்றாள்
நவிலுற்றபணயமீந்து நல்குற்ற கோதுவைமீட்கப்
புவிமெச்சும் புகழ்சேர்யூதா போக்குற்றா னன்புளோனை. ௪௭

உரைசெய்த படியச்சூளை யுறவெங்குங் காண்கிலானாய்
விரைவுற்றே னாயீமென்னும் இடத்தின்கண் மேயீண்டுற்ற
வரைவின்மா தெங்கென்றாங்கு மன்னுற்றார் தம்மைக் கேட்டான்
புரையுற்ற பயனிலாளிங் கிலளென்று புகன்றிட்டாரே. ௪௮

விலைமாதைக் காணாகி மீண்டந்த நண்பனைய
உலைவார நடந்துபார்த்து முசாவியுங் காணேனென்றான்
நிலையாயென் சொல்லுமேவ நினையுய்த்துங் காணேம் வெட்கந் [ன்.
தொலைவாகக்கொள்ளிற்கொண்டு தொலைவளென்றவனுஞ்சொன்னா

திங்கள்மற் றொருமூன்றின்பின் சென்றுற்றோ ரொருவனாங்குன்
பொங்குசீர் மருகிசூலே பொருந்துற்றாள் சோரத்தென்றான
அங்கச்சொற் கேட்டுயூதா அனையளையழைத்து வம்மின்
இங்கங்கி யதனாலின்னே எரிநுங்கப்படுகவென்றான். ௫௦

மையாரும் விழியாள்கொண்டு வரப்பட்ட பொழுதாங்குற்ற
கையாழியாரந்தண்டு காட்டியா னிவைதந்தோனால்
மெய்யாக வயிறுவாய்த்தேன் விளங்கயார் பொருள்களென்றே
ஐயாபார்த் தறிகவென்று மாமன்முன் னனுப்பினாளே. ௫௧

பாலாமங் கவற்றையூதா பார்த்தோர்ந்தப் பாவைதன்னைச்
சேலாவாங் குமரன்வேட்டல் செயச்செயாத் தீமையென்றன்

மேலாயீங் குற்றவாற்று லென்னிலும் மிகவ்வுயிர்தச்
சேலாருங் கண்ணணிநீ சிறந்தாளென் றுரைசெய்தானே. ௩௨

வேலார்ந்த மினிர்ந்தவங்கண் மின்னைப்பின் அவன்றெட்டில்லான்
சூலார்ந்தங்கிளுங்காலந் துன்னும்போ திரட்டை மைந்தர்
நூலார்ந்த விடையாள் குக்கி யக்த்துற் றார் தலைவோர்சேயப்
பாலார்ந்த சிறுகைதன்னைப் பார்க்குநேர் நீட்டிற்றன்றே. ௩௩

வந்துற்ற விளக்கைமீது மருத்துவ மடமான்செய்ய
தந்துற்று விளங்கச்சுற்றிச் சார்ந்துற்ற திதுமுன்னென்றாள்
முந்துற்ற வக்கைமீண்டுள் முடுகுற்ற பொழுதிலாங்கே
பிந்துற்று நின்றவந்தப் பிள்ளைமுன் னுற்றதன்றே. ௩௪

வருமந்த மகவைமீறி வந்ததென் னீயிம்மீறல்
மருவுற்றுநின்மேல்மன்னு மென்றன்னள் வகுத்ததாலப்
பெருமைந்தன் றனக்கப்போது பேரேசென் றேதுவென
ஒருநற்பே ருரியதாக வுரைதிடப் பட்டதன்றே. ௩௫

உவப்புவாய்ந் திடவம்மைந்த னுயிர்த்தபின் னொருகைமீதே
சிவப்புநூல் சற்றப்பெற்ற சேயுமங் கதயமானான்
நிவப்புவார் மகிழ்ச்சிபொங்க நேர்ந்திட்ட மகறுமண்மேல்
தவப்பரா வுறும்பேர்சேரா வென்னவே சாற்றினாரே. ௩௬

(வேறு) சாப்புலிக்கிணை தானெனப்
பூப்புகன்றிடு போத்திப்பார்
மாப்பொனிற்றொறு வாகியோ
சேப்புவள்ளல் செறிந்தனன். ௩௭

தேவினன்பு செறிந்ததால்
மேவுவாழ்வு மிகுத்தவன்
தாவிலாத தலைவனில்
ஓவில்சீரொ டுறைந்தனன். ௩௮

ஐயனன்பவற் காவதுஞ்
செய்யுமவ்வவை சித்தியா
யெய்துகின்றன வென்பதுஞ்
செய்யவாறு தெரிந்ததால். ௩௯

அருளொடிற்பணியாளுமிற்
கருதுமுற்றதி காரியும்
பெருகுமிப்பெரி யோனென
மருவுவித்துயர் வள்ளலே. ௪௦

புகலருந்திறற் போத்திப்பார்
தகவினோடு தனக்குள
சகலமுந்தனி தாங்கவே
*உகவையோடவற் கொப்பித்தான். ௪௧

* உவகை உகவையென மரீஇயது.

(வேறு) தாரதாரஞ் சகலமும் போத்திப்பார்
என்னும்மண்ண லிரக்கமை வித்தபின்
இன்னசெம்ம னிமித்த மிறையவன்
தன்னகத்தைத் தழைவுறச் செய்தனன். ௬௨

வீட்டின்கண்ணும் வெளியினு மாங்கவன்
ஈட்டுசெல்வ மெவைகளின் மேலுமே
நீட்டுமாசி நிறைவுறு மாறருள்
காட்டினான்மெய்க் கருணைக் கடவுளே. ௬௩

அன்னதாலவ் வடலரியன்னவன்
தின்னு நல்லுண வன்றிச் செறிந்துள
யன்னுதன்பொருள யாதையும் பற்றியே
உன்னியொன்று முசாவுதல் செய்திலான். ௬௪

மாப்பெருங்குண மல்கி விளங்கியோ
சேப்புநல்ல வனப்புச் சிறந்துளான்
மீப்படுந்திரு மேனி விசித்திரம
நாப்புகன்றிட நண்ணுந் தகைத்தோ. ௬௫

அன்னகாட்சியி னால்மய லாகியே
மன்றுவாட்கைத் தலைவன் மனையவள்
இன்னகோல விளைஞனை மிசைவிழி
துன்னுவித்தென்னைத் தோய்கவென் றோதினாள். ௬௬

சொலற்கடாமொழி சொற்றலு நம்பியித்
தலத்திலண்ண றனக்குள யாதையும்
விலக்கிடாது விசாரணை யின்றியே
நலக்கமைய னைசயி னல்கலுற் றனரோ. ௭௦

இம்மனைக்கு ளெணிலுயர்ந் தோரிலைச்
செம்மனீர்த்துத் தேய்தற் காதலால்
அம்மங்கை யலாத வெதனையும்
இம்மண்மீது லெனக்கு விலக்கிலான். ௬௮

இத்தகும்பெருந் தீமையியற்றியே
வித்தமேவும் விமலன் வெறுத்திடற்
கொத்தபாவ முஞற்றே னெனவுளம்
வைத்திடாது மறுத்துரைத்தானரோ. ௬௯

தினமுமிப்படிச் சேயிழை பேசினும்
மனமொருப்பட லின்றிமறுத்தனன்
தனதுகற்பணி தன்னையியற்றவோர்
தினமகத்தினுட் சென்றன னென்பவே. ௭0

சீருளோனுட் செறிந்திடு போதிலங்
காருமில்லை யகந்துணர்ந் தன்னவள்

பாருளுத்தமன் றன்னுடை பற்றியுட்
சேருவாயெனச் செப்பியிழுத்தனள். ௭௧

நீடியவ்விடை நிற்பதுமின்றித்தன்
சோமிதன்னையக் கோதைதன் கையில்விட்
டோடியங்க ணுருறுதலின்றென்
கேடிலுத்தமனவக் கிர்த்தியோன். ௭௨

(வேறு.) ஓடிய பொழுதிலாங்கே ஓங்கிய காமந்தன்றால்
வாடிய கணிகையர்த்த வளமனை யகத்திலன்று
கூடிய பேர்கடம்மைக் கூட்டியிவ் வுடையைக் காட்டிச்
சூடிய புகழோன்மீது துணிந்துபொய்க் குற்றஞ்சூட்டி. ௭௩

யாருநீர் பார்மினெங்கோ னிவ்வெபிரேயன்றன்னைச்
சாருமிவ் வுழையென்னோடு சாகசமே செய்யுமாறு
சேருவித்தனன்கொலோ வென்ற தீமைசெய்யவெண்ணியத்தான்
பீருழந்தனையகால பெரிதியான சத்தமிட்டேன். ௭௪

இடைதரு முளத்தினோடா மென்பெரு மாற்றங்கூறி
உடையையென் கையில்விட்டே யோடினனெனவேகூறிப்
படைவிழி மடந்தையில்லின் றலைவிற் றனதுகேளவன்
அடைதரும் பொழுது முன்போய் அறைந்துமவ்வாறேசொல்லுவாள்.

செவ்வுடை காட்டிநின்று தேவிசொன் மாற்றங்கேட்டு
வெவ்வுள முடையனாய் வேந்தனுஞ் சிறையுற் றோர்சேர்
அவ்விடை தீதிலானை அருஞ்சிறை யகத்துவைத்தான்
திவ்விய பரனன்பனுஞ் சமயமல்லேற் செறிந்ததன்றே. ௭௬

சோதிலா யோசேப்பென்னுங் குரிசிலைக் கடாட்ச முய்யாதே
தீதிலார் புகழ்சேர் மேலோன் திருத்தாக் காரான் றனையே
ஓதுவான் சிறைசெய்சாலைக் குறுமதிகாரி யுள்ளம்
போதுபே ரருளே செய்யக் கருணையும் புரிந்தானம்மா. ௭௭

அப்பெருஞ் சிறையிலுற்ற யாரையு மதிபனன்றச்
செப்பமாருளத்தான் கையிற் றிருத்தக வளித்தானங்கே
தப்பருஞ் சிறையிலுற்றோர் தாம்புரி தருவனாகும்
எப்பெருஞ் செயலுமங்க னினையனே யியற்றுவிப்பான். ௭௮

இறைவன் யோசேப்பின்பா லிருந்திடலாலு மன்றன்
குறையறப் புரிவயாவும் நிறைவுறக் கொடுத்தலாலும்
சிறையமர் சாலைகாப்போ னவன்கையிற் சேர்ந்ததாக
அறைதரு மெதனையேனும் விசாரியா தமர்ந்தானன்றே. ௭௯

ஆனவை நிகழ்ந்தபின்னர் அங்கசர் வேந்தன் முன்னும்
பானபாத் திரத்தினோனும் பகர்சுயம்பாகிதானும்
மானமார் தலைவனுக்கும் மற்புயப் பார்வேனுக்காங்
கீன்மார் தவறுதன்னை யியற்றின ராகுமன்றே. ௮௦

மயமவதற மகறறதாக வீவடியான் றியவெந்தப்
படுபழியேனுஞ் செய்ததிலையெனப் பன்னினானே. ௧0

தந்தவக் கனவினர்த்தந் தக்கதென் றுளத்திற் கண்டே
மூதுறும் பாகசாலைத் தலைவனும் முந்தியாங்கே
எந்தநற் பொருட்கு மேலா மிறையவனருள்பெற் றோங்கும்
விந்தையங் குமரன்செய்ய வியன்முகம் விழைந்து நோக்கி. ௧௧

மூன்றவெண் கூடையென்றன் மூர்த்தமீதுறவே மேலாய்த்
தோன்றிடு மில்வேந்தற்கு மடையகன் றருத்தாங்கட்ட
சான்றவெவ் வுணவினுள்ளுஞ் சிற்சில தங்கவண்புள்
என்றவவ் வுணவையுண்ணக் கண்டனன் கனவிலென்றான். ௧௨

இத்தரு கனவினர்த்தம் யாதெனிற் கூடைமூன்று
முத்தின மாகும்பார்வோன் மூன்றுநாட் செலமுனுன்னை
வைத்துள நியாயந்தீர்த்து மன்னதி காரமாற்றிக்
கொத்தினர் மரத்திற்றூங்கிக் கொலைபுரிவிப்பனன்றே. ௧௩

உன்னுடல் மிசையுற்றோங்கு மூனினைப் பக்கிசாலத்
தின்னுவ விதுவேசொல் லுறுப்பொருடெளிவென்றான்
பன்னுமம் மூன்றாம் வைகல் பசைசெறு மடற்பார்வோனும்
மன்னுயர் சனனநாளாம் வகுத்தவத் தினத்தில் வேந்தன். ௧௪

ஆங்கிருவரையுங் கூவி அகத்தினிற் பணிசெய்வோர்தம்
பாங்கினில் விசாரிதன்னோர் பகர்ந்தவக் கனாக்கட் கந்நாள்
ஒங்கிய புகழியோசேப புரைத்ததாற்பரியம்போலத்
தாங்கிய நீதிகாட்டித் தயையொடு தண்டஞ்செய்தான். ௧௫

பானபாத்திரங்கொள்வோர்தந் தலைவனைப் பார்வோன்மீண்டும்
போனமுன் னிலையில் வைத்துப் புகல்சுயம்பாகிகட்காங்
கானவத் தலைவன்றன்னை வதைபடுத்தா னுவியுய்த்தோன்
மானவிக் குயர்யோசேப்பை மறந்தன னினைந்திலானே. ௧௬

ஆண்டிரண் டகன்றபின்ன ரதிதிறற் பார்வோனண்ணல்
தூண்டுவெண் டிரைநீராற்று மருங்குதான் றன்னிநிற்ப
மாண்டகு மழகுவாய்ந்த வளர்செழும் பசுக்களேழு
நீண்டவான் கரைகொளாற்றி னின்றுமேல் வெளியிலேறி. ௧௭

ஒழுங்கமை தானந்தன்னி லுற்றபுற் கறிக்கவேறேழ்
அழகறுங் கொழுப்பிலான்க ளாங்குநின் றேறிவந்தச்
செழுநதி மருங்கினுகிச சிறந்தநல் வனப்புவாய்ந்த
கொழுவிய பசுக்கள்மாட்டிற் கூடியே செறியுமாறும். ௧௮

வனப்பிலாக் கொழுப்பிலான்கள் மற்றையவாகுநல்லா
னினத்தினை விழுங்குமாறு மாகவே யெய்துமோர்சொப்
பனத்தினைக் கண்டுபின்பு விழித்தனன் பகைவராஞ்சுஞ்
சினக்களி றனையவேந்தன் றிரும்பவுந் துயிலலுற்றான். ௧௯

திரும்பவுந் துயிலும்போழ்திற் செழும்பயிர்க் கதிரேழோர்தாள்
வரும்படி யீனுமாறும் வர்தகீழ் காற்றுமோதிப்
பொரும்பொழு துலர்ந்துதீந்த பதர்க்கதிர பொருந்தவேழு
தரும்படி வேறுமீனு மாறுமக் குரல்கடம்முள். ௪௦௦

சாவியாங் கதிர்களந்தத் தகுசெழுங் கதிர்கடம்மை
மேவியே விழுங்குமாறுஞ் சொப்பன மீண்டுங்கண்டான்
தாவியே யுறுமனந்த றண்டபின் கனவென்றோர்ந்து
கோவியா குலமிக்குற்றான் வைகலுங் குறுகிற்றனறே. ௪௦௧

ஆந்தக வெண்ணிவேந்த னந்நகரத்துளெந்த
மாந்திரிகரையு மெந்நூல் வாணர்க டமையுங்கூவிப்
போந்ததன் கனவுசொல்லிப் பொருளுரைத திடுமினென்றான்
வேந்தனுக் கெவராலேனும் விள்ளொணாதாயிற்றம்மா. ௪௦௨

மானவேற் பார்வோனென்னும் வள்ளல்முன் னனையபோதே
பானபாத் திரத்தினோர்தந் தலைமையோன படர்ந்து வேந்தே
ஈனமா மெனதுகுற்றம் யானின்னே நினைவுகூர்ந்தேன
போனதோர் செய்திநின்முன் புகறரக் கேட்டி மாறோ. ௪௦௩

தகுஞ்சுயம் பாகிகட்குத் தலைவனும் யானுமன்று
புகுஞ்சிறைச் சாலைதன்னுட் புகுந்துழி யோரிராவில்
மிகும்பொருள் வெவ்வேறுள்ள கனவுகள் மேவக்கண்டே
தொகும்பொரு டெரிந்திலோமாய்த் துன்புற லெய்தினோமால். ௪௦௪

கஞ்சுகித் தலைவனில்லின் கட்பணியாளாய் நற்சீர்
மிஞ்செபி ரேயனுமோ ரிளைஞனெம் முடனேமேவி
வெஞ்சிறை யகத்தினுற்றோன் மேயநங் கனுக்கட்கன்று
செஞ்செவே பொருள்கடம்மைத் தெரித்தனன் வழுவுறாமே ௪௦௫

ஆங்கவன் றெரித்த வாறே யாயின பலாபலங்கள்
ஈங்கவன் றன்னைநீயு மெய்திட வழைத்துக் கேட்டால்
ஓங்குநற் பொருளுரைப்பா னுனக்கென வுரைத்தான் கேட்டு
வீங்கியபுகழ்சேர்வேந்தன்அழைக்கவாள்விரைந்துவிட்டான். ௪௦௬

வெஞ்சிறைச் சாலைதன்னில் விரவிய வேந்தன் றூதர்
விஞ்செழில் யோசேப் பைக்கூஉய் வேந்தனை யழைத்தானென்றார்
வஞ்சமி லுளத்தினோனும் மயிர்களைந் துடையு மாற்றி
அஞ்சயிற் படைக்கைப் பார்வோன் முன்னுற வணுகினனே. ௪௦௭

காண்டலுங் களித்து வேந்தன் கண்டதன் கனவைச் சீர்த்தி
பூண்டவக் குமரற்கோதிப் பொருளினை விரிக்கவல்லான்
நீண்டபா ருலகிலெங்கும் நீயலாதிலையென் றோர்ந்தேன்
ஈண்டியா னுணருமாறே யியம்புக வெனக்கின் றென்றான். ௪௦௮

மன்னவன் வாய்மைகேட்டு மற்றவன் யானோ வல்லன்
இன்ன மங்கலமதாகு முத்தரமியம்ப வல்லான்

பன்னருஞ் சருவ ஞானப் பரமனே யென்றுகூறி,
அன்னவான் கனவுக்குற்ற பொருள்விரித் தறையலுற்றான். ௪௦௯

ஓதுறுங் கனவிரண்டும் ஒருபொருளுடைய வாகும்
மீதுயர் மகிமை மூர்த்தி மேவினித தரணியடிந்தப்
பூதல வளாகந்தனனிற் புரிதருஞ் செய்கை தனைக்
கோதறவருளால் முன்னே தெரிதர விளக்கலுற்றான். ௪௧௦

மன்னநீ கண்டவவ்வேழ் பசுக்களேழ் வருடமாகும்
அன்னல விளைவதாமேழ் கதிருமேழாண்டே யாமாற்
பின்னுறும் வறளானேழும் பெருவறுதனகாலிற் றீந்த
வென்னவாய குரல்களேழு மாண்டுக ளெய்வேழாமே. ௪௧௧

இவைகளின் பொருளை தென்னில் எகிப்துநாடெங்கு மிக்க
சுவையுறும் விளைவேழாண்டு நலம்பெறப் பொலிந்து நன்றாம்
அவைகளின் பின்னேழாண்டு மருமபெரும் பஞ்சமுண்டாம்
சுவையுறுஞ் செல்வமெல்லாங் குறைந்தழி வுறுமப்போதே. ௪௧௨

வருமவோடுங் கருப்பால் முன்னர் மல்குபூ ரணமெல் லாம்போம்
பொருந்துமிக் கருமந் தேவ நியாயத்தாற் போதுமாறும்
பெரும்புகழ் மேலோனீண்டு புரிவதும் பிறங்கவுந்த
அருமபெருங் கனவிரட்டை யாயதென் றறிகுவாயே. ௪௧௩

திருபநீ விவேகஞானம் நிறைந்துளோ னாகவுள்ளோ
னொருவனை யாதலாலிக் குயரதிகாரியாக்கி
மருவுநல் விளைவாமேழு வருடமு மைந்திலோர்கூ
றொருவறக் கொள்ளற்கொத்த தலைவரை யுறுவிப்பாயே. ௪௧௪

அவ்வவ ருணவுக்கான பொருளெலா மவ்வேழாண்டுஞ்
செவ்விதிற் சேர்ப்பர் நின்பாற் றனிய விளைவைச் சேர்ந்தே
இவ்வணி நகர்கடம்மி லுணவுகளெய்சற்காக
வவ்வமில் வருடமேழு மிருப்புற விவற்றைக் காப்பாய். ௪௧௫

இப்படி யியற்றுவாயே லிப்பெரு நாடாங்கெய்தும்
அப்பெரும் பஞ்சத்தாலே யழிந்திடாதறிக வென்றான்
செப்பிய துணர்ந்து வேந்தும் பணிவிடை செய்குவோரும்
ஒப்பறு முபாயமீதென் றுறுதியா வகத்துட் கொண்டார். ௪௧௬

அன்னதன் பின்பவ்வேந்த னுங்குதன் பணிசெய்வோரை
முன்னுற நோக்கியென்றும் முடிவிலா னருள்பெற்ற
இன்னவன் றன்னைப் போல்வார் யாரையாங் காணலாகும்
என்னவன் றுரைத்து யோசேப் பெழிலணி வதனநோக்கி. ௪௧௭

மேலவ னுனக்கிவ் வெல்லாம் வெளிப்படுத்திட்ட வாற்றாற்
சாலவே விவேகஞானந் தம்மைப்பெற்றுள்ளோ னுன்னைப்
போலவே ரொருமில்லைப் பொற்புறு மெனதில்லத்தின்
பாலதி காரியாகிப் பரிந்து வீற்றிருப்பை மாதோ. ௪௧௮

காண்டகு நினதுசொற்போற் கருதுமென் சனங்கள் யாரும்
ஆண்டிடப்படுவார் நீதியாசன மொன்று லன்றிப்
பூண்டிடு மேன்மையுன்னில் யாதினும் பொலிந்தி லேன்யான்
தூண்டகு தோளாயோர்தி நீயெனச் சொல்லினானே. ௧௧௯

சொல்லினன் மீண்டும் பார்த்தித் தொன்னகரெங்கும் நீயே
நல்லதிகாரியாக நாட்டினே னறிகவென்றே
வில்லொளி பரப்பித் தன்கை விளங்குமுத் திரைகொளாழி
அல்கலில் புகழி யோசேப் பங்கையின் விரற்கிட்டானே. ௧௨0

மென்சண னூலாற்செய்த விளங்குடை தரிக்கச் செய்து
பொன்சரப் பணியை யன்னான் கழுத்தினிற் பொலியப் பூட்டித்
தன்செருப் புரவிபூண்ட தணப்பிலா வழகுவாய்ந்த
மின்செயுந் தேர்க்கிரண்டாம் விளங்குதேர் மீதிலேற்றி. ௧௨௧

நெறியெதிர் முழந்தாளூன்றி நின்மினீர் யாருமென்றே
அறிதர வறைவித்தந்நாட் டணிநகர் வீதிபோக்கிச்
செறிகவின் விளங்குமேனிச் செம்மலைத் தேயமெங்கும்
எறிபடை வேந்தனன்றே தலைவனா வேற்றினானே. ௧௨௨

ஏற்றிய பின்பவ்வேந்த னிசையுளோன் றன்னை நோக்கிப்
போற்றுமிந் நாட்டிலென்னை யன்றியே பொருந்தும் யாரும்
சாற்றுநின் பணியாலன்றித் தனதுகை யதனையேனும்
தோற்றுதன் காலையேனு மசைக்கொணா தெனவே சொற்றான். ௧௨௩

சான்றசீர் யோசேப்புக்குச் சாபிநத் பானே யாகென்
றேன்றபோர் வேந்தனும மியம்பி யோனகரந் தன்னில்
ஆன்ற வேதியனும் போத்திபெராவரு ளாஸ்நாதெனும்
ஊன்றுவேல் விழிபினாளை யுயர்மண முறுவித்தானே. ௧௨௪

அற்புத னருள்சேர் யோசேப் பந்நகராளும் வேந்தன்
முற்படும் பொழுதிலாண்டு முப்பது சென்றோ னன்னான்
பற்பல வளஞ்சாலந்நா டெங்கணும் படர்ந்துபார்க்க
மற்படு புயத்து மன்னன் மாமுக மொருவினானே. ௧௨௫

செழுமையாம் விளைவுசாலச் சிறந்துள வாகுமவ்வாண்
டேழுமையும் விளைந்ததந்த இசைகிள ரெகிப்துநாடு
முழுமையும் படர்ந்து சுற்றி முந்துறும் பயன்க ளன்னான்
விழுமிய நகர்கடம்மில் மேவுற வீட்டிவைத்தான். ௧௨௬

அப்படி யோசேப்பாங்கே அளவறுங் கடலின் சார்மண்
ஒப்புற மிகுதியான தானியமொருங்கு சேர்த்தான்
இப்படி யனைய வந்நாட் டீட்டிய விளைவுகட்குச்
செப்புறுங் கணக்கு நம்மாற் றெரிக்கொணா வளவிற்றாமால். ௧௨௭

வெருவருங் கொடியபஞ்சம் மேவிடுவதற்கு முன்னே
திருவரும் விளைவு மிக்குச் செழிப்புறுங் காலந்தன்னில்

அருவரைப புயயோசேப்புக் கவன்மனைக் கிழத்தி மைந்த
ரிருவரை வாழ்வுபொங்க ஈன்றுவப் பெய்தினாளே. ௧௨௮

எனக்குள கிலேசமுற்று மென்னையீன்றவன் குடும்ப
மனைத்துநான் மறக்கத் தேவ னருளினா லென்று கூறி
மனக்கெழு மகிழ்ச்சித்தாதை வாய்த்ததன் மூத்த மைந்தன்
றனக்குறும் பெயர் மனாசே யாமெனச் சாற்றினானே. ௧௨௯

சிறுமை யானடைந்த நாட்டிற் றேவெனை விருத்தியாக்கி
உறுபெருங் கருணையென்பா லுறுவித்தானெனவே யோதிப்
பெறுவலி மருவுமாறு பெற்றிடு மிளையோனாகுஞ்
சிறுவனுக் கெப்பிராயீமெனப்பெயர் செப்பினானே. ௧௩௦

இங்கிது நிற்க யோசேப் பியம்பிய வாறுபோலப்
பொங்கிய செழிப்பாமேழு வருடமும் போயபின்னர்
வெங்கலி மருவும் பஞ்சம் மேவுமவ் வருடமேழும்
அங்ககனுலகோருள்ளம் அசையுறத் தொடங்கிற்றம்மா ௧௩௧

தேயமெங் கெங்கும் பஞ்சஞ் செறிந்ததவ் வெகிப்து நாட்டே
யேயநல்லுணவின் சேமமிருந்துள தந்நாடெங்கும்
தீயவெம் பசியே மீறிச் சேறலால் நொந்து நொந்தவ்
வாயகன் கடையில்யாரும் மருவியின் னோலமிட்டார். ௧௩௨

ஓலமிட்டுற்றோர் தம்மை ஒளிர்முடி யரசனோக்கிச்
சீலமிக்குயர்ந்த யோசேப் பகத்தினீர் சென்றவ னன்றேன்
பாலினுங் குறைகடம்மைப் பார்த்தவன் பண்ணுமாற்றம
போல்நீர் புரிமினென்று புகன்றன னவருமப்போனார். ௧௩௩

பஞ்சமத் தேசமெங்கும் பரந்தலாலுணவுப் பண்டம்
விஞ்சுபண் டாரமெல்லாந் திறந்தெழில் விளங்கும் யோசேப்
பெஞ்சலில் பதார்த்தம் வேண்டி மேவற்றறையும் விற்றனகன்
அஞ்சுமப் பஞ்சமென்மே லதிகொடி தாபதம்மா. ௧௩௪

மற்றுமெந் நாட்டின் கண்ணும் வந்ததாற் கொடிய பஞ்சம்
உற்றுள சருவதேயத் தறுநரும் உணவு கொள்ளச்
சொற்றுள யோசேப்பென்னுந் தோன்றல்பால் வளங்கள் யாவும்
துற்றுள வெகிப்தென்றோதுந் தொன்னகர்க்கெழுந்தாரன்றே. ௧௩௫

(வேறு) பேசுறுசீர்மை பிறங்குமெகிப்து
தேசமதிற்பெரி தூணுறுசெய்தி
மாசறுதேவன் வழங்கருள் பெற்ற
ஈசிரவேலெனு மேந்தலறிந்தே. ௧௩௬

மாக்கவின் மைந்தரை வம்மினெனாநீர்
ஊக்கமிலாதிவ ணொருவரை யொருவர்
நோக்குதல்செய்வதி னுவல்பயனின்றென்
வாக்கினையோர்ந்துயிர் வாழ்வகை செய்வீர். ௧௩௭

விளங்குறு சீர்த்திமிகுந்த வெகிப்து
வளம்பதியிற்பல தானிய மல்கல்
விளம்பினர் கண்டவர் விண்டிடு மென்சொல்
லுளங்கொடு போய்க்கொணர் மின்னெனலுற்றான். ௧௩௮

தந்தைமொழிப்படி தநயர் பதின்மர்
அந்தவளம்பதி தன்னை யடைந்தார்
உந்திடர் யாது முறுதிளை யோனைத்
தந்தவ னவ்விடை தஙகமறித்தான். ௧௩௯

இத்தடநாட்டி னிருந்துணவெய்த
ஒத்துடனேக லுறும்பிற ரோடும்
விதததகவிசிர வேல ரெகிப்தாம்
அத்தகுநாட்டி னடைந்தனரன்றே. ௧௪0

(வேறு.) அணிகிள ரெகிப்துநாட்டுக் கதிகனுயுயர்ந்தவென்றித்
திணிபுய யோசேப்பந்தத் தேயத்தோர் பெறவூண்பண்டந்
தணிவறவிற்றபின்னர் தன்றிருத் துணைவர் சார்ந்து
மணிநில நேரேதாழ்ந்து வணங்கிடக் கண்டானன்றே. ௧௪௧

காண்டலு மனையார்தம்மைக் காதலந் துணைவரென்றே
ஆண்டவ னறிந்தபோது மறிந்திலான் போலக் காட்டி
வேண்டலா வெஞ்சொலன்னார் தம்முடன் விளம்பிநீவிர்
யாண்டுநின்றடைந்தீரென்றேயுரைசெய்வீரெனக்கிங்கென்றான். ௧௪௨

தொகும்புக ழண்ணறன்னைத் துணைவனென் றறியாரைய
மிகுநதிருக் கானானடு விட்டிவ ணடைந்தோமென்றார்
தகுந்திறர் செமமலனரோர் தமைக்குறித் தாங்குதன்பாற்
புகுநதசொப் பனைததால வேயர் நீரெனப் புகன்றுநோக்கி. ௧௪௩

மிடைவள நாட்டத்திங்ஙன் மேவிய திறவுநோக்க
அடைதர லுற்றீரென்று னையனே யடியேமன்ன
நடையின ரல்லேமெய்துந் தானியம் நாடிவந்துன்
புடையினிற் கொள்ளவீண்டு போந்துநின சமுகமுற்றோம். ௧௪௪

அண்ணல்நின் றசராம்யா மனைவரு மொருவன் மைந்தர்
நண்ணுநின் மொழிபோல்வேவய ரலேமென நவின்றுநின்றார்
தண்ணிய மனத்தான்மேலுந் தடுத்துநீரொற்றர்தாமே
எண்ணிய திறவுநோக்கி யேகவே வந்தீரென்றான். ௧௪௫

பெருமையிற் சிறந்தகோவே பிறங்கெழிற் கானானாட்டில்
அருமையாவொருவ னீன்ற வாறிரு புதல்வருற்றோம்
ஒருமக னம்முளில்லை யோங்கெழிலிளைய மைந்தன்
தருமகன் றன்பாலுளளா னென்னவே சாற்றினாரே. ௧௪௬

விளையுமம் மாற்றங்கேட்டு மிக்கவனேக்கிநீவிர்
உளைவுறப் புகுந்தவொற்ற ருண்மையான் சோதிப்பேனால்

இளையவற் கொணர்ந்தாலன்றி யேகுதற் கொட்டே னென்று
வளையவன் சிலைவேந்தாவி மீதினில் வருத்தே றனை. ௧௪௭

பருவுற வவளைக்கூட்டி வருமதற்காக நும்மி
லொருவனே போகவேணு ருரைத்தசொல் லுண்மை தன்னைத்
தெருளுறக் காணுங்காறுஞ் சிறையினி லிருமின் பொய்த்தாற்
கருதிய படிநீர்வேவு காரரென் பதுமெய்யாமே. ௧௪௮

எனவுரைத் தவரையோசேப் பேகமாச் சிறையில் மூன்று
தினமுறச் செய்தம்மூன்றாந் தினத்தினி லவரைநோக்கி
மனதினி லென்னையாளும் வானவற் கஞ்சுகின்றேன்
இனிநினீ ருய்யவேண்டி லியம்புமென் வாய்மை கேண்மோ. ௧௪௯

நேருளோர் நீரேல் நீவிர் சேர்ந்தவிச் சிறைசெய் சாலைச்
சாருறற் கொருவன்றன்னைத் தந்துமற் றுள்ளீர் நுந்தம்
ஊருறீஇப் பசியால்வாடு மும்மனோர்க் குணவையீந்தச்
சீருளோ னிளையன்னுஞ் சேடனை யழைத்து வம்மின்: ௧௫0

இயம்புமென் னுரைபோல் நீவி ரியற்றில்நீ ரிசைத்த சொற்கள்
நயம்பெறு முண்மையென்றே நவின்றிடப் படுவதாகும்
வயம்புனை புயத்தீர் நீங்கள் மரிக்கவு மாட்டீரென்றான்
பயம்பொருமுளத்தோரன்னான் பகர்ந்தசொற் கமைந்தாரன்றே. ௧௫௧

ஓதுசொற் கமைந்தோர் தம்மு ளொருவரையொருவர் நோக்கித்
தீதுபற்றிடாத நெஞ்சச் செவ்வியந் துணைவன் மேறான்
பாதுபெற்றிடவே வேண்டி யயர்துயர் பார்த்து மனறான்
மீதுநற்றயை செய்யாது வெம்பழி பூண்டோமே. ௧௫௨

ஆதலால் நமக்குமிந்த விபத்துவந் தாயதென்றார்
தீதிலா விளையோனுக்குத் தீவினை விளைக்கொணா தென்
றோதினே னன்றோ வென்சொல் லுறுதியை மதித்திலீரிப்
போதிலப் பழிதோன்றிற்றென் றுருபனும் புகன்றிட்டானே. ௧௫௩

பழுதிலான் மொழிபேர்ப்போனாற் பகர்ந்ததாற் றமது பேச்சவ்
விழுமியோ னுணரானென்றே மேவினார் நெஞ்சத் தெண்ணி
தொழுதகும் யோசேப் பன்ன துணைவரை யகன்றோர் சாருற்
றழுதனன் மனத்தை யாற்றி மீண்டுமங்கவர் பாலானான். ௧௫௪

ஆனபின் சிமியோனை அவர்முனே கட்டுவித்துப்
போனவவ் வவர்கடத்தம் பொதிகளிற் றானியத்தை
நானமற் றிடவீந்தீந்த நுவல்விலை தனையுமுள் வைத்
தீனமிலாற்றுணவு மீந்திட வேவி நின்றான். ௧௫௫

உத்தம னுரைத்தவாறே யுறுபணி செய்வோன் செய்தான்
அத்தகுந் தானியத்தை யனையவர் கைக்கொண்டன்றே
கத்தப வெரினிலேற்றிக் கதிகொண்டவ் வழிவிட்டாங்கோர்
சத்திர மதனினண்ணித் தரித்திளைப் பாறினாரே ௧௫௬

ஆழமவ் வமயந்தன்னி லவர்களிலொருவ னங்கே
ஏறவே சரியுணற்கூ ணிடப்பொதி யவிழ்த்து நோக்கிக்
கூறசொற் படிதானீந்த விலையுறக் குறித்துக்கண்டே
வீறுசேர் துணைவருக்கும் விளம்பின னவரும் பார்த்தார். ௧௫௭

பார்த்தலு மிசிரவேலின் பாலரங் குள்ளஞ் சோர்ந்தார்
வேர்த்தன ரெமக்கிவ்வாறு மேலவன் செயலென் னென்றார்
சீர்த்தநற் செயலோர் கானான் தேயத்தப் பொதிகடம்மைச்
சேர்த்தனர் விரைவினோடுந் தாதைதன் சமுகஞ் சேர்ந்தார். ௧௫௮

தந்தையின் வதனநோக்கித் தளர்வுறு முளத்தினோராம்
மைந்தரு மெந்தாய் செல்வம் மலிந்திடு மெகிப்து நாட்டின்
முந்ததி காரியானோன் முடுகுசா ரணரென்றெம்மைச்
சிந்தையி லெண்ணி வெய்ய சினமொழி பகர்ந்தா னன்றே. ௧௫௯

அப்பொழு தடியேம்நோக்கி யையனே யாங்கள் செய்யோம்
உப்பழுதுடைய ரல்லேம் ஓங்குசீர்க் கானானென்றே
செப்புமந் நாட்டோர் தாதைக் காறிரு சிறுவராகி
இப்புவி வாழ்வுபூண்டோ மொருவனை யிழந்துளோமே ௧௬௦

இளையநந் துணைவனெம்மை யீன்றவன் றனதுமாட்டே
கிளையடர் பொழிற்கானானி லுளனெனக் கிளத்திநின்றோம்
விளைதரும் புகழோனேர்மை மேவியதுணர வீண்டோ
ரிளைஞனை விட்டேயேனோ ரெழுந்துநும் பதிக்குச் சென்மின். ௧௬௧

சென்றுநீர் பசியால்வாட்டஞ் செறிந்தநுங் கேளிருண்ணற்
கின்றுதா னியங்கொண்டேகி யீந்தபினிளையோன் றன்னை
யொன்றவீங் கழைத்துவந்தா லொற்றரன் றுண்மையாள
ரென்றுகண் டும்மோடேக இளைஞனை விடுவெனென்றான். ௧௬௨

வளங்கொளிந் நாட்டில் நீவிர் வாணிகஞ் செய்வதற்கு
முளங்கொளி வியற்றலாகு மென்னவு முரைத்தானென்று
விளம்பினர் பொதிக்கணுற்ற தானியம் வீழ்த்தார் நெஞ்சந்
துளங்கிடத் தாந்தாமீந்த விலையையுந் துன்னக்கண்டார். ௧௬௩

தந்தம பொதிகடம்முட் டானியங் கொள்ளற் கீந்த
அந்தநற் கிரயமீண்டு மமர்ந்திடக் கண்டபோதே
மைந்தரு மவரையீன்ற வளர்புக ழிசிரவேலுஞ்
சிந்தனை கலங்கிமிக்க தெருமர லெய்தினாரே. ௧௬௪

இத்திர மருவுஞ்செய்தி கண்டபி னீன்றதாதை
சித்திர வடிவமைந்தர் திருமுகநோக்கி யென்னைப்
புத்திர வீனனாக்கப் புரிகின்றீர் யோசேப்பில்லை
எத்திரத் துய்வேன் சீமியோனுமிங்கில்லை யந்தோ. ௧௬௫

இளையவன் றனையுங்கொண்டே யேகநீர் பார்த்தீர் நெஞ்ச
முளையவிவ் வாறெனக்கீங் குற்றதே யென்றுரைத்தான்

இன்னலி மருவுவிக்க இண்டிய வருபனென்பேசன்
வ்லேபரா வருஞ்சேர்ந்தாரை வியன்முகமதலே பேசுமே. [illegible]

எந்தையே இளையோர்தன்னை யெனதுகை யரனிலின்லே
தந்தரு வகையைமீண்டுந் தருகுவேன் றபேரனெலென்றன்
மைந்தரங் கிருவருள்ளார் மற்றவர் தம்மையாவி
சிந்தை வதனுக்காக வென்றுரை செய்தா னன்றே. [illegible]

சானதியங் கதனைக்கேட்டுத் தமயனே விறந்தபோனுன்
மேதகு மொருவனுகு மிளவலே மீந்திருக்குள்ளான்
போதரு நெறியிற்றீமை பொருந்திடில் முதியேன்றன்னை
மோதுறு துயரத்தோடும் முடிந்திடப் புரிகுவீரே. [illegible]

ஆதலி னிளையோனுகு மம்மகன் றனையும் போமே
போதரா விடுதற்குள்ளம் பொருந்துறேன் சிறிதுமென்றுன்,
ஓதருங்கொடிய பஞ்ச முருத்ததங் கெடுப்பி னின்று
கோதறக் கொணர்ந்த வூணுங் குறைவுறச் சுருங்கிற்றன்றே. [illegible]

(வேறு) கொண்டுவந்துள தானியங்கள் குறைந்தவாறுமெனக்
கண்டுமைந்தரை நோக்கிமிக்குயர் கடவுளன் புடையான்
உண்டுவெம்பசி தீரவின்னமு முற்றெவிப் திடைநீர்
பண்டுபோற்கொடு வம்மினென்று பகர்ந்திருந்தனனே. [illegible]

தந்த தந்தையுரைத்த வம்மொழி தனையுணர்ந் தியுதா
அந்தமிக்கவ னிவனெ டவ்விடையடைய லோமெனில்யாம்
வந்துதன்முக நோக்கலின்றென வரையறுத் துரையே
மூந்த வோதின னோர்தியென்று மொழிந்து நின்றனனே. [illegible]

அன்னபோதினில் நோக்கிசற்புக ழன்னல் நீரவனே
டின்னுமிங்கொரு தம்பியுண்டென வெனியம்பிமிகும
பன்னருந்துயர்யானுறும்படி பண்ணி னீரெனெனச்
சொன்ன வன்றிரு மைந்தரங்கெதிர் சொல்லல் மேயினரே. [illegible]

எந்தை யேயவ னெமைவினித்துமை யினிதனித்தபெருந்
தந்தையின்னமும் மைகினன்கொல் சகதி னுங்களுடன்
வந்ததம்பிய ரின்னமுண்டுகொல் மற்றுநீர் சொலுமென்
றிந்தவண்ண முசாவினுன்மிக எங்கள் செய்தியையே. [illegible]

கேட்டதற்கெதிர் மாற்றமங்கு ளைத்தலுற்றனமால்
வாட்டமெய்திட வெம்பிதன்னையு மன்னுதன் செழுநீர்
நாட்டகத்துற வழையுமென்று நவிற்றுவானெனவே
ஓட்டமுற்றில முன்னமென்றுரை யோதலுற்றனரே. [illegible]

(வேறு.) மீண்டுமெதிர் தாதையை விழித்தடலி யூதா
[illegible] மாமரண மின்றியுயி ருய்ய.
[illegible] விரைந்து [illegible]
[illegible] றெனுட [illegible]. [illegible]

இங்கிவனை யின்மையினி லிங்கேல் யானே
அங்கணிவன் மீதுபழு தணுகிலனை யேகேள்
தங்கவிவன் மீண்டுவரு தன்மையுரி யேனேற்
பொங்குபழி யென்மிசை பொருந்தியுறு மென்றும். ௧௭௬

தாமதமொழிந்திடையி லிதுவரை தனக்குள்
யாமனுகி நல்லவுண வெய்தி மறுகாலும்
ஏமுற மீண்டிடுதல் கூடுமிச மென்று
காமருவு நல்லுரை நவிற்றியெதிர் நின்றான். ௧௭௭

அங்கவ னுரைத்தபொழு தையென வளித்தோன்
குங்குலிய மின்மது கொழுந்தகு அகத்தந்
தங்குபொரு டம்மினொடு சாற்றியவெண் போளம்
மங்கில்தெரெ பிந்துவிதை வாதுமையின் வித்தும். ௧௭௮

உந்தமது பாத்திரம துட்சிறிது கொண்டாங்
கந்தவுயர் செம்மல்மு னளித்திடுதி ரம்பொன்
முந்துற விரட்டிகொடு முந்திடுமின் மீள
வந்தவிலை யுங்கொடு வழிப்படுதிர் மாதோ. ௧௭௯

உம்பியையு மும்முட னுறக்கொடு நடந்தந்
நம்பியிடை மீளவு நடந்துகொடு வம்மின்
எம்பெரும னவ்விடை யிருந்தமக னோடிவ்
வம்பிலனு மீளவும் வரற்கருள் விளக்கும். ௧௮௦

ஓதுமக வின்றியுறி னுறுவவென வுற்றான்
காதலர்கள் கொள்ளுவன கைக்கொடு நடந்தே
மேதகு கனிட்டனொடு மேவியடல் யோசேப்
பாதிப னிருஞ்சமுக மண்ணியய னின்றார். ௧௮௧

ஆங்கவர்க டம்மிடை யருந்துணைவ னிற்றல்
வீங்குபுக ழண்ணலுள் விருப்பினொடு கண்டே
பாங்கினில் விசாரணை பணுந்தலை வனைக்கூஉய்
ஈங்கிவரி நண்பகலி லென்னொடுணை வுண்பார். ௧௮௨

ஆதலினி மரந்தரை யழைத்தெனது கத்திற்
போதருத லுற்றிவர் புசித்திடவ தற்காம்
தீதகலு நல்லுணவு செய்வியென வன்றாற்
கோதல்புரி வுற்றன னுயர்ந்தபுக ழோனே. ௧௮௩

(வேறு) அன்னசொற்படியே கூட்டியனையவ னணுகும்போதிற்
றன்னுமவ் விசிரவேலர் துயரமுற் றுள்ளத்தஞ்சி
முன்னரப் பொதிகடம்முட் கண்டபொன் முடிப்பா னம்மைப்
பன்னருஞ் சிறையுய்த்தேதுங் கரத்தையும் பறிக்குமாறே. ௧௮௪

இன்றியா மழைக்கப்பட்டோ மெனவியர்த் திடுபோதெய்யிலைத்
தோன்றிய தலைவன்பாலுற் *உதம்பர மருங்கினின்றே

* உதும்பரம், வாயிற்படி.

அன்றியாம் இறுத்துத்தந்த அகவிலை யதனையாங்கள்
சென்றசத் திரத்திலெங்கள் பொதிகளிற் றெரியக்கண்டாம். ௧௮௫

ஐயனே யதனைமீண்டுங் கொடுவந்தோ மதுவுமன்றிச்
செய்யதா னியங்கள் கொள்ளச் செழும்பொருள் வேறுமுள்ளோம்.
மெய்யதா முன்யாமீந்த விலையைகம் பொதியு ளுய்த்த
வெய்யனை யாரோவென்று விளங்குற வுணரோமென்றார். ௧௮௬

அவ்வுரை யனையன்கேட்டே யாறுத லடைமினுஞ்சீர்
இவ்விடை நுமதுசெம்பொன் என்னிடத் தெய்திற் றன்றே
செவ்விய வுமக்கு முங்கடந்தைக்குந் தேவனுனோன்
உவ்வியன் மறைவை யுங்கள் பொதிகளி லுறுவித்தானே. ௧௮௭

என்றவ னவருக்கோதி யேகியே சிமியோன் றன்னை
அன்றவ ணழைத்து வந்தே யவர்கள்முன் னுகவுய்த்துத்
தன்றிசை யோசேப்பில்லுட் டன்னவாங் கவரைப் போக்கிச்
சென்றடி விளக்கவென்று செழும்புனல் கொடுகந்தீந்தான். ௧௮௮

வேசரிக் குணவுமீந்து மெய்யிளைப்பாறச் செய்தான்
போசன மருந்துஞ்செய்தி புக்கவர் கேட்டபோதே
தேசமர் யோசேப்பங்கெ செல்வனண் பகலிலென்று
ஆசறுமீகைகல்கி யெதிர்கொளற் கணிசெய்தாரே. ௧௮௯

அண்ணலங் கானபோதே யனையகா ணிக்கை கொண்டு
மண்ணக நேரே தாழ்ந்து வணங்கினு ரன்னமாந்தர்
எண்ணிய புகழானன்னோர் நற்சுகசெய்தி தன்னை
எண்ணுறக்கேட்டு மீண்டு மின்னருள் கொண்டு நோக்கி. ௧௯0

உருத்தக முதியோனுகி யுந்தையாங் குளனென் றீரவ்
விருத்தனின் சுகமென்னின்னும் மேவினன் கொல்லோவென்றான்
திருத்தகு நினதுதாச னுகுநஞ் செய்யதாதை
பெருத்தநற் சுகமோடின்னு முளனெனப் பேசித்தாழ்ந்தார். ௧௯௧

சாற்றிய மாற்றங்கேட்டுத் தகவுளோ னதன்பின் றன்கண்
ஏற்றின னோக்கித்தன்னை யீன்றவளுதரந் தன்னிற்
றோற்றிய வநுசன்றன்னை நோக்கிநீர் தொக்காவென்று
போற்றிய துணைவனிந்த இளைஞனோ புகல்மினென்றான். ௧௯௨

செயிரற வுசாவியந்தச் சிறுவனை நோக்கிமைந்தா
உயரிறை கடாட்சமுன்மே லுறுமென வுரைத்தன் னேனல்
வயிறெரி வுற்றவாற்றால் மனத்தினை யடக்கலாற்றான்
வெயில்விரி மாடமொன்றுள் விரைந்துபோய்த் தனிபுக்கானே. ௧௯௩

புக்கிருந் தழுதான்பின்பு புனல்கொடு வதனந்தன்னை
அக்கணங்கழுவி யுள்ள மடக்கினன் புறப்பட்டுண்ண
மிக்கவூண் கொணர்மினென்று விளம்பினன் விளம்பலோடே
தக்கநற் பணிசெய்மாக்கள் தகவுறக் கொடுவந்திட்டார். ௧௯௪

இலங்கெழிலெகிப்துநாட ரிசைச்செபிரேயரோடுண்
கலந்திருந்துண்ணற்குள்ளம் வெறுப்புறுங்கருமத்தாலே
கலங்கிளரவற்றமற்றை யவர்க்குமங் காடர்சட்டும் .
விலங்குற கல்லூண் வெவ்வேறிடங்களில் மேவ வைத்தார். ௧௯௫

வதமி லொழுக்கஞ்சான்ற விசிரவே லினிதினின்ற
காதலர் முதலில் மூத்தோனிளையவன் கடையுமாக
ஓதுறும் வயதுபோலுற் றுண்ணுதற் கிருத்தப்பட்டார்
ஆதலி னதனைக்கண்டோ ரதிசய மெய்தினரே. ௧௯௬

தகுந்திறல் யோசேப்பாகே தனக்கிடப்பட்ட வூணிற்
பகிர்ந்துதன் றுணைவர்க்கீந்தான் பகருமைம் மடியேயாக
மிகுந்திடு கூறுபென்ய மினுக்குமுன் விரும்பியிட்டார்
புகுந்திவா றுண்டபான மருந்தியு மகிழ்ச்சிபூத்தார். ௧௯௭

(வேறு) ஆங்கதன்பின்ன ரண்ணறன்மனையி னும்பணித்தலைவனையன்று
பூங்குறவழைத்து நீயிவர்கொண்டு படர்தரத்தக்கதா னியத்தை
ஈங்கிவர்பொதிக ணிறைத்திடுவிலையுமெய்தவுய்த் திளையவன்பொதியில்
வீங்குமென்வெள்ளிப் பானபாத்திரமும் மேவுறவைய்யென விதித்தான்.

கெடியசெம்புகழோ னியற்றெனத்தனக்கு நிகழ்த்தியபடியவன் புரிந்தான்
விடியலில் மறுநாளவர்களுமெழுந்து வேசரிகளிறபொதி தொகுத்தக்
கடிநகரகன்றார் கடந்தவர்தூரங் காணுமுன்றன்மனைக்கண்ணும்
அடியவர்க்கதிபன் றனையிறையருள்சேர் அண்ணலும் வருகவென்றழை
த்தான. .௧௯௯

வருகவென்றழைத்து வழிசொடுபோமம் மனுடரைவிரைவினிலணுகிப்
பெருகநீர்நன்மைக் கெதிரிடரியற்றிப் பிழைசெய்தீர் தலைவனின்பானம்
பருகவுங் குறிகள் பார்க்கவும்வைத்த பாத்திரமதுவன்றோவெனவே
தருகநீயவர்க்கு மாற்றமென்றுரைத்தான்சாற்றுசொற்படியவன்சார்ந்தான்.

அன்னவர்தம்மைத் தொடர்ந்துபோயவ்வா றவன்பிடித் தண்ணல்முன்·ற
னக்குச்
சொன்னவப்படியேசொல்லினன்கேட்டத்தோமிலாரஞ்சியெம்மடிகேள்
இன்னசொல்லிவ்வா றிசைத்ததென் னினையசெயல்மிகு தூரமெங்களு
க்கே
முன்னமெம்பொதிவாய்க் கண்டவப்பொருணின முன்னியாங் கொண
ர்ந்ததோர்ந்திலையோ. ௨0௧

மருடபுமினையேம் உன்பெருமுதல்வன் மனையினிற் பொன்னைவெள்ளி
யினைத்
திருடுமத்தீமை செய்குவங்கொல்லோ செம்மனின் னடியரேமிடத்தப்
பொருடனைக்கண்டா லதனைவைத்திருந்த புன்மையோன கொலையுணக்
கடவன்
அருடருமுனத்தோயடிமையாயாமு மம்ருவ முனக்கெனவறைந்தார் ௨0௨

உம்முரைபோலப் பாத்திரமெடுத்த ஒருவனையாளெனக் கவோன்
செமமுறையுடைய ராகமற்றுள்ளீர் செல்லுவீரெனவவன் றெரித்தான்
தம்முறுபொதிக ளவரவிழ்த்திட்டார் தகுமுறை சேதனைசெய்து
விம்முறுதுயரங் கூர்தரப்பென்யமீன்பொதியிடதினி லெடுத்தான். ௨௱௬

எடுத்தவப்பொழுதவ் விசிரவேல்மைந்தர் இயம்பருந்துயரொடுங்கலங்கி
உடுத்ததம்முடையைக் கிழித்துவேசரிமேல் உற்றதத்தமபொதியுயர்த்தி
நடுத்தகைவின்றி மீளவுமெகிப்து நகரிடை நடந்துசென்றுற்றார்
தொடுத்தசீர்யோசேப்பப்பொழுதளவுந்துலங் குதன்மனையின்கண்ணிருந்தான்

அவ்விடையூதா துணைவரோடெய்தி அவனடி முன்னரே வீழ்ந்தான்
செவ்விடையனையா னவரையிப்படிச்செய்தமைதன்னென்னையயனையான்
இவ்விடை நீவிரியற்றியதாகுமிச்செயல் குறியினுல் நிசமா [௨௱௭
னொவ்விடை யறவோர் திறனறியீரோ நுவலுதிரெனக்கெனநுவன்றான்.

துண்ணென யூதா நடுக்கமுற்றர்த்த் தோன்றல்பொன் மலரடி தொழுதாங்
கண்ணலே யென்னசொல்லலாமெதனுல் அடியரேஞ் சுத்தர்களாவோ
பண்ணவனெமது பாதகம் விளங்கப் பண்ணினன் பாத்திரம் பொதியுள்
நண்ணிடக்கண்ட வனொடு நாமும் அடிமைகளினக்கெனநவின்றான்.

சோத்திரமிடையச்சொற்படும்பொழுதத்தோன்றலிச்சொல்லெனக்கடாது
பாத்திர மெடுத்தோ னடிமையேயாகுான் பசரு மவ்வடிமையா மொருவன்
மாத்திர மென்பால் வைசமற் றுள்ளீர் அனைவரும் வழிபடர்ந்துதகள்
கோத்திரமுறுநாட்டெந்தைபால்மகிழ்வாய்க் குறுகுதிரெனவுரைகுறித்தான்

ஒப்பறு முதல்வ னருள்படைத் துயர்ந்தோன் உரைத்தசொற் கேட்டலும்
யூதா [ட்டி
செப்பரும் புகழ்சேர் அண்ணலே சினந்தீர்த்தடியனேன் செப்புசொற்கே
தப்பருங் கருணை யின்றெமக் கருள்வாய் சான்றசீ பெகிப்தரசாளுமை
அப்பெரும் பார்வோனரசுநீயெனன அணிதகவிளக்குகின்றனையே. ௨௱௮

ஐயநீயும்மை யளித்தவனுளனோ அநுசருமுமக்கிறு முளரோ
மெய்யதாவெனக்கு விளம்புதிரென்று வினவிய பொழுதினி லடியேம்
கையுமூப்புளனு யெந்தையாண்டுள்ளான் நரைமுதிர் போதவ னளித்த
செய்யவோரரியசிறுவனுமவன்பாற்சிறப்புடனிருக்கின்றனென்றோம்.

அம்மகன் முன்னோ னுருயி ரிழந்தான் ஆதலா லின்றவ னந்தச்
செம்மகன் மீது நேசமிக்குள்ளான் என்னவுஞ் செப்பின மிறைநீ
தம்மகன்னி மீண்டுநீர் வருங்கால் நுவன்றவம் மகனையுங் கூட்டி
நம்மகனுட்டினண்ணுகவென்று நம்மொடு நவின்றனையன்றே. ௨௱௯

யாங்களப்பொழுதெம் மிறையுனைநோக்கி இளையவம் மதலையை யெந்தை
பாங்கரினின்று பிரிக்கிலப்பயந்தோ னுருயிர் யறியுமென்றுரைத்தோம்
ஆங்கருந்தகைசால் அண்ணல்நீநோக்கி அவனையிங்கழைத்துவந்திடிரேல்
நீங்களென்முகத்தை நோக்குவதில்லை யெனவெதிர் நிகழ்த்தினை யாமால்.

எந்தைமுன்னதன்பின் யாமடைந்தணுகி எந்தலை யன்றுநீயெமக்குத்
தந்தசொன்முழுதுஞ் சாற்றினோமீண்டுந் தக்கவெந்தாதைநீரின்னுஞ்

சிந்துநீர்கிருமெழுகிப்புகன்றனூட்டிற் சென்றநம் றனியங்கொண்டு
வந்தகண்ணிடுவீ ரெனவெமைநோக்கி வகுத்துரைசெய்தனனன்றே. ௨௧௨

என்றவன்மொழிகேட் டெம்முடனிளவல் ஏகிடினேகலாமன்றி
ஆன்றவன்சமுகத் தணுகுறேமணுகி அவன்முகங் காண்பரிதென்றோம்
சான்றவம்முதியோ னெங்களைப்பார்த்தென் றாரமாமவளிருபால
ரீன்றவச்செய்தி யறிகுவீரொருவன் என்னைவிட்டேகலுற்றனனே. ௨௧௩

வெந்தொழில்விலங்கு பீறவேயிறந்தான் மெய்ம்மையாவெனவயிர்க் கின்
றேன்
அந்தநாள்முதலா யித்தினமளவு மவன்வரக்காண்கிலே னந்தே
இந்தவோர்பாலன் றனையும்பிரிக்க எண்ணினீ ரேகுழியூறு
வாதுறிலென்னை நரைதிரை மூப்பில் மவிதுயரோடு மாய்விப்பீர். ௨௧௪

என்றவனுரைத்தா னவனுயிரிந்த இளையமாமகனுயிருடனே
ஒன்றுறப்பிணிப்புற் றற்றதாலிறைஃய ஓதுமிசதுணைவனெம்முடனே
சென்றிலனெனறு கணடபோதாவி சிதைந்துவீழ்ந்திறந்திடும் யாமே
துன்றியமூப்பி லெந்தையையாவி துயருறத்தொலைத்தவராவோம். ௨௧௫

இன்னமொன்றுரைக்கக் கேட்டியெம் மிறையான் இந்த வோரிளைஞனுக்
காக
முன்னமென்றாதைக்குத்தரவாதி மூடுகுறவிவனைமீண்டுன்பாற்
றன்னகல்கிடுவெலொழியிலெஞ்ஞான்றுந் தோமுளோனாவேனெனவே
பன்னலுற்றேனாலாதலால் விட்டுப் படருவதெனக்கரிதன்றே ௨௧௬.

ஆதலினிந்த இளைஞனைத்துணைவ ரானவர் தம்முடனணுகிப்
போதரவிடுதற் கருளபுரிபென்றுன் பொன்னடிபோற்றுகின்றேனால்
ஓதருமிறைமையே யீங்கிவற்காக உனக்கியானடிமையாயுறுவேன்
ஆதிலனுறேனெலந்தையாங்கடையுந்துயரையேகாணபல்யானென்றான்.

(வேறு) பொங்கருள்யோசேப்புள்ளம் புகன்றசொற்கேட்டலோடும்
வெங்கனல் முகத்தினுற்ற மெழுகென வுருகிதன்னை
அங்குள வனைவர் முன்னு மடக்கரி தாயவாற்றால்
இங்கெனை விட்டியாரு மகல்கவென் றியம்பினானே. ௨௧௮

அளிக்கொரு கடலேயன்னான் அருந்துணைவோர்க்குத் தன்னை
வெளிப்படச் செய்போதாரும் பாங்கரின் மேயதில்லை
களிக்கட களிற்றுவேந்தன் முதலினோர் கேட்பக் கண்ணீர்
துளிப்படச் சத்தமிட்டே யழுதனன் றுயரங்கூர. ௨௧௯

கண்மலர்ந் தழுதம்மிசகோன் காதலன் றுணைவர் தம்மை
உண்மல ரருளானோக்கி யொப்பருந் துணைவீர் யானே
கண்ணுறும் யோசேப் போர்திர் உயிருடன் நம்மையீன்ற
அண்ணலந் தாதையின்று முளன்கொலோ வறைதிரென்றான். ௨௨௦

என்றவ னியம்பக்கேட்டே யிடருறக் கலங்கிமாற்ற
மொன்றினை யேனுமோதா தமரின் கணம்போனின்றா

தன்றிசை யோனுமன்ன துணைவரை விளித்தென் மாட்டே
சென்றுற வருதிரென்று மவர்களுஞ் செறிந்துநின்றார். ௨௨௧

உற்றுழி நீவிர்மேனா ளுற்றவிலைக் கெகிப்தார் கையில்
விற்றுள யோசேப்பென்று விளம்புறுந் துணைவன் யானே
சற்றுமே விதனமெய்தீர் சகத்திலும் மரபுவைக
அற்புதன் சீவரட்சைக் காகவே யெனைமுன்னுய்த்தான். ௨௨௨

பஞ்சமேதொடங்கியீராண் டாயது பாரக்கேண்மின்
அஞ்சவே விதைதெளிப்பு மறுத்தலுமில்லா வாகும்
விஞ்சவே கொடுமாண்டைந்து மேலுமுண்டினுநீருய்ய
மிஞ்சபேரிரட்சை செய்ய விமலனிங்கெனைமுன்விட்டான். ௨௨௩

நீவிரோ வல்லவிந்த நிறைவள நாட்டத்தென்னைத்
தேவனே பார்வோனுக்குத் திருத்தகு தாதையாவும்
மேவவன்குடும்பமுற்றின் மேலதிபதியேயாவும்
ஓவிலா வெகிப்துக்கெங்கும் உயரதிகாரியாவும். ௨௨௪

மிக்கசீர் மருவச்செய்தான் விரைந்துநீ ரெந்தைபாற்போய்
தக்கதே வெனக்குச்செய்த தன்மையைத் தெரியச்சொல்லி
மக்களோ டவர்கள்மக்கள் மந்தையாணிரைகளாதி
ஒக்கவாண் டுளவெலாங்கொண் டிண்டுற வுரைசெய்வீரே. ௨௨௫

ஆசில்சீர்க் கோசேனாட்டில் அடைந்தெனக்கணித்தேயாக
வாசமெய்திடலாமைந்து வருடநீள்பஞ்சமின்னுந்
தேசமெங்கெங்குமுண்டாந் தெறுங்கலிமருவாதும்மை
நேசமாய்ப் புரப்பலென்று நிகழ்த்தினேனெனவுஞ் சொல்வீர். ௨௨௬

பாருமென்வாக்கேயும்முன் பகர்வதென்பதனையின்னே
நீருமென் னநுசன்றானும் நேர்முக மாகக்கண்டீர்
சீருயரெகிப்துநாட்டிற் சிறந்தவென் மகிமையாவுஞ்
சாருமற்றனைத்துங்கண்ட தன்மையாவெந்தைக்கோதி. ௨௨௭

சற்றுமேதாளாவண்ணஞ் சடிதியிவிங்கன்றேட்டி
யுற்றுற வருகவென்றே யுவந்தழைத் திடுமினென்றாச்
சொற்றுளமுருகிநின்ற துணைவனைக் கழுத்தைக் கையாற்
பற்றியே கண்ணீர்சோரப் பரிவுட னழுதான்மன்னோ. ௨௨௮

தம்பியுமுளங்கசிந்து தம்முனோன் கழுத்தைப்பற்றி
வெம்பிநின்றழுதான் பின்பம் மேதகு யோசேப்பாங்கே
பம்பிய துணைவர்யார்க்கும் பரிவொடு முத்தமீந்திட்
டம்பினைவிழியுஞ்சோரப் பற்றிநின்றழலுற்றானே. ௨௨௯

அன்னதுநிகழ்ந்தபின்ன ரவனுடன் றுணைவரானோர்
பன்னினர் சிற்சில்மாற்றம் பாருவோன்மனையிலன்னை
றன்னருந்துணைவர் வந்த சங்கதி தெரிந்தத்த
மன்னனு மற்றுளோரும் மகிழ்ச்சி மகிழ்ந்தாரன்றே. ௨௩௦

தொழுதகு மகிமைசான்ற அயைவருள்பெற் றோங்கும்
விழுமிய யோசேட்டென்னும் மேதகு புகழோன்றன்னை
முழுதுள மகிழ்ச்சிகூர்ந்து முகமலர்ந்தினிது கண்டான்
செழுநயி லாறுபாயுஞ் செல்வநாடுடைய கோவே. கூக

ந்தகு நிருபனந்த அண்ணலைநோக்கி நீநின்
விந்தகத் துணைவர்தம்மை விளித்துநீர் போதிகடம்மைக்
கத்தப வெரிவிலேற்றிக் கவினுயர் கானானுற்றும்
அத்தனைக் குடும்பமோடு மழைத்திவ ணடைதிரென்னே. உகூஉ

நண்ணுநீ ரெகிப்திலுள்ள நன்மையை யளிப்பேனீவிர்
எண்ணுமிந் நாட்டினேய செழுமையை யினிதுண்பீரால்
பண்ணுறு மழலைமக்கள் பாரிக ளுடனுந்தந்தை
கண்ணுற விவர்க்கேயிர்தக் கடிநகரடையுமாறே. உகூங

வேண்டிய சகடங்கொண்டு மேயழைத் திடுமினென்பாய்
ஆண்டுள பொருள்கடம்மே லாதரமொழிமினென்பாய்
ஈண்டியிங் குறிலிந்நாட்டு நன்மைகள் யாவுநீரே
பூண்டினி துறுவீரென்று புகன்றனே னெனவுஞ் சொல்வாய் உகூச

இன்றியா னிசைத்தவாறே யியற்றுவித் திடுகவென்றான்
நன்றெனவிசிரவேலர் நண்ணவே விரையலுற்றார்
வன்றிறல் யோசேப்பண்ணல் மன்னவன் பணியினாலே
சென்றிடு முருள்கள்வாய்ந்த தேர்களை யுதவினானே. உகூரு

ஆற்றுணா நல்கலுற்றா னுங்கவ ரனைவோருக்கும்
மாற்றுவத் திரமுமீந்தான வளர்புக ழநுசன்கையிற்
சாற்றுமுந்நூறுவெள்ளி தந்துமாற் றுடையைந்து
ஏற்றுமெஞ் சுவக்குமாறே யின்புட னுதவினானே. உகூசா

ஒட்டையாண் பத்தினந்நாட் டெச்சித யதார்த்தமொட்டைப்
பெட்டையீ ரைந்தின்மீது பெயர்ந்தடை கின்றமார்க்கக்
கட்டசு வுண்ணற்கான வுணப்பொருள் கருத்தோ டேற்றி
இட்டமுற் றுடையதாதைக் கீமினென் றீந்திட்டானே. உகூஎ

சுந்தபின் றுணைவர் தம்மை யிசைவள ரேர்தல் நோக்கிப்
போந்திடும் பதவைதன்னிற் புரியலீர் கலகமிக்க
சாந்தமோ டடைதிரென்று சாற்றியே யனுப்பிவிட்டான்
ஆந்தக வுடனன்னோர்தம் மணிக்க ரடைந்திட்டாரே. உகூஅ

செயிரறுந் தமதுதாதை செழுமுகநோக்கி யோசேப்
புயிருட னின்னும் வாழ்வுற் றுறைந்துளான் சீர்த்தி யோங்க
அயில்வளை யெகிப்துநாடு புரந்துளானெனவே சொற்றார்
பயில்புக ழுவன்சோர்ந் தன்னோர் பகர்மொழி நம்பிலானே. உகூகூ

மைந்தரா மவர்யோசேப்பு வகுத்தவை யனைத்துமேலும்
தந்தமை யாளுமேற்றிச் சார்தரத் தனக்கன்னான்

உந்திய சகடமுன்று வுற்றமை காண்டலானும்
முந்துறு மகிழ்ச்சிகூர்ந்து முழுதுளம் பூரித்தானே. ௨௬௦

மனக்களிப்புற்றுச் சீர்த்தி மல்கிய விசிரவேலன்
றெனக்கினிப் போதுமன்பா மென்மக னின்னுமுள்ளான்
உனற்கரு மரணமென்பா லுறுமுன மவனைநந்த
வனக்குலஞ் சூழெகிப்தில் மருவியே காண்பலென்றான். ௨௬௧

(வேறு.) இனைத்துமான பின்னரய் விசிரவே றனக்குள
வனைத்திரேடு மன்றுபோந் தடைந்து பேர்செபாவினோ
தனைத்தலந்தி லீன்றவன் றனக்கன்பான தேவனை
நினைத்திறைஞ்சி நேசமோடு பலிகணல்கி நின்றனன். ௨௬௨

அவ்விராவி லீறிலா வண்ணல்காட்சி யாகியச்
செவ்வியோனை நாமமே செப்பிநின்று கூவவே
திவ்வியோப்தி னாரருள் செறிந்ததொண்ட னுமியான்
இவ்விசால பதியினின்க ணிங்குனுற் றுளேனென்றான். ௨௬௩

அன்னகாலை மேலவன் அறையும் யானுன் றந்தைதே
வென்னவோர்தி நீயெகிப் திலுக்கு நண்ண வஞ்சுமேறல்
உன்னினின்று பெரியசாதி யொன்றையந்த நாட்டிடை
துன்னநல்கு வேனுனைத் தொடர்ந்தியானும் வருகுவேன். ௨௬௪

சீருறுது மீண்டுநீ திரும்புமா றழைத்திவண்
சேரநல்கு வேனியோ சேப்பு நின்றன் விழிகளைச்
சாரநின்று மூடுவான் றனதுகையி னாலென
ஈரமுற்ற சிந்தையோ டிவையிசைத்தல் கேட்டனன். ௨௬௫

(வேறு.) பின்பிசிரவேலென்போன்பேர்செபாநகர்நின்றுபுறப்பட்டானால்
அன்புசெறி புத்திரர்கள எகிப்தியர்கோ னன்றனுப்புஞ் சகடத்தாங்கண்
இன்புதரு மொழிச்சிறுவர் மனைவியர்த டந்தையெனு மிவரை யேற்றி
முன்புதமக்குளவாடுமுதலனைத்துங்கொண்டெகிப்தில்முடுகினாரே. ௨௬௬

இவ்வாறன் றீசிரவேல் புத்திரரும் பௌத்திரரு மிலகந்து நண்ணச்
செவ்வாறு புடையெறிநீ ரெகிப்துவளம் பதியகத்திற் சேர்ந்தானன்றே
தெவ்வாறு மடுபடைக்கைத் திறற்பார்வோ னரசியற்றுந் தேயந்தனில்
எவ்வாறுமளப்பரியோனருளொடுற்றவிவர்கடொகையெழுபானுமே. ௨௬௭

மன்னுவளம் பலநிறைந்து வயங்குமெழிற் கோசேனில் மரீஇய பின்னர்
துன்னுபுக ழீசிரவேல் தம்வருகை துடர்ந்தேகி யுணர்த்த யூதா
வென்னுமகன் றனைவிடுத்தா னிவனெழுந்து படர்ந்தேகியிசைத்தபோதே
மின்னுமெழிற் றேரேறி விறல்யோசேப் பீன்றவன்பால் மேவினனே.

(வேறு.) மேவியவன் றனை யீன்றோன் கழுத்தைக்கட்டி விடாதழுதான்
வெகுநேர மதன்பின் றாதை
ஆவியென வினியவந்த மகவை நோக்கி ஆ! மகனே யுயிருடையோனாய்
நீ யிந்தப்

பூவினினல் வாழ்வுபெற்ருய் இன்னேயானுன் பொன்வதனந் தனைக்கண்
ணுற் பொலியக் கண்டேன்
சீவியமோ டினியான்வாழ்ந் திருக்குமாறு தீர்ந்தாலு மென்னவென்று செ
ப்பினனே உ௪௯

ஆர்ந்தகைசேர் யோசேப்பு துணைவராதி யாகிநின்ரே ரனைவரையும் பார்
தப்போது
வேந்தனிடம் யானடைந்தும் வரவையோதி மேய்ப்பர்களீர் விரவுமந்தை
நிரைகளாதி
யேந்துதன முள்ளவைகள் யாவுங்கொண்டே யீண்டினீ ரெனுமாறு மிசை
ப்பே னிந்தப்
பூந்தலத்தோர் மேய்ப்பரின்மீ துள்வெறுப்புப் பொருந்துபவ ரென்பதின
னே புரிந்து தேர்மின். உ௫௦

ஆதலினல் வேந்தனுமை யழைத்துநுங்கட் காந்தொழில்யா தெனக்கேட்
கு மதற்கு நீங்கள்
நீதகல யாமெங்கள முன்னேர் போலெஞ் சிறுவயது முதல்மேய்ப்பர் செ
யலாலென்றே
ஓதலுற்ருல் வளங்குலவுங் கோசேனுட்டில் உயர்வாழ்வு பெற்றவணீ ரு
றையுமாறே
மோதலுறு மடற்படைக்கைப் பார்வேனென்னும் முடிமன்பா லடைவி
ரென மொழிந்திட்டானே. உ௫௧

மொழிந்ததற்பின் யோசேப்பங் காட்டையாளும் முடிமகிப னிருஞ்சமு
க முடுகி வேந்தே
கழிந்துசெழும் விளைவகன்று பசியால்வாடுங் கானுனின் றெந்தையொ
டென்றுணைவர் யாரும்
பொழிந்தருளு நின்றயைபெற் றுய்யுமாறு போற்றுமந்தை முதற்றமதெப்
பொருளுங் கொண்டே
வழிந்தமது மலர்ச்சோலை மருவுங் கோசேன் வளம்பதியி னிடையாங்கு
வந்தாரென்ருன். உ௫௨

என்றுரைத்துத் தன்னுடனன் றழைத்தாங் கேகும் இருந்துணைவ ரைவரை
யு மெதிரே காட்டி
நின்றனனு லப்பொழுதங் கவரைவேந்தன் நீர்புரியுந் தொழில்யாது நிகழ்
த்து மென்ருன்
பொன்றயங்கு மணிமுடியோ யடியரேம்யாம் போற்றியநம் முன்னேர்த
.ம்மைப் போலத்
மந்தை யுடனினின் றெருகு தம்மைச் சோர்வறவே மேய்க்கின்ற
தொழில்பூண் டுள்ளோம். உ௫௩

அந்நாட்டிற் கொடும்பஞ்ச மானவாற்ருல் ஆடுகட்கு மேய்ச்சலங்கின் ற
தலாலே
எந்நாட்டுங் குறைவின்றிப் பரந்துசெல்லு மிசைகிளரு முடிவேந்தே செ
ழுமை யெய்தும்

இங்காட்டி னிடையடைந்தோம் யாங்கள்வைகற் கிசைந்தவளம் பதியாகு
ஙோசே னென்னும்
உங்காட்டை யெமக்குதவத் தயைசெய்யென்றே புனைப்பரவு கின்றோமெ
ன் றுரைசெய்தாரே. ௨௩௪

வடிசுடர்வைவ் வாட் டடக்கை நிருபனன்னோர் மாற்றங்கேட் டியோசே
ப்பின் வதனநோக்கிப்
படிபுகழு மிருங்காஞன் பதிநின்றுன்னைப் பயந்தோனை முதலோருன் பா
லீண்டுற்றார்
கெடியவளம் பெறுமெகிப்து நாடுமுற்றும் நின்முன்னே யீண்டுளது நினை
வின் வண்ணம்
தடியயரும் வளம்பதிபுக் கவர்கள் வைகக் கடவருறை வதற்கிசைவு கண்
டு மாதோ. ௨௩௫

நல்லவளஞ் செறிகோசேன் நாட்டுவாழ்வு நண்ணலா மெனதுநிரை மங்
தை காக்க
வல்லரவ ரென்றுகண்டால் அவற்றைக்காத்து வருமவர்க்குத் தலைவருமா
ய் வரலாமென்றான்
எல்லையில்லா இறையருள்பெற் றுயர்ந்த யோசேப் பீன்றோனை யெகிப்தி
யர்கோன் சமுகந்தன்னிற்
செல்லவிட்டா னப்போதச் செம்மலந்தத் தேர்வேந்தன் றனக்காசி சிறக்க
வீந்தான். ௨௩௬

அவ்வடிவா ளடல்வேந்த னுனக்குச் சென்ற அகவைதொகை யாதென்று
னவனு நோக்கித்
தெவ்வடி தாழ் வயவேந்தே செகக்கணேயான் றிரிந்துழன்ற சமைநூற்று
முப்பா னாகும்
இவ்வடியே னுள்முன்னோர் நாட்போலல்ல இறப்பவற்பங் கிலேசமுமுற்
றிறந்ததென்றே
எவ்வடிவு மற்றபரஞ் சோதிதாசன் இறைவனுக்கங் காசியின்னு மியம்பி
ப் போனான். ௨௩௭

தரைவேந்தன் பணித்தபடி யோசேப்பேகித் தந்தைமுதலானோர்கள் சார்ந்
துவாழ
உரைசான்றவப்பெருநாட்டிராமசேசென் றூற்றபதியினிற்காணி யுதவிய
ன்னோர்
நிரையார்ந்த மந்தைகளோடாங்குவைக நேருவித்து வேண்டுவன கொடுத்
துக்காத்தான்
திரைகான்ற கடலுலகிற் றேயந்தோறுஞ் செப்பரிய கொடும்பஞ்சஞ் செ
றிந்ததன்றே. ௨௩௮

என்றவளம்பயிலெகிப்துங் கானானும் எய்துகொடுங் கருப்பத்தால் இளை
த்தேபோன
சான்றநிதி யவற்றினிடை யுள்ளவெல்லாந் தானியங்கள் கொண்டோர்க
டரக்கைப்பற்றி

ஆன்றவுணர் வுடையோசேப்புரசனில்லத் தடைவித்தானவ்விருநாட்டவருந் தம்பாற்
சான்றபொருளனைத்துமற்ற பின்பவ்வள்ளல் கடிமனையின் றிருவாயிற் கண்ணுற்றாரே. ௨௫௯

அங்கனுகி யெகிப்தியர்க ளனைத்துளோரும் அண்ணலேயாசகாரந் தருவாயுன்முன்
எங்களுயிர் போவானே னெமதுகையி லிருந்தசெம்பொன் றொலைந்ததெனவிசைத்தார் யோசேப்
புங்களிடம் பொருளின்றே லாடும்மாடும் உண்டெனிற் றருவேனென் றுரைத்தானன்னோர்
தங்களிடத் துறுமவற்றைக் கொடுத்துவேண்டுந் தானியங்கொண் டுயிர்சின்னாட் டரிக்கப்பெற்றார். ௨௬0

துரகதமு மானிரையின் றொகையுமாட்டின் றொகுதிகளுங்கத்தவமுந்துற்றயாவும்
வரவரவேற் றவனுணவு வழங்கவுண்டோர் வருடமிவ்வா றவர்கழித்தாரமற்றையாண்டில்
தரவெமக்கு யாதுமில்லை நிலமுமெங்க டம்முடலுமேயொழியத் தந்தோம்யாவும்
பரவுபெருந் தகையோயெம் பாரும்யாமும் பரிந்தழியநீபார்த்தல் பான்மையாமோ. ௨௬௧

வள்ளலே யெமையுநிலங்களையுங்கொண்டு மாறாகத் தானியங்கள் வழங்குவாய்நீ
எள்ளலாவுயர்சீர்த்திப் பார்வோனென்னும் இறைக்கெமது நிலங்களுடனடிமையாவோம்
கொள்ளவே கொண்டெமது சீவன்பாரிற் குலையாதுய்ந்திடவுநிலம் பாழாகாமல்
உள்ளசீ ருடனுறவு மெமக்கின்னேநீ உதவுவாய் தானியமென் றுரைத்துநின்றார். ௨௬௨

பஞ்சமிகவதிகரித்த வாற்றால்யாரும் படுவருத்தந் தனைத்தாங்கார் பகர்ந்தவாறே
தஞ்சகல வயல்நிலமும் விலைக்குநல்கித் தானியம்பெற் றுயிர்தரித்தார் தகும்பார்வோனும்
வெஞ்சமரவயவேந்தன் றனதாயவ்வூர் வியனிலங்களிவ்வாறு மேயவாகுந்
தஞ்சமென வேதியர்க்கு வேந்தனீந்த தரைகளே விலைப்படுத றவிர்ந்தமாதோ. ௨௬௩

வளங்குலவு மெகிப்தினெல்லை யொன்றுமுன்னை மற்றையதுவரைக்குமுள்ளோர் தமையுஞ்சேர
விளங்குபுகழ் யோசேப்பங் கவ்வங்காட்டின் மேவுமெனக் கூட்டியவர் தம்மைநோக்கி

அளந்துதவுதானியத்தா னிலத்தோடிம்மை அடல்வேந்தற் கடிமைகளேயா
கக்கொண்டேன்
இளந்தபெரும் பழனமிடை நமதுபாலிற் கிடைத்தவிர்சைத் தெளித்திரி
ன்னுங் கிளைத்தக்கேண்மோ. உகச

விளைபயனி லைந்திலொரு கூறுசெங்கோல் வேந்தனுக்கங் கிறைகொடுமி
ன் மிகுநாற் கூறும்
உளையமுயன் றியற்றுதொழிற் பிரயாசத்துக் கூலியமாய்நுமர் தமிளை மக்க
ளாதி
வளையவருமுந்தமர்க்கு முணவாமாறு வைத்திடுமினெனவவர்க்கு வகுத்
தானன்றோர்
களைகணதா யெமைக்காத்தாய் கடாட்சம் வைப்பாய் காவலனுக்காளா
வோங் காண்டியென்றார். உகரு

அரசிறையிச் சான்வரைக்கும் யோசேப்பிட்ட அம்முறைபோலெந்திலொ
ன்றும் அந்நாட்டின்கண்
பரசிடுவே தியர்நிலங்கட் கிறையங்கில்லைப் பகர்ந்தசெழுங் கோசேன்மா
நாட்டில்மேலோன்
விரசுதயை பெற்றிசிர வேலர் வைகி மேவு சுதந்தரம்படைத்து விருத்திமி
க்கார்
சிரசெனமண்ணினர்க்கரசீ சிரவேலாங்கே சிறப்பொடுபன்னேழ்வருடஞ்
சீவித்தானே. உகசு

நலங்கிளருமவனுயுள் முழுதுநூற்று நாற்பத்தே ழாகுமவ னுடலையாவி
விலங்குறுமக் காலமணித் தாயபோதம் மிக்கவன்றன் மேனுளில் விழுந்
து கல்கும்
வலங்கிளர்யோ சேப்பென்னும் மகனைக்கூவி மகனேகேள் சவக்சேம
மெம்முன்னோர்பால்
துலங்குறயான் பெறுமாசை துன்றப்பெற்றேன் சொற்றிடுமென் மாற்றங்
கடொருத்துக்கேண்மோ. உகஎ

என்மீதிற் கருணையுனக் குண்டாமென்னில் இந்நாட்டி லென்னுடலைப்
புதைத்திடாமற்
பொன்மேவுங் கானனி லேந்தைமுன்னுப் போற்றியவெம் முன்னோரை
ப் புதைத்ததானக்
தன்மாட்டிற் சேமஞ்செய்வதற்காவென்மேற் றயைபிறொடு சத்தியமுங்
காட்டற்காக
நின்கீள்கை யென்றொடைக்கீழ் நீவையென்றான் நின்பணிபோனிசழ்த்து
வலென்றவனுஞ் சொன்னான். உகஅ

பன்னியசொற் படிக்காணை யிடுகவென்று பகர்ந்திடலு மாணையிட்டான்
பண்புளோனும்
மின்னுமெழிற் பரியங்கத் தலைமாட்டின்சார் மிகுமுதியோன் சாய்ந்து பி
ன்பு மேவினனல்

அன்னதன்பின் அவன் வருத்த மடைந்தமாற்றம் அங்கொருவன் சொலவ
றிந்து யோசேப்பன்று
தன்னிருமா மைந்தரையுமுடனே கூட்டித் தனையீன்றோன் றன்சமுக
ஞ் சார்ந்தானன்றே. ௨௬௯

(வேறு) வந்தசெயலாங்கொருவன்வகுத்திடலுமிசிரவேல்மகிழ்ச்சிகூருஞ்
சிந்தையுடனெழுந்திருந்தத் திருமகனை முகநோக்கி யாவும்வல்ல
எந்தைபரன் காணுனி லூஸென்னு மிருந்தலநதிலெனக்குக் காட்சி
தந்தருளி யெனக்கினிய தண்ணளியால் நல்லாசி தந்தனையீது. ௨௭௰

வந்ததிக மாயுனிலிம் மாநிலத்தில் அநேகசனம் மல்கச்செய்துன்
சந்ததிக்கு நித்தசுதந் தரமாவித் தலமதனைத் தருவேனென்றான
இந்தவளம்பதியினில்யா னெய்தமுனீ யீன்றவிருசுதருமென்றன்,
மைந்தரினி யுருபன்முதல் வகுததமகார்போலுரிமை மருவுவாரே. ௨௭௧

இங்கிவரின் பின்னேநீ யெய்துமிள மக்களுனக் கெனக்கொள்ளன்றோர்
தங்கடங்கள் துணைவரது சுதந்தரத்தே தசதம்பேர் சாரநிற்பார்
பொங்குபதா னினறெழுந்து காஞறும் பொன்னுட்டெப் பிராத்தாவென
னத்
தங்குதலந் தனக்கப்பாற் சார்வழியிற்சகவாழ்வை யிராகேல் நீத்தாள். ௨௭௨

அவளுடலைப் பெத்திலகேமாகுமெப்பி ராத்தாவுக் காமார்க்கத்தே
சவமுறுமச் சேமமுய்த்தே னெனச்சாற்றிப் பௌத்திரர்கடமை யாரென
றான்
இவர்களெந்தாயித்தலத்தி லெம்பெருமா னீந்தவிரு குமாரரென்றான்
தவமுதியோன் ஆசிபல்க அவரையென்முன் தருகவென்று சாற்றினனே.
௨௭௩

மிகுமுதியோனாயிசிர வேல்விழிகளொளிமழுங்கி மேயவாற்றால்
தகவுடையோனவ்விரண்டு தனயரையுஞ் சமீபமதிற் சாரச்செய்தான்
முகமுறுமச் சிறுவரையம் மூப்பாளன் முத்தமிட்டுத் தழுவிமுன்பாம்
புகழ்புனையும் யோசேப்பின் பூங்கமல மலர்வதனம் புரிந்துநோக்கி. ௨௭௪

மனக்கினிய மகனேயுன் வாண்முகத்தைக் காண்பதற்கு வாயாதென்றே
யுனக்கலக்கம் பெரிதுழந்தே னுன்புதல்வர் தங்களையு முவந்துகாண
எனக்கினிய பெருந்துணையா யிதுகாறும் புரந்தளித்த எந்தையாகும்
பனற்கரிய பரஞ்சோதி பரிந்தருள்செய்தனனென்று பகர்ந்திட்டானே.
௨௭௫

சாருமுளத்தன்பொடவன் சாற்றியசொற் கேட்டனனை சானுநாப்பட்
சேருமிருபாலரையும் பின்னிறுத்தி முன்னுகச் செறிந்துவையம்
நேருறவே தாழ்ந்திறைஞ்சி நிமிர்ந்தவன்செவ் வலக்கைநேர் மனுசேயெ
ன்னும்
பேருடையோனுறவிடத்தெப் பிராயீமு மெய்தவுய்த்தான் பீடுளோனே.
௨௭௬

வேறு.) புலநதுணர்வுடைய மூப்போன் புத்திரு ருவமேயாக
வலக்கையை யிளையோனுத்த மாங்கமேல் வைத்துமூத்தோன்
தலைக்குமேலாகமனைத் தன்னிடக்கையைவைத்தே
வலதுயர் யோசேப்பென்னும் மைந்தனை முந்தவாழ்த்தி. ௨௭௭

எந்தையோடன்னுன்றந்தை யிறைஞ்சிய தேவுமன்னை
வந்தவென் சங்கமெதாட்டு மகிழ்ந்துகாத்தவனுமன்னை
எந்தவல்லிடர்க்குமீட்ட தூதனுமெனவாமனைல்
இந்தநற்பாலற்காசி யீந்திடக்கடவனன்றே. ௨௭௮

சான்றவென்பெயருமென்மூ தாதையின்பெயருமென்னை
ஈன்றவன்றனதுபேரு மிவர்கிடப்படுவகாக
தோ றுபல்வளஞ்சால்வைப்பிற் றொகைமிகப்பொலியரென்று
ஆன்றநல் லுணர்வின்மிக்கான் அவர்களை வாழ்த்தினுனே. ௨௭௯

இசைவளரிசிரவேலன் றெப்பிரா யீமின்சென்னி
மிசைவலக்கரத்தைவைத்தல் வெறுத்ததைமாற்றிவைக்கும்
நசையொடு யோசேப்பந்த நற்கரந்தூக்கியெந்தாய்
வசையறுமுவனன்றிந்த மைந்தனே மூத்தோனென்றான். ௨௮0

அவ்வுரைகேட்டுத்தாதை அஃதியானுணர்வேன்மைந்தா
இவ்வுயர் மகவுமாங்கோ ரிருங்குலத்தந்தையாகிப்
பௌவநீ ருடுத்தபாரிற் பல்குவானிளையசேயே
செவ்விதினிவனில்மிக்குத் திரள்சன மாவனென்றான். ௨௮௧

இம்முறை அவரை வாழ்த்தி யிசிரவேலரானோர்
தம்முளாங்கொருவர் தம்மைச் சார்புறவொருவர்நோக்கிச்
செம்முறையெப்பிராயீம் திருநதருமனுசேபோல
எம்மிறை யுனையுமாக்கு மெனறுவாழ்த்துவரென்றானே. ௨௮௨

அன்னநன்மொழிகளோதி யன்றவரிருவோருக்கும்
மன்னியவாசிர்வாதம் வழங்கியே மனுசேயென்னப்
பன்னுமம்மூத்தசேயைப் பார்க்கிலுமுயர்வுதோன்ற
முன்னவனறலைமைகொண்டோன் முதன்மையை இளையோற்கீந்தான.
௨௮௩

மற்றிவை நிகழ்ந்த பின்னர் மைந்தனைத் தந்தை நோக்கி
இற்றிடு மரணகால மெனக்கணித் தாயதன்றே
தற்றுநும் பக்கமாகத் தூயவன் வதிந்துமீண்டும்
உற்றுநும் முன்னோர் வாழ்ந்த வுயர்தலத் துமை யுய்ப்பானே. ௧௮௪

நின்றுனை வரினுமிக்கு நேர்ந்தியான் கட்கத்தாலும்
வன்றிறல் வில்லினாலும் வல்லெமோ ரியர்தங் கையில்
நின்றியான் கவர்ந்த பங்கை நினக்கியா னருளினேனால்
என்றுளத் தன்புதோன்ற இனிதுரைத் தருளினானே. ௧௮௫

இயம்பிய பின்னரந்த விசிரவே லேனையோராம்
வயம்பெறு மக்கடம்மை வம்மினென் றழைத்துங்கட்கு

நயமுடைற வருகாலத்தில் நடப்பவை தெரிவிப்பேனியான்
பயமுறு முணர்வீ ரின்று பகருமென் வாய்மை கேண்மோ. ௧௮௬

உருபனே யெனது மூத்த புதல்வனீ யுறுமென் சக்தி
வருமூதற் பலனீயாளுப் மகிமையின் பிரதானத்தோ
டருவலி விசேடமாளுய் அசுசியென் மஞ்சத்துய்த்தாய்
மருவுறுஞ் சலனநீரை மானினை பீடுறுயே. ௧௮௭

ஏறுள்வலிச் சிமியோனு மிலேவியுந் துணைவ ரன்னோர்
செறுபடை வாள்கள்வெய்ய கொடுமையின் கருவி செம்மை
யுறுமென துளமேயனளுர் மந்தணத் துடன்பா டெய்தேல்
மறுவிலென் மேன்மையேநீ மற்றவர் குழுவொன் றேலே. ௧௮௮

மற்றவர் குரோதங் கொண்டோர் மனிதனை வதைத்து நெஞ்சில்
உற்றிடு மகங்காரத்தா லுயர்மதிலிடித்தா ரன்னோர்
துற்றவுக்கிரமாங் கோப மொடுறுங் கொடுமை துன்பம்
பெற்றிடு மூர்க்கந்தானும் சாபமே பெறுவமாதோ. ௧௮௯

கூறிய வவரையான்யாக் கோப்பினத் தேயநின்று
வேறுறப் பிரிப்பேனெங்கள் மேலவ னருளா லுய்வுற்
றேறிய பெருமைசாலு மிசிரவேல் மரபோற்குள்ளே
மாறிடச் சிதறடிப்பேன் மற்றவர் தம்மை மன்னே. ௨௧௦

தகவுறு யூதாவேநின் சகோதரர் துதிப்பா ருன்னை
மிகுவலி நின்கையொன்னோர் வெரினிடை யிருக்கு முன்னைச்
சகதலத் துயிர்த்தோன் றந்த சந்ததி நின்னதாகும்
தொகுபுகழோனே நீயோர் சோர்வறு சிங்கசாபம். ௨௧௧

இரையினைக் கவர்ந்து மேலிட் டெய்தினை மகனே நீயோர்
பொருமடற் சியமென்னப் புகல்கிழச் சிங்கமான
மருவியே பதுங்கிளுய் மற்றுநீ கிடந்தாய் நின்னை
வருமுறை யெழுப்புதற்கு வல்லவர் யாவரம்மா. ௨௧௨

துதிவளர் மகிமைச் சீலோ துன்னுமவ் வளவுஞ் செங்கோல்
நிதிகிளர் வாழ்க்கையோனே நினைப்பிரிவதும் நியாய
அதிபதி நின்பொற்பாதம் அகல்வது மில்லையாகும்
நதிபதி சூழ்பாருள்ளோர் நண்ணுவர் நின்பாலன்றே. ௨௧௩

கரந்தனின் பெண் டிராட்சக் கொடியிடைக் கட்டல் செய்வாய்
பரந்தெழுஞ் செழுமையாமக் கொடிகளிற் பரள்கள் சேர்ப்பாய்
சுரந்திடு மிரசந்தன்னிற் றுகிலையு மதன்செந்நீரில்
உரந்திகழ் தருநின்னங்கி தன்னையு முறத்தோய்ப்பாயே. ௨௧௪

பன்னரு மழகுவாய்ந்த பாலநின் கண்டிராட்ச
வின்மது வதனுற்செய்ய நிறத்தினை யெய்திநிற்கும்
கன்னிறங் குலவுமிக்க நகைதிகழ் நினது பற்கள்
மன்னுவெண் பாலினுலே வெளுப்பினை மருவுமாதோ. ௨௧௫

முந்துநித் தியமாம்வெற்பின் முடிவிடத் தெல்லைநின்று
வந்திடு கின்றவாகும் வருத்திடு மவைகள் மன்னோ. ௩௦௫

அன்னவை தாமேமிக்க வணிகிளர் புகழியோசேப்
பென்னுமம் மைந்தன் சென்னி யிடத்தினுந் துணைவனானோன்
றன்னைவிட் டகன்றவன்ன தகைமையோன் றனது சென்னி
மன்னிய வுச்சிமீதும் மரீஇநிலை நிற்பமாதோ. ௩௦௬

பென்யமீன் கோணாய்போலப் பீறுவான் காலைதன்னிற்
றன்செழு மிரையைநுங்குஞ் சார்வுறு மாலைப்போது
முன்செழும் பொழுதன்னிற் கொள்ளையில் முயன்றுபெற்ற
பொன்களைப் பகிர்வானென்று மிம்முறை புகன்றிட்டானே. ௩௦௭

இன்னநல் லாசிபெற்றோர் யாவரு மிசிரவேலின்
பன்னிரு மரபுளோராம் பண்பினி லுயர்ந்த தாதை
அன்னவர்க் காசிநல்கும் பொழுதிலவ் வவருக்காங்கே
மன்னுமவ் வாசிசேற்ப இம்முறை வாழ்த்தினானே. ௩௦௮

பேர்த்துமங் கவரைநோக்கிப் பெருந்தகை முன்னோர் பால்யான்
சேர்த்திடப் படுமக்காலஞ் சேர்ந்ததா பிரகாங்கானா
னூர்க்கிடை மக்பெலாவி லுற்றிடுங் குகையாங் கொன்று.
சீர்த்திடக் கிரய நல்கி வாங்கினன் சென்ற நாளில். ௩௦௯

(வேறு.) அன்னவனைத் தேவியுட னதிலடக்கஞ் செய்தார்கள்
என்னையினி தளித்தவனோ டிவ்வுலகி னெனையீன்ற
அன்னையையு மதிற்சேமஞ் செய்தார்க ளாங்கதிலே
பன்னுதக்கை யிலேயாளாம் பாரியையும் புதைத்தேனே. ௩௧௦

அத்திரமா நிலமுமதி லாங்கிருக்குங் குகையுமெத்தின்
புத்திரர்பாற் பெற்றுளவாற் புகலுமெப்பி ரோனிடங் கொள்
இத்திரமாங் குகையினிலே யென்குலமுன் னோருடனே
வைத்திடுவீ ரெனையுமெனப் பணிசதுரையும் வழங்கினனே. ௩௧௧

மைந்தருக்கு மற்றிந்த மாற்றமுரைத் தாயபின்னர்
தந்தைதன திணையடியுஞ் சயனமதின் மிசை சேர்த்தான்
உந்துமெழின் மாமேனி யொருவியுயிர் நீங்கியபின்
முந்துறுதன் குலத்தவரா முன்னோர்பாற் சேர்சதுண்டான். ௩௧௨

சகந்தனில்மிக் குயர்வாழ்வு தந்தையகன் றிடலுமன்னான்
முகந்தனில்வீழ்ந் தழுதரற்றி முத்தமிட்டு யோசேப்பு
சுகந்தமிடப் பணித்திட்டான் தொண்டினராம் பண்டிதர்கள்
உகந்தபரி மளவருக்க மூட்டினரவ் வுடலினுக்கே. ௩௧௩

நறுநாற்றம் பெய்தார்கள் நாற்பதுநா ளிவ்வாறே
உறுமேற்றம் படைத்தவந்த வுத்தமற்கா வதுகாறும்
பெறுமூற்ற முறுந்தொழிலோர் பெய்தனராங் கெகிப்தியர்கள்
துறுமாற்ற லுடையவற்கா வெழுபதுநாட் டுயருழந்தார்.

தன்பழுது மக்காட்க டைகலேக்கதன்பின் யோசேப்பு
கொன்பயில்வா ளடல்வேந்தன் குடும்பமுற்றார் தமைநோக்கி
அன்பணிசீ ருளத்தினெந்தை யாவடுக்களைக்கூடிய முகநோக்கி
இன்பகலா வென்மகனே யிகவாழ்வை யொருவுகின்றேன். ௯௧௫

பொற்கானு னெனுநாமம் பொருந்துவளம் பதியினில்யான்
எற்காக வெட்டுவித்த இருங்குழியி லென்னுடலை
நற்காம ருறுஞ்சேம நண்ணுவிப்பா யென்றுரைத்தச்
சொற்காணை யிடுகவெனச் சொல்லியிடு வித்தானே. ௯௧௬

ஆமதனால் யானுண்டே யனுமியெந்தை தேகமதைச்
சேமமுறச் செய்ததற்பின் றிரும்பிவரு குவலென்றே
மாமகுட வேந்தினுக்கு வழுதவுமென்றான் வழுத்தலுற்றார்
நீமருவிப் புதைத்தபின்பு மீளுகவென்றா ரிறைபதுமே. ௯௧௭

காவலன்பால் விடைகேட்டுக் கவினுடையோன் சானுனா
மேவலுக்கா வெழுந்தானவ் வேந்தனகப் பணிமுதியோர்
யாவருமிக் குயர்வளஞ்சா லெகிப்துவளம் பதியகத்தே
தாவலுறு முதியோர்கள் சகலருமன் றுடனெழுந்தார். ௯௧௮

அவன்குடும்பத் தனைவோரு மன்புசெறி றுணைவருமத்
தவம்பெறுசீர் தற்றாதை தன்னகத்தி லுளரோரும்
கவன்றெழுந்தா ருடனேகக் காதலரா டானெனவே
றவன்றவிவை கோசேனில் வைகவழி நோக்கினரே. ௯௧௯

உந்திசெறி பலவிரத முடனடல்வாம் புரவிகளின்
பந்திகளு நிரைநிரையாய்ப் படர்ந்தவர்க ளுடன்கூடி
முந்திவழி சென்றதனால் முங்குதிரள் பெரிதாயிற்
றிந்தவகை யவர்யோர்தா னிருநதியின் கரைகடந்தார். ௯௨௦

யோர்தானி னக்கரையி லுரைகெழுசீ ராதாத்தாம்
போர்தாவுங் களமதனிற் புகுந்துமிகப் புலம்பினரால்
ஆரார்வ முறும்புலம்ப லக்காடர் கண்டெகிப்தா
மூரார்க டமக்குளிஃ தொருபெரிய புலம்பலென்றார். ௯௨௧

(வேறு.) சாருமக் காரணத்தத் தலமாபேல் மிசிராயீமாம்
பேருறப் பெற்றதாகும் பேசிய குகையில்மிக்க
சீருறுந் தந்தைதேகம் புதைத்தியோ சேப்பன்றந்த
வூரகன் றனைவரோடு மெகிப்துநா டுற்றானன்றே. ௯௨௨

இணையிலா னருள்சேர்தாதை யிறந்தபின் யோசேப் பென்போன்
றுணைவருட் கலங்கித்தாமுன் றுயருறப் புரிந்தகுற்றம்
பணைவயப் புயத்தானெண்ணிப் பகைநிச மாவுட்கொண்டே
அணைதரு தீமைசெய்வா னமக்கென வஞ்சினரே. ௯௨௩

(வேறு.) அஞ்சியவன் பாலடைந்துன் றுணைவர்தீமை அன்றுசெய்தார் அ
வருனக்குப் புரிந்ததொன்றும்
நெஞ்சிருத்தி வையாது பொறுத்தன்னோர்க்கு நீயருள்செய் திடுகவென வு
ரைத்தே னென்று

விஞ்சபுக ழன்றுதை சாழ்னுன்பால் விளம்புமென விதிந்துள னூ லுங் கைத தேவே
தஞ்சமெனப் பரவடியேந் தீமையாவுந் தக்கோய் நீ பொறுத்தியெனத் தாழ்ந்தோமென்றே. ௱௨௪

சொற்றுமன மறிந்துரையி னென்னவேகித் தூதுவர்கள் யோசேப்பின் குழனண்ணி
மற்றவர்சொல் லுரைவகுத்தார் கேட்டபோதவ் வள்ளல்மனம் நெகிழ்ந் துருகி மலர்க்கண்முத்தம்
உற்றிழிய வழுதனனூற் றுணைவர்தாமு மொருங்கணுகி யுயர்சிர்சி யடையவண்ணல்
பொற்பதமுன் புவிமிசைவீழ்ந் திறைநின்னேவல் புரிதொழும்பர் யாங்களெனப் புகன்றாரன்றே. ௱௨௫

ஆங்கதுகேட் டவனவரை நோக்கியஞ்சீர் அமலனுக்கு யானிணையோ வந்துஞ்செய்கை
தீங்கெனினு மிங்ஙனீர் காணுமாறே திரள்சனத்தைப் புரந்திரட்சை செய்யவெண்ணி
ஓங்குபுகழ் மேலவனே செய்தானஞ்சீர் உம்மையுமும் மக்களையும் புரப்பலென்றே
பாங்குளநன் மொழியகலாள் ளாகுமாறு பகர்ந்துள்ளந்தேறுவித்தான் பண்புளோனே. ௱௨௬

(வேறு) நிறைவளஞ்சால் செழுமெகிப்து நாட்டில் யோசேப்பு துணைவரோடும்
உறைதலுற்று னவன்வாழ்நா ளொருநூற்றுப் பத்தாண்டவ் வுரையசல்மிக்கோன்
அறைதருசீ ரெபிராயீ மருள்மூன்றாந் தலைமுறையா மகாருங்கண்டு
குறைவறுதே வருள்படைத்திக் குவலயத்தில் நல்வாழ்வு குலவவாழ்ந்தான்.

மனுசேயீன் றருள்சுதனும் மாகீரின் புத்திரரும் மன்னற்காவி
யெனுவுயர்ந்த யோசேப்பா மேந்தல்மடி யினில்வளர்ந்தா ரினைய வள்ளல்
முனுகவுறுந் துணைவரைமா முகநோக்கி எனக்காயுள் முடிவண்ணிற்றால்
மனுநிகளுக் கெட்டாத வானவன்பே ரருளும்மேல் மன்னுமாதோ. ௱௨௮

எப்படியுந் தேவனரு ளின்றுதவி உமமையிந்நாட் டிடையகனறு
தப்பறுநங் குலத்துமுன்னோர் தமக்களித்தே னென்றுணை சாற்றுகின்ற
அப்பெருநாட் டகத்தனுகப்பண்ணுவனு லதுநிசமா மனையபோதே
இப்படிவந் தென்னையுநீர் கொடுபோமி.னிதற்காணை யிடுமினென்றான்

(வேறு.) இதெம்பரம னுதவருளி னுலகிப்தின்
மீதவுருயர்ந்து விளங்குபுகழ் யோசேப்பு

# EXODUS CHAPTER I.

## உ. யாத்திரைக் காண்டம்.

### க. சிறைபுரிபடலம்.

இணையறு மகிமைசான்ற எம்பிரா னருள்பெற் றய்ந்த
பணைவயம் புயயோசேப்பு பாருல கொருவி னானல்
துணைவரு மிறந்தாரன்ன காலையத் தொல்குலத்தில்
அணைதரு முதியோர்யாரு மாருயி ரகன்றாரன்றே. க

பெருந்தசீர் படைத்துமேன்மை பிறங்கெழி லிசிரயேலர்
விருத்திபெற் றோங்கி மென்மேல் மிகுபிர பலத்தரானார்
மருவுந்திகழ் மலரஞ்சோலை வளைதருமக்கண் ணாடங்
வுருத்திகழ் மரபினோரா லுரைபெற நிறைந்ததம்மா. உ

அப்படி நிறையுநாளி லந்தநன் னாட்டினங்கே
தப்பறு யோசேப்பண்ண றனையறியாதோ னைய
கைப்படை வேந்தனந்தக் கவினுயர் தேயத்தோரை
இப்புடை வம்மினென்றே யினிதழைத் தவரை நோக்கி. ௩

யாருநீர் கேண்மினெம்மி லிசிரவேல் மரபினோர்கள்
சீருறப் பெருகிமிக்க பிரபலஞ் சிறந்தோரானார்
போருறில் விரோதமுய்த்தெம் பொருந்தலர்க் காய்போராற்றிச்
சேருமிந் நாட்டை நீங்கிச் செல்லவு கூடுமன்றே. ௪

ஆதலாற் பெருகவொட்டா தவர்களை யுபாயந்தன்னாற்
பேதுற அடர்த்தவம்மி னென்றனன் பெருமானிவ்வா
றோதலா லவருமுள்ள மொருப்பட லுற்றனன்னோர்தம்
மீதினிற் பாரமேற்றத் தலைவரை விதித்தார்மன்னோ. ௫

இப்படி யவர்பிதோமு மிராமசே சனவுமோதும்
அப்பெரும் பண்டசாலை நகரங்க ளவையிரண்டுங்
கைப்படை யடுபோர்வேந்தன் காரண மாவர்நாளில்
தப்பற வவரைக்கொண்டே சமைத்திடப் புரிவித்தாரே. ௬

நெருக்கமங் கவரெவ்வாறு நேரறப் புரிந்தபோதும்
பெருக்கமிக் கிசிரவேலர் பெற்றன ரெகிப்துநாடர்
தருக்ககத் தகன்றுமேலுந் தாமவ ருள்ளத்தன்னைக்
கருக்கவெம் பணிகடம்மைக் கடினமாப் புரிவித்தாரே. ௭

சாந்துமிட் டிகையுங்கொண்டு தருங்கொடும் பணியினாலும்
போந்தவெம் பழனந்தன்னிற் புரியுமெத் தொழில்களாலும்
தாந்தம துயிரைத்தாலு மனையவர் வெறுக்கத்தக்க
தாந்துயர்க் கொடியவேலை யவர்செயச் செய்தாரந்தோ. ௮

அன்றியுஞ் சிபிரான் பூகா ளாம்பெய ருடையராகித்
தன்றெபி ரேயச்சாதி மருத்துவத் தொழில்செய் மாத

ரென்றுரை யிருவர்தம்மை யழைத்துப் ரெகிப்துநாட்டு
வென்றிசெஞ் சிலைக்கைவேந்தன் விளம்புதல் மேயினனே. ௯

மருத்துவ மடவீரின்று கைசெபிரேயமாதர்
பெருத்திடு நோவினோடும் பிரசவா தனத்தின்மீதே
இருத்திடப் படுமப்போழ்தி லீனுமாண் மக்கடம்மைக்
கருத்தொடு கடிந்துநல்குங் கதைகளைக் காத்திரென்றான். ௧௦

அஞ்சிடுங் கொடுமைசெய்ய அவன்பணித் திட்டபோதும்
விஞ்சிய மகிமை சான்ற மேலவற் கஞ்சியந்தச்
செஞ்சிலை நுதலாரவ்வாண் சிறுவரா னவர்கடாமு
முஞ்சிட வருளினோடு முயிர்பெறப் புரிந்து காத்தார், ௧௧

பூவினு ளொய்யதாமிப் புன்புவி வாழ்க்கைநச்சி
யாவினும் பெரியசெல்வ மிழந்திடற் கிசையார் நல்லோர
கோவினுக் கஞ்சாரன்ன கோதையர் யாவும் வல்ல
தேவினுக் கஞ்சிச்செய்த இச்செயல் சிறந்ததம்மா. ௧௨

கோதுறுங் கொடுங்கோல்வேந்தன் குறித்தவாண் சிசுக்க டம்மைக்
காதுத லொழிந்தாரன்ன காரிகை மாரென்றோர்ந்து
ஓதுமென் பணியின் வண்ண முஞற்றல்நீ ரொழிந்தவாற்றிற்
கேதுமற் றென்னையென்றே யிசைமினென் றழைத்துக்கேட்டான்

கொன்படை வேந்தையந்தக் கொம்பனார் நோக்கியைய
நின்பெரு நாட்டிலுள்ள நேரிழை மார்போ லல்லர்
வனெபிரேயமாத ருளரியா மருவமுன்னே
பொன்பெறு மக்கடம்மைப் பொறையுயிர்த் திடுவரென்றார். ௧௪

வாய்ந்தநற் குணத்தோரான மருத்துவ மகளிர்க் கெம்மான்
ஏய்ந்தநற் கருணைசெயதா னிசிரவேல் மரபினோர்கள்
பாய்ந்தநீ ருததியைப்போற் பல்கிமிக் குயர்ந்தாரம்மா
காய்ந்தவன வலியால் மிக்க காவலனதனைக்கண்டான். ௧௫

கண்டனு மெகிப்தார் கோமான் குடிகளைக் கருத்தால் நோக்கி
மாண்டரு மெனதுநாட்டின் வைகெபிரேயமாதர்
பூண்டதங் கருப்பமுற்றிப் பொறையுயிர்த் திடும்போதெல்லா
மாண்டலை யரையுந்தெண்ணீ ராற்றினு ளிடுமினென்றான்.' ௧௬

சிறைபுரிபடலம் முற்றும்.



## உ. மோசே அவதரித்த படலம்

வலந்திக ழிலேவியென்போன் மரபுளோ னொருவனந்த
நலந்திகழ் மரபினுள்ளோர் கன்னிகையை வேட்டுற்றானால்
பொலந்திக ழிளையமென்சொற் பூங்கொடி வயிறுவாய்த்தோர்
பலந்திகழ் குமரன்றன்னைப் பாரினி லுயிர்த்தாண் மன்றோ. க

நன்றவன் மதலைமேனி யெழிலுளோ னெனவே கண்டு
மூன்றுமா மாதங்காத்து மறைத்திட முடியாளாகி
என்றவோர் நாணற்பேழைக் கிடும்பையின் புரவுமிட்டச்
சான்றசீர் மகவையுள்ளே சார்வுறத் தனிவைத்தாளே. உ

வைத்தனள் யாருங்காணா வகைமறைத்தெடுத்துக்கொண்டு
நத்தலைநதிதீரத்தில் நாணலூடெய்த்துப் போனாள்
அத்தலைநிகழுமாற்ற மறிந்திடு மாசையுளாளாய்ச்
சித்திரமதலை தன்னை நோக்கினள் சேணினின்றாள். ங

வளங்கிள ரெகிப்துவேந்தன் மாமக ளதிசீராட
உளங்கொடு படர்ந்தங் காயங் கரையினி லுலாவிநிற்க
அளங்கெழு நாணலூடா மத்தகுபேழைதன்னை
விளங்கயில் மருளுங்கண்ணாள் களிப்புற விரும்பிக்கண்டாள். ச

காணலு மரசனீன்ற கன்னியக்கரையினின்ற
பூணலமுடையதாதி யொருத்தியைப் புரிந்துகூவி
நாணலம்பேழைதன்னை நண்ணிநீ கொடுவாவென்றாள்
கோணலம் பிறைபோனெற்றிக் கோதைபோய்க் கொடுவந்திட்டாள். ரு

வள்ளையங் குழையாள்பேழை திறந்துமா மலர்க்கண்ணாலே
பிள்ளையைநோக்கினளப் பிள்ளைவாய் திறந்தங்கன்னா
ளுள்ளநெக் குருகும்வண்ண மழுதவவ் வரற்றுமோசை
கொள்ளரு மிரக்கமன்னா ளுளத்தினிற் கொடுத்ததன்றே. சா

நெஞ்சக மிரங்கியந்த நெறித்தபைங் குழலி யிந்த
விஞ்செழின் மதலையீண்டு மேவெபி ரேயரானோர்
தஞ்சிறு குழவியென்று சாற்றின ளதுகேட்டாங்கம்
மஞ்சனின் றெனவையந்த மங்கைதன் மருங்கிலானோர். எ

(வேறு) மாடாயங் கவளைப்பார்த்திம் மதலையை வளர்க்கவல்ல
கோடாயைத் தருவல் வேண்டிற் கூறெனக் கொணர்க வென்றாள்
சேடாய படிவம் வாய்த்த சிற்றிடைச் சிறுமியன்னை
நாடாயைக் கொடுபோயந்த நரபதி மகன்முன் னுய்த்தாள். அ

---

* அங்கிறை தவிர்த்தக்காறு கைத்தனி விசிரவேலர்
முங்குற நடத்தும்பாலன் மொழிதகக் கிடந்தகாட்டு
படு†மயல் சிறையினீக்கிப் பரமனா ருன்மண் ணோர்சேர்
திடவிடுஞ் சுதனுன்றெட்டி லெப்தலைக் காட்டுமோதோ.

† மயல் பிசாசு.

முன்வந்த தாயையந்த முடியுடை நிருப னீன்ற
மின்வந்த மருங்குனங்கை விழித்திந்த மகவை நீயின்
பொன்வந்த மனையிற்கொண்டு போய்வளர்த் திடுக வெற்கா
வென்வந்த தெனினுஞ் செய்பொன் யானுனக் கீவலென்றாள் ௯

கொலையொக்கும் படைவேந்தீன்ற குமாரிசொற்படியே கொண்டு
சிலையொக்கு நுதல்சேரன்னை செழுமனை யகத்திற் சேர்ந்தே
கலையொக்கு மதியாமென்னக் கவின்பெற வளர்த்தபின்னர்
மலையொக்கும் புயங்கள் வாய்ந்த மைந்தனை மீட்டுமீந்தாள். ௧௦

கரைபொங்கும் நெடியசெய்ய கடல்புடை சூழுநாட
னுரைபொங்கு மகளுக்கன்னா னொருபெருங் குமரனானான்
திரைபொங்கும் புனலிற்கொண்ட செயலினால் மோசே பேரின்
வரைபொங்கு மருமத்தானுக் கெனவவள் வகுத்திட்டாளே. ௧௧

பீடுற்ற வனையமோசே பெரியவ னானபோதந்
நாடுற்று நலியாநின்ற தன்குலத் தவர்பா னண்ணி
வாடுற்று வருந்தியாங்கே மற்றவர் சுமக்கும் பாரம்
நீடுற்ற சுமைகள் மேற்கண் பரப்பின னெறிகடேற்றம். ௧௨

ஓங்குந்தன் குலத்தினோனா மோரெபிரேயன் றன்னை
ஆங்குற்ற வெகிப்துநாட னொருவனின் றடித்த னோக்கிப்
பாங்குற்றார் யாருமின்மை பார்த்தவன் றனைச்சேதித்து
வாங்கும்வெண் மணலால்மூடி மரபபிமானங் காத்தான். ௧௩

ஈடொன்று புயத்துவள்ள லெழுந்தனன் மற்றைநாளும்
நாடெங்கும் நோக்கிநோக்கி நடந்திடு ஞாங்கரிற்றன்
மாடங்க ளிரண்டுபேர்தன் மரபினோர் கோபவெந்தீச்
சூடுண்டு விவாதஞ்செய்தல் கண்டனன் றுடர்ந்து நண்ணி. ௧௪

நீடுந்தன் மரபினோரில் நீதிகேடியற்றி நின்ற
ஆடுந்திண் புயத்தினோனை யண்ணலங் குமரனோக்கிப்
பீடொன்றுந் துணைவனாகப் பிறங்கிய விவற்கிவ்வாறே
கேடின்று விளையும் வண்ண மடித்ததென் கிளத்துகென்றான். ௧௫

என்றந்த வள்ளல்கேட்ட வெல்லையி லவனும் யாவர்
இன்றுன்னை யிறைவனாவு மெங்களை நியாயந்தீர்க்க
நின்றுள்ள முதல்வனாவு நியமித்தா ரெகிப்தினோனைக் [௧௬
கொன்றிட்டபடியே யென்னைக் கொல்வதுன் கருத்தோவென்றான்.

சுளிப்பட்டங் கனையனோதுஞ் சொற்செவிப்படலுங் குற்றம்
வெளிப்பட்ட தெனவேயந்த விழுமியோ னச்சங் கொண்டான்
களிப்பட்ட மதமால் யானைக் காவல னதனை யோர்ந்து
துளிப்பட்ட வுதிரஞ் சிந்தக்கொலைசெய்யச் சூழ்ச்சிபார்த்தான். ௧௭

மோதுபோர் வேந்துக்கஞ்சி முகத்தினை விலகி மோசே
மீதியா னாட்டுக்கோடி விரவியோர் கிணற்றின் பாங்கர்

தீதிலா திருந்தநாலே செப்புமக் காட்டி னூற்ற
கோதிலா மன்றயோனின்ற குமரிக ளெழுவர் வந்தார். ௧௮

குழுதத்தை நிகர்க்கும்வாயார் குளிர்புனற் பத்தருடே
அமுதத்தை முகந்துதங்க ளாடுகட் கூட்டப்பெய்தார்
சமுகத்தி னின்றமேய்ப்பர் தடைபுரிந்தனைய நீரத்
தமதற்ற மங்கைக்கூட்டத் தாமவண்முயன்றூரன்றே. ௧௯

அப்போதங் கெழுந்து மோசே யவர்களைத் தடுத்துமற்றிம்
மைப்போது நிகருங்கண்ணார் மங்கைகள் பருகமாறே
ஒப்போதி லுதவிசெய்தா னொண்டொடி மகளிர்தம்மை
இப்போதும் புவியிலீன்ற இரேகுவேல் மருங்குசென்றார். ௨0

ஆணிப்பொன் னனையசெல்வி யரும்பெறும் புதல்விமாரைக்
காணுற்ற பொழுதவ்வீன்றோன் கண்மலர்ந்தினிது நோக்கிப்
பாணித்த வின்றியின்று மீண்டதென பகர்மினென்றான்
பூணுற்ற கடகக்கையார் போற்றுதம் பிதாவை நோக்கி. ௨௧

உரைபொங்கு மெகிப்துநாட னொருவனங் குற்றோ னெம்மை
வரைபொங்கும் புயத்து மேய்ப்பர் வன்மைக்கு விலக்கிக்காதலுத்
திரைபொங்கு முதகந்தன்னைச் செங்கையால் மொண்டுமொண்டெங்
தரைபொங்கு மந்தைக்கூட்டித் தயைமிகப் புரிந்தானென்றார். ௨௨

அங்கன்னார் தருசொற்கேட்டே யப்பெருந் தாதை நோக்கி
எங்கன்றோ னுளனன்னோனை யெப்படிவிட்டிங் குற்றீர்
இங்கெனக்கோ டுண்டபோன மருந்தவு மழைமினென்றான்
கொங்கன்ன மொழியார் போயக் குமரனைக் கொடுவந்தாரே. ௨௩

அழைத்திட்ட பொழுதம் மோசே யாங்குணுற்றவன்பால் வைகத்
தழைத்திட்ட வுளத்தனாகி சம்மதித்திருந்து ளானால்
விழைத்திட்ட விரேகு வேல்தன் மெல்லியற் சிபபோராளை
உழைத்திட்ட கருத்தினோடக் குருசிலுக் குதவினானே. ௨௪

விண்புக்க மதியுநாணும் விசித்திர வதன நங்கை
மண்புக்க புகழ்மோசேக்கு மணமகளாகி வாழ்ந்தே
எண்புக்க முறைமைசாலு மில்லற நடாத்துகாலில்
கண்புக்கங் குரியமைந்த னொருவனை நல்கினாளே. ௨௫

(வேறு) இன்னியற் சிறுவன்பாரி னிடையவ தரித்தபோதே
அன்னிய தேயந்தன்னி லாம்பரதேசியாகி
மன்னினே னெனவேகூறி வாய்த்தவம் மகற்குக் கேர்சோம்
பன்னிய நாமமென்று பகர்ந்துவந்திருந்தான் மாதோ. ௨௬

தன்னாறுங் கூபச்சாரிற் றங்குல முதல்வன் மேலோன்
நன்றுறுமின்ற போழ்தில் நலத்தக ழிலாபா னீன்ற
பெண்ணனல முடைபராற்ற பெற்றிபோ லிவருபுந்த
உண்ணுதற் கமுதமூட்ட உறவதை புவர்து கண்டான்.

ஆங்சதன் பின்புசென்றன னகன்றபின் னெபித்து நாட்டுப்
பூங்கழல் மன்னனிந்தப் பூவல கொருவினுறுவ
தாங்கருங் கொடியதான பணியினுற் றயித்திராடி
ஓங்குறு மிசிரவேல ருள்ளமைக் தோல்மிட்டார். ௨௭

மோசேயவதரித்தபடலம் முற்றும்.



## ௩. மோசே காட்சிபெற்ற படலம்.

தாங்கருங்கொடும் பணியினுற் றளர்வொடு வருந்தி
ஆங்க ணிசிர வேலிடு மப்பெருமோலம்
பாங்குநண்ணிடு மன்பரைப் பரிந்துகாத் தருள்செய்
ஓங்கு மற்புதன் றிருச்செவிக் குயர்ந்தது மனறே. ௧
இனையகாலையி லெம்பிரா ஞபிரகாமும்
தனயனுனவீ சாக்குமற் றன்னவன் றந்த
புனையுநல்லிசை மகவுமென் றிவரொடு புரிந்த
அனையபேருடன் படிக்கையை யருளினு னினைந்தான். ௨
உருக்க மோடுறு மன்பருக் குவந்தருள்மாரி
பெருக்கமெய்திடச் சுரந்துகாத் தருளுமெம் பெம்மான்
நெருக்கமுற்றிடா துயச்செய நினைந்துதண் ணளிசேர்
திருக்கணங் கடை யவரிடை சேர்த்தின னன்றே. ௩
மெத்துசீர்செறி மீதியா ஞட்டுவே தியனும்
எத்திரோவெனும் மாதுலன் மந்தையி னினத்தை
வைத்தகாப்பொடு மேய்த்தவன் வனத்தினின் கடையிற்
கொத்தினுேடுறக்கொண்டுமோசேகுறு குற்றான் ௪
எய்துபோதிலோ ரேப்பென வியம்புமப் பெரிய
தெய்வமால்வரை யதனிடை சேர்தன ஞங்கே
துய்யமேலவன் றூதுவன் துலங்கிடுஞ் சுவாலை
வெய்யவங்கியில் முட்செடி யொன்றிடை விரவி. ௫

நின்றுகாட்சிதர் தருளினுன் நேர்ந்தத னருகே
ஒன்றியப்பொழு துற்றதை நோக்கினன் மோசே
துன்றுமக்கினி யெரிந்தது சுவாலையா யெனினும்
அன்ற முட்செடி வெந்திடா தமர்ந்துள தம்மா*. ௬

* தன்றுமிசிர வேலெனுஞ் சனங்களுக்காகக்
கிளருநீணிதி யெகிப்தினமேற கெழுமுமெம் பரமன்
வளிருஞ்சின முதிர்தென மருவிய தம்பா
முளரி மாமுகை போன்றெழு முளரியுண் முளரி. ௧

மண்டுடன்புடை யிசிரவேல் மரபுய வெகிப்திற்
கண்டகர்க்கழி வெய்துறு மென்னுமக் கருடம்
விண்டிடற்கருங் காட்சியால் விளக்கலுற்றதுவும்
முண் டகத்திடை முளைத்தசெங் கேழ்கிளர் முளரி.

அன்னகாட்சியைக் கண்டது மனித்திருேர்புடையான்
துன்னியிவ்வதி சயத்தினைத் துலக்குறப்பார்ப்ப
லென்னவுன்னியவ் விருந்தனைக்குருசிலங் ககயில
மன்னவேகினன் கருஞ்செயல் வானவனகண்டான். ௭

கன்றுமவ்வழற் செடியிடைக் கடவுள்மோசேயே
என்றகூவின னப்பொழு திறைவனேயடியேன்
நின்றனேனிவ ணென்றன னிமலனிதலத்திற்
றுன்றுறேலைய லிங்கிது தூயதுமன்னே ௮

அடியினீயிடு கழலினை யகற்றிநின்றிஙக
படியிலிங்குனைப் பயந்தவன் றனக்கியான் பரமன்
நெடியவன்பனு மாபிரகாமுக்கு நிமலன்
வடிபெரும்புகழ் மன்னுமீ சாக்கினின்மலனே. ௯

இசைபடைத்துய ரிசிரவேற் கிறைவனே யென்றான்
வசையிலண்ணலவ் வானவன் றனையெதிர்நோக்கி
அசைவுறுங்கருத் துடலுளம் வெருவினனதனுல்
திசையுறும்புக ழவன்முக மறைத்தனன் செறிந்தான். ௧௦

இங்கவண்ணலை நோக்கியே யெம்பிரானெகிப்திற்
றங்கலுற்றவென் சனம்படு துயரநான்பார்த்தும்
அங்குவெம்பணித் தலைவருக் குடைந்தவரரற்றும்
பொங்கு மோலமென் செவியிடை பொருந்திடக் கேட்டும். ௧௧

அந்தவிசிர வேலரங் காற்றலராகி
நொந்துசோர்வுறீஇ நோன்மைகளகன்றிட நோனுர்
தந்தவெந் துயரான்மிகத் தளருமவ் விடர்கள்
மூந்தவோர்ந்துளே னுதலால் மொழிந்திடக கேண்மோ. ௧௨

(வேறு)மெத்துமிடர்கெடவவரை யெகிப்தினின்றுமீட்டேகிவிறற்காறுனர்
எத்தியரே மோரியர்தின் பெரிசியர்க ளிவியரே பூசர்வைகுங்
துத்தமொடு மின்னறுந்தேன் பெருகுமெழி றலங்குலக் தொகுகானுனும்
உத்தமமாந் தலத்தினிடை யுறுவிக்க வுளங்கொண்டிண்டுற்றனேனே. ௧௩

சாற்றிடக்கே ளிசிரவே லோலமென்றன் சந்நிதியிற் சார்ந்ததாமால்
ஏற்றமுட னெகிப்தியரங் கொடுத்ததலா லவருழக்கு மிடருங்கண்டேன்
போற்றுகவினெகிப்தினிடைபுகுந்தவரையழைத்தகன்றுபோகுமாறே
ஊற்றமுறும்படைப்பார்வோனுழையுனைத்தூதனுப்பவுளமுற்றேனென்
றான்.. ௧௪

எம்பெருமானிசைத்தமொழி தன்செவியிலெய்துதலு மெழில்சால்மோசே
அம்பொனணி மணிமகுடத் தடற்பார்வோ னகத்தணுகுமதற்கும்மிக்குப்

பம்புமிசிராவேலர் தமையெகிப்தினின்றழைத்துப் படருதற்கும்
இம்பருன தடியேன்யான் வலியுள்ளேனே இயம்புகவெந்தாயென்றான்.

என்றுமவ் வறைபோகவ யானுனக்கு டிருந்திடுவ லெகிப்துநாட்டின்
நன்றவரை யழைத்துவந்த பின்னையிந்த நின்கிரிமேல் நேர்தலுற்றுத்
துன்றுதெய்வ பூசனைநீர் தொடர்ந்துகுழீஇச் செய்திடுவீர் துலக்கமானே
இன்றுனின்னை யனுப்பலுற்றே னென்பதற்கிக் கடையாள மிதுவேயென்
றான். ௧௬

முன்னவனை நோக்கியெழில் மோசேயா னிங்கிஸ்ர வேலர்முன்போய்
மன்னுறுநுங் குலமுதலோர் வழிபடுதெய்வ மாயபிரான் மருவிநும்பாற்
றனனுகவென் றெனைவிடுத்தா னெனவவர்க்குச் சொலும்போதத் தூயோ
னாமம்
எனவெனைக் கேட்பரெனில் யானிசைக்கும் எதிர்மாற்றம் யாவதென
றான். ௧௭

எம்பெருமா னென்றுமிருப் பவனீ யெழுந்தேகி யிஸ்ரவேலர்
பம்புமுழிப் போய்த்தானு மிருப்பவனுய்த்தனனென்று பகருவாய்நீ.
வம்பவிழு மாபிரகா மீசாக்கு யாக்கோப்பாம் வருபேர்சான்றோர்
தமபெருமான் யேகோவா சார்வித்தானென்னையென்று சாற்றுவாயே. ௧௮

அறைதருமிங் கிதுதானே யனவரதமென்னாம மாகுங் கண்டாய்
பொறையினறிகுறியெனக்காய்த் தலைமுறைகடோறுமிதுபொலியுமன்றே
குறைவறநீ போயிஸ்ர வேல்மரபின் முதியோரைக் கூட்டிச் சேர்த்து
முறையுறவங் கன்னவர்க்கு மொழிதருமென் மாற்றமதை மொழியக்கே
ண்மோ. ௧௯

உங்கள்குலத் தந்தையர்க் கொருதேவன் ஆபிரகா மீசாக்கோடு
பொங்குபுகழ் யாக்கோப்பாம் புரிதவர்க்குப் புங்கவனும் புனித மூர்த்தி
எங்கடவுள் யேகோவா எனக்கினிய காட்சிதந்து கூட்டமும்மேற்
றங்கவைத்துந் தமக்கெகிப்திற் றகுவர்புரி தருமிடர்க டம்மைக்கண்டே
௨௦

அவ்விடர்நின் றுமைநீக்கி யடற்கானா னியர்முதலோ ரமர்ந்துவாழுந்
திவ்வியபாலொடுதேனும் பெருகுசெழு நலமாருந் தேயந்தன்னிற்
செவ்விதினீர் நல்வாழ்வு சிறந்திருக்கச் சேர்த்தியருள் செய்வேனென்றே
இவ்வகைசொற்றேனென்னவியம்புகநின் வாக்கையவரினிதாக்கேட்பார்

நீயெழுந்து நின்குலத்து முதியோர்க ளுடன்கூடி நெறிக்கொண்டாங்கே
போயெகிப்தர் பெருமான்பா லெபிரேயர் புங்கவனும் புகழ்யேகோவா
மேயெமக்குக் காட்சி தந்தான் யாமவற்கு மிக்கபலி விழைவினோடும்
நயவனந் தனில்மூன்று தினநடக்க எமக்கு விடை யீகவெனபீர். ௨௨

வில்லடர்திண் கரதலத்து விறற்பார்வோன் இவர்தமமுன் விளங்கவெ
ன்னை
வல்லபங்கண்டாலொழிய வழிபோதற் குமக்குவிடை வழங்கமாட்டான்
அல்லலுற வெகிப்துநக ரத்திலெனத் ததிசயமுங் காட்டித்தண்டம்
மல்லலுறப் புரிந்திடுவல் மற்றதன்பின் னுமக்குவிடை வழங்குமன்றே. ௨௩

சொற்றிடக்கே ளிஸ்ரவேற் புத்திரரித் தொன்றூடர் தொழிலன்பு
பெற்றிடயான் புரிந்தருள்வ லாக்கலரைப் பிரிந்தகன்று போம்போ தொன்றும்
அற்றவெறுங் கையொடக லாமலரி வையரயலார் பாற்றம்மில்லூ
டுற்றவர்பால் வெள்ளிசெயபொன் னுயர்பணிது சுதவுமென வுற்றுக் கேட்க. ௨௪

கேட்டபொழுதவ்வவைகள் கிடைத்திடுமோதீந்திடுவர் கிடைத்தபோதே
வாட்டமற வவ்வவர்தாம் வழங்கியவின மருவுமொழி மைந்தர்தாமுக
தோட்டுமலரரிமதர்க்கட் சுதைகளுமுன் மகிழ்ச்சிகணி துணனுமாறே
பூட்டவுபசரிடவுதவிக் கொள்ளையிவ்வாறெவிப்தினிடை புரிகவென்றான் ௨௫

(வேறு.) அப்பொழுது மோசே அவர்களெனை நம்பார்கள்
செப்பிடுமென்சொற்குச் செவிதரவேமாட்டார்கள்
ஒப்பரிய தேவனுனக்குத் தரிசனத்தில்
இப்புவியில்வந்த தில்லையென்பரேயெ னறுரைத்தான். ௨௬

அன்னபொழுதையனை யவனைப் பார்த்தருளி
உன்னலர்க்கை தன்னிலுறுகின்றதென்னையென் றான்
மன்னுதண்டமென்று வகுத்துரைத்தான மற்றதனை
இன்னிலத்தின் மீதே யிடுகவென் றானெம்பெருமான். ௨௭

கருத்தனுரைபோலக் கவினிடையோ னவ்வூற்றம்
திருத்தலத்திலங்கே சேரவிட்டான் சேர்ந்திடலுந்
சருப்பமதேயாகித் தருகவேலைசைந்ததம்மா
வெருக்கொடங்கு மோசே விலகியகன்றோடினனே. ௨௮

ஓடுமவன்றன்னை ஒப்பில்லான்பார்த்தருளி
நீடுமிதன் வாலை நீகையாற் பற்றெனவே
சேடுடையோனுங்கு செங்கையாற் பற்றிடக்கைக்
கோடதுவாய்மீண்டக் குரிசில்கரத் துற்றதுவே. ௨௯

உற்றதன்பின் மேலோனுரவோனைப் பார்த்தருளி
மற்றிதனுற்றங்கள் வழிமுன்னோர் தயபெருமான்
கற்றலததிற் காட்சி நயந்தளித்ததன்மையெனப்
பெற்றிவரெண்ணம் பெரிதென்று பேசினனே. ௩௰

பேசலுற்றபின்னும் பெரியோனைப்பார்த்தருளித்
தேசணிபூங்கையைத் திருமார்பிற் சேர்த்தெனவும்
மாசணுகானேத வைத்தெடுத்தபோதலறந்த
வீசுமழையேபோல் வெண்குட்டம்பெற்றதுவே. ௩௧

மீண்டுமதன்மார்பில் விரவுறநீ கையிடென
ஆண்டிறைவனோத அவன்வைத் தெடுத்தனனால்
காண்டகவங்கந்தக் கர்மறுகைபோலாகிப்
பூண்டவெழில்பெற்றுப் பொலிவுற்று மன்னியதே. ௩௨

உனையவர் நம்பா தோதுமுத லற்புதத்தில்
மனனுறுசுவாசம் வையாதேபோனாலும்
பன்னுகின்ற மற்றை யதிசயத்தைப் பார்த்திடக்காற்
பின்னையவருன்னைப் பெரிதுளத்திலெமதிப்பார். ௩௩

அங்கிவற்றைக்கண்டு மவர்களுனை நம்பாரேல்
வீயநதிரையாற்றின் விரிநீரைக் கையிலள்ளி
ஓர்நதிரைமேலாங் குலர்ந்ததரை மீதுகுப்பாய்
நீயசறுமரதெண்ணீரஞ்செந்நீராய் மாறுமென்றான். ௩௪

இன்னபடியெம்மா னிசைத்தாலுமம்மோசே
முன்னடியேனுன்முன் மொழிந்தபடியெங்கோவே
பன்னுகினறேன்மீணடும் பகர்வாக்குவல்லபமின்
றென்னிடத்தில் வாக்குமென்னாவும் மந்தமென்றான். ௩௫

ஆயவுரைகேட்டே யாங்கவனைப் பார்த்தருளித்
தூயபெருமானிதொல்புவியில் மாந்தருக்கு
வாயுதவினோனார் வாய்பேசா வூமரையுஞ்
சேயவொலிகேளாச் செவிடரையுந் தந்தியார். ௩௬

விழியுடையானோடு குருடனையும் மேதினியி
னுழியடைவித் தோனயா ருணர்ந்திடுகயானென்றே
வழிபடர்ந்து செலநீ மற்றுனது வாயில்நின்றே
மொழிதிரமாயோதும் முறையுணர்த்துவேன்யானே. ௩௭

இன்னவண்ணந்தேவ னியம்பலுற்றானென்றாலும்
அன்னவணணல்நெஞ்சி னகத்திலச்சந் தீராமற்
பன்னுபுகழ்மேலோய் படருவதற் கேற்றிடுவோன்
றன்னையவனனுப்பித தவிர்த்தருள்வா யென்னையென்று. ௩௮

ஓதினான்கேட்டே ஒப்பிலா வான்கருணைச்
சோதியானந்தச் சுடரப்போ ததசோன்றல்
மீதிலடர்கோபம் விரவவவன றனைநோக்கிக்
கோதிலுரை யவற்குக் கூறத்தொடங்கினனே. ௩௯

(வேறு.) ஆரோனெனு மத்தகு லேவியனுன்
வளருதர முற்ற பெருந்துணைவன்
வாருகிய வாசக மோதவலான்
ஆறாடெதிர் கோட்குனை யண்ணுகிறான். ௪0

நண்ணுற்றிடு நன்னெறி தன்னிலுனைக்
கண்ணுற்றிடி னெஞ்சு களித்திடுவான்
எண்ணுற்றசொ லீயவன் வாயிடையான்
பண்ணுற்றிடு மாறு பகர்ந்திடுவேன். ௪௧

உனசொற்சன முன்னவ னோதிடுவான்
மன்னுற்றநின் வாயது முற்றவனே

ஒப்பிலண்ணலாரோனையுற்றநீ உம்பிதன்னையோ ரேப்பெறுவறாம்
அப்பெருந்திரு வெற்பிலெய்துதற் கடைகுவாயென வன்னுமேகியே
செப்புமவ்விடைசென்றுகண்டுமுன் சேர்ந்துமுத்தமுஞ் செய்யலுற்றனன்
தப்பிலானிறை காட்சியாதியாஞ் சகலசெய்தியுந் தானியம்பினன். ௫௪

இயம்பியானபின் பிருவரும்படர்ந் தெகிப்துநாட்டினுயிசிரவேலரில்
வயங்குமூப்பினோர் எவரையும்புடை வம்மினென்றழைத் தன்றுதம்மிடை
பயன்றராற்றிறை தந்தவாக்குகள் பகரலுற்றபின் பலவுமற்புதம்
வியந்திடப்புரிந்தார்கள் கண்டவர் மிக்கநல்விசுவாசமேவினார். ௫௫

இடரில் வைகிய விசிரவேலரிவ் விருவர்சொல்லுமற் புதமுமோர்ந்துதம்
படரொழிதரிடற் கிறைகடைக்கணுற் பார்த்துளான்படும் பாடியாவையும்
கடவுணோக்கினன் கண்களாலெனக் களரும் வாசகங் காதினெய்தலும்
புடவிசேர்தலை தாழ்த்தளப்பரும் புங்கவன்றனைப் புகழ்ந்துபோற்றினார்.

மோசே காட்சிபெற்றபடலம் முற்றும்.



## ௪. மோசே தூதுசென்ற படலம்.

வரைபொரும்புயத்துமோசே மற்றது நிகழ்ந்தபின்னர்
உரைபெறுமாரோனென்னுங் குற்றதன்றுணைவனோடும்
புரையறு சருவஞானப் புங்கவனுரைத்தவாறே
கரைபொருகடலந்தானைக் காவலன் சமுகஞ் சார்ந்தான்.

சார்ந்தவன்றன்னைநோக்கித் தடவரை நெடியகானில்
நேர்ந்தெனக்குரியதான பூசனைநெறியினுற்ற
ஆர்ந்தவென்சனத்தையினனே யனுப்புகவென்றுனக்குக்
கூர்ந்தசீர் கிளர் யெகோவா கூறினன்விடுகவென்றான்.

என்றலுமெகிப்துநாட னிசிரவேல் மரபினோரைச்
சென்றிடவிடற்குநீவிர் தெரித்திடுயெகோவாவார்
துன்றிசைமுதல்வன்யாவன் றுணிவுறவறிந்திலேனால்
இன்றிசைத்திடுஞ்சொற்போல் யான்விடவில்லையென்றான்.

இவ்வுரையனையன்கூற விருவருமெகிப்துவேந்தே
செவ்வுரைகெழுநந்தேவன் றெரிசனைநமக்குத் தந்தான்
வெவ்வரைமலிகானின்கண் விரைந்துமுத்தினத்திலேகி
அவ்விடைபலிகணல்க விடையெமக்கருளுவாயே.

இத்தனைய புரிகவென்றே யிரந்தனமுன்னைவேந்தே
அத்தலைமறுவோமென்னில் அடர்பெருங்கொள்ளைநோயும்
வைத்திடுவாளுமுந்த வானவன்சினத்தொண்டெங்கள்
கொத்திடைவிடுவனென்றே தெரிதரக்கூறினாரே.

பின்னுமவ்வுரையைக்கேட்டுப் பார்த்திபன் மோசேயாரோ
டன்னுமன்னவரைநோக்கி யிச்சனம்புரியும்வேலை
தன்னை யின்றியற்றுவணைந் தடைபுரிகின்றீர் நீரும்
துன்னியங்கவர்களோடு சுமைகளை யெடுமினென்றான். ௬

என்றனன் பணிசெய்விப்போர் யாரையும் விழித்துநோக்கி
இன்றுதொட்டிசிரவேல ரிட்டிகை யியற்றற்காகத்
துன்றுவை யுதவீரன்னார் தத்தம்தொழிலையாற்றச்
சென்றுகொண்டியற்றுமாறு தேடிடக்கடவர்மாதோ. ௭

முன்னமங்கவர்கள்செய்து முடித்தவல்லளவேயாக
இன்னமுமியற்றல்வேண்டும் இதிற்குறைசிறிதுமொட்டீர்
துன்னுமாலசியமிக்காரர்தலாற் றுடாந்துகானிற்
பன்னுதந்தேவனுக்குப் பலியிடவேண்டுமென்றார் ௮

ஆங்கவர் தமக்கு வேலை யதிகமே சுமத்தல்வேண்டும்
தீங்குறவவர்களவ்வப் பணிகளைச் செயலும்வேண்டும்
வீணுதிரைபுயததீர் அன்னார் விளம்பிடும் பயனில்மாற்றம்
பாங்குறச் செவியிற்கொள்ளா திருமெனப்பணித்திட்டானே. ௯

மன்னவன்பணித்தவாறே வன்பணித்தலைவர்நண்ணிப்
பன்னினரவருமெவ்வெப் பழனங்கடோறுங்கொய்தே
துன்னரித்தாள்களுடி வையினைத்தொகுத்தற்காக
அன்னாடெங்குமெவ்வே றாத்திரிவுற்றாரம்மா. ௧௦

இப்படி யியற்றுநாளி விடும்பணித் தலைவர் துன்னித்
தப்பற விதித்தவாறே தரும்பணிமுடித்தல் வேண்டும்
எப்படி நேற்றுமின்றும் இயற்றுகை குறைந்ததென்றே
செப்பியன்னவர்கள் மெய்யிற் சினந்தடித்தனர்க ளன்றே. ௧௧

அடிபடத் தளர்ச்சிகூர்ந்தே யாற்றலா திசிரவேலர்
குடிகளிற் றலைவர்யாருங் கூடியொன்றாகச் சென்று
வடிசுடர் வைவாள் வேந்தில் வாயிலின மருங்கு நண்ணி
நெடியவெந் துயரினோடும் நின்றுமிக் கோலமிட்டார். ௧௨

ஓலமிட்டலறி வேந்தே யுன்னடி யேங்களுக்குச்
சாலவிவ்வாறு செய்த றருமமோ வைகல் காமல்
ஏலவிட்டிகையை முன்போ லீமினென்கின்றார் தங்கள்
மேலதாய்க் குற்றம்நிற்க அடித்திடும் விதமென்னென்றார். ௧௩

அறைந்தசொற் கேட்டுவேந்த னவரையா லசியமிக்கு
நிறைந்துளீ ரதனாலன்றோ நீர்பலி யினைநுந்தேவ
னுறைத்துழி யேகியீநற் குத்தரவுதவக் கேட்டீர் [௧௪
குறைந்திடா தெவ்வாறேனுங் கொடுத்திடல் வேண்டுமென்றான்.

வஞ்சவான் வேந்தனிந்த வாசக முரைத்தபோதே
அஞ்சுறு மிடுக்கண்டம்மே லாகிய தென்னவன்னோர்

கெஞ்சினி லுணர்ந்து மற்றக் கிருபதி சமுகத்தங்ஙனே
விஞ்சிய துயரினோடும் விட்டகன் றேகினரே. ௧௫

விதிர்ப்பொடு மீள்மார்க்கத்தில் மேயமோ சேயோ டாரோன்
எதிர்ப்படக் கண்டுநீவி ரிறைபகன் விழிகள் முன்னும்
விதிப்புறும் பணிசெய்மாக்கள் விழியிணைகளுக்கு முன்னும்
மதிப்புறநின்ற எங்கள் வாசனை கெடுக்கலுற்றீர். ௧௬

எங்களை வதைத்தல்செய்யு மேதியை யவர்கள் கையில்
அங்குநீர் கொடுத்தவாற்றால் அளவறு மகிமை மேலோன்
உங்களை நோக்கி நீவிருளுற்றுமிக் கொடுமைக்காகத்
தங்கிய நியாயந்தீர்க்க வென்றெதிர் சாற்றினரே. ௧௭

மாற்றமங் கதனால் மோசே மனத்தளர்வடைந்து தேவைப்
போற்றினன் றொழுது நின்று பொருவிலோ யிவர்பாற்றுன்ப
மேற்றுவித்திட்டவாறென் னெனையிவர் பாற்போவென்று
சாற்றியுய்த் திட்டதன்மை யென்னெனச் சாற்றுவாயே. ௧௮

நாணலந்துறைவன் முன்னுன் னாமமே கொண்டுநண்ணி
எணல மொழியான்புக்க வதுமுத லிவர்கடம்மை
வாணலமுடையான் சால வருத்தினன் விடுவிப்பின்றோர்
கோணலவ குளத்தைநீங்கக் கொடுத்திலை யெந்தாவென்றான். ௧௯

கூறிய மாற்றங்கேட்டுக் குரிசிலை நோக்கித் தேவன்
ஊறிய தயையில் வேர்தற் குளுற்றுமென் செய்கையெல்லாம்
தேறிட விரைவிற்காண்பாய் திறல்கெழு மென்கை வன்மை
மீறிடுமதனாற்போக வவர்களை விடுவன் மன்னோ. ௨௦

துரத்தியே விடுவன் கண்டாய் சொல்லுவலின்னுங் கேணீ
உரத்தினோ யானேயாது மொப்பிலா யேகோவாவாம்
வரத்தினா பிரகாமாதி மரபினின் முதல்வர் தம்பேர்த்
திரத்தினாலன்றி யென்பேர் செப்பியான் றேன்றிலேனே. ௨௧

அந்நியராகிமேனா ள்வர்வதிந் திருந்த நாட்டை
மன்னிய காணியாக வழங்குவ லென்றன்னோர்க்குப்
பன்னினே னிவரெகிப்தார் பணுமிடர் பொருதசாற்றத்
துன்னிய வோதைகேட்டச் சொல்லினை நினைக்கலுற்றேன். ௨௨

ஆதலா லிசிரவேல ராமவர் தமக்கு நீபோ
யோதலா முரைகேள் யானே ஒப்பிலா யேகோவாவாம்
சூதினா லெகிப்தரும்மேற் சுமத்திடுஞ் சுமைக்குநீங்கிப்
போதலாம் படியேயும்மைப் புரந்தருள் புரியுமாறே. ௨௩

ஓங்கிய கரத்தினாலு முரத்ததண் டனையினாலும்
ஆங்குமை மீட்டெனக்கே யாஞ்சன மாக்குவேன்யான்
ஈங்குநுந் தேவாம்யேகோ வாவியான்எகிப்தார் நும்மேற்
றீங்குறச் சுமத்தும் பாரந் தீர்க்குநும் பரன்யான் றேர்வீர். ௨௪

மிக்கவா பிரசாமாதி விளம்புதுங் குலமுன்னோர்க்குப்
புகுதத் தருவலென்று புகன்றியா னவர்க்கு நீத
அக்கலி னூட்டுக்கும்மை அழைத்தனைத்த காணியாகத்
தக்கவா றருள்வலென்று சாற்றுக வவருக்கென்றான். ௨௫

தேவினம் மொழிகளெல்லாஞ் செவ்வியான புகன்றான்கேட்டும்
ஆவியின் குறைவினாலும் அதிகமாங் கொடியபார
மேவிய பணிகளாலும் மெலிந்ததா லிசிரவேலர்
நாவிலா னுரைத்த சொற்குத் தஞ்செவி சாய்த்திலாரே. ௨௬

தக்கவெம் பரமன்மோசே தன்னைநீ பார்வோன் பாற்போய்
மிக்கவென் சனத்தைப்போக விடச்சொலென் றுரைத்தானன்னோன்
இச்சுவல் சனமென் சொற்கேட் டிலர்பசர் சமர்த்திலென்சொல்
அக்கதிர் முடிப்போர்வேந்தன் கேட்பனோ வையவென்றான். ௨௭

சனங்களை விடுதற்காகத் தற்பரன் மோசேயாரோ
னெனும்பெய ரவர்கடம்மோ டிசைத்தனுப்பியது மன்றி
மனுந்திர ளிசிரவேலின் மரபினிலுள்ளோர் யார்க்கும்
மினுங்கதிர் முடிவேந்தர்க்கும் வேறுசற்பனையு முய்த்தான். ௨௮

(வேறு.) ஈடுபெறு மெகிப்திறைவன் பாலாங்கேலி னிருஞ்சனத்தின் மரபு
சிறி தியம்பலுற்றும்
சேடுபெறு மிசிரவேல் மக்கடம்முட் சேட்டமைந்த னுருபனியன் செ
கத்திலீன்ற
நீடுவிற்ற புதல்வர்க ளனோகுபல்லூ ரெசுழ்த்துமெத்சு ரோன்கார்மி சிமியோ
ன்சேய்கள்
சூடுபுகழ் யெமுவேல் யாமினோகாத் சொல்யாகின் சோகாருஞ் சவுலுமா
மே. ௨௯

சீராருமுற்பத்திக் கிரமம்போலச் செனித்துநின்ற இலேவிமைந்தர் கேர்
சோன் கோகாத்
மேராரியென்பவரா மிவரையீன்றோன் மிருமாயு ளூற்றுமுப்பத்தேழில்
வீந்தான்
லராருங் குலம்விளங்கக் கேர்சோனீன்ற இனியமக்கள் லிபினியுடன் சி
மே யீயாம்
பேரார்கோ காத்தின்றோ ரமிராமித்சார் பீபிறமெப் பிரோனூசி யேலுமா
மே. ௩௦

தந்தையின்வாழ் நாளளவு கோகாத்தெய்திச் சகவாழ்வு தனக்கனன் மேரா
ரியீன்ற
மைந்தரெழில் மகேலிமூசி யென்போராகும் வயங்குமமி ராந்தன்னை வழ
ங்கினோனோ
டிக்கநிலங் தனிலுதித்த யோகேபெத்தா மேர்நிழையை வேட்டாரோன்
மோசேயென்னும்
அந்தவிருபாலகரை யருளிவைய மதினூற்றுமுப்பத் தேழாண்டாங் குற்
றான். ௩௧

*சிகழ்தியலித் சாரீன்ற கேயர்கோராக் கேப்பேக்கு சித்திரியென - நின்றனோராம்*
*மிகுத்தபுகழுசிலே லுதவுமைந்தர் மீசாயே லெலிச்சாபான் சித்திரியாமால்*
*இகத்தமின தாயீன்ற தனயைசான்ற எழினகசோ னிருந்துணை லி யெலிசேபாளைப்*
*புகழ்த்திரஞ்சே ராரோனென் றுரைக்குமண்ணல் புவிவாழ்வு சிறக்கமணம் புரிந்துவாழ்ந்தான்.* ௯௨

*நலந்திகழு மனைவாழ்வு கண்ணுநாவில் காதாபுமபியூவு மெலியேசாருங்*
*குலந்திகழ மைந்தர்களாய்ச் சகத்தங்குற்றார் கோராகின் புதல்வரச்சீ ரெல்க்கானேகற்*
*பலந்திகழு மபியாசாப் பென்போராகும் பன்னிய வாரோனளித்த வேலியேசார்*
*வலந்திகழும் பூத்தியேல் சுதையைவேட்டு மானிலத்திற் பினிகாசைவழங்கினனே.* ௯௩

*தணிவுறுசீ ரிலேவியின்மாமரபினுள்ளோர் தங்கள்குலத் தலைவரிவர்தாமேயசவார்*
*அணிபெறுமவ் வெகிப்தினின்றின் றிசிரவேல ரானோரை வழிநடத்து மெனவேயாரும்*
*பணிவுறுமிக் குபர்மகிமைப் பரமனங்கே பணித்தருளு முதன்மையினைப்படைத்துளோர்கள்*
*திணிபுயவா ரோன்மோசே யெனவேயிந்தச் செழுங்குலத்துட் டெரித்தவந்தச் செவ்வியோரே.* ௯௪

*(வேறு.) எம்பெருமான் மோசேயை யின்னருளாற் பார்த்தெகிப்தார்*
*தம்பெருமான் றன்னுழைநீ சார்ந்தெனது வார்த்தைசொல்வாய்*
*வம்பகலவென் றலும்யான் வாய்ச்சமர்த்தி லேனென்சொல்*
*அம்புவிவேந் தெவ்வகையா வங்கீகரிப்ப னென்றே.* ௯௫

*சொல்லுதலும் மோசேயே தொல்லெகிப்து நாயகற்கு*
*வல்லதெய்வமாக வகுத்தேனுனை யும்முன்*
*மல்லலுறு மாரோன் வருந்தீர்க்க தரிசியென*
*நல்லவென்சொல் யாவும் நவின்றிடுதல் வேண்டுமென்றே.* ௯௬

*ஈசிரவேற் புத்திரர்களைகவிடை நல்குகவென்*
*றூசறுசீ ராரோனவற்கறைதல் வேண்டுமியான்*
*தேசுறுவை வாட்கைத் திறல்வேந்துளக் கடினம்*
*மூசுறவே கொள்ளும் முறையே புரிந்திடுவேன்.* ௯௭

*அன்றியுமிக் காட்டென் னடையாள மற்புதங்கள்*
*துன்றிவிளங்கத் தொடர்ந்து செய்வ லவ்வேந்தன்*
*நன்றியுற நீவிர் நவிற்றுமந்த நல்லுரைக்குத்*
*தன்றுணைக்கா தியத் தனதுளத்தி லெண்ணமுறான்.* ௯௮

*யானெகிப்தின் மீதென் னிருங்கரத்தை யோங்கிமிக*
*லானதண்ட மீந்தென் னடர்சேனை யாஞ்சனத்தை*

தன்னையுங்கொடு கடந்துநீர்செறி தடங்களெவ்வெவை தமக்குமேல்
உன்னடற்கையினை யோங்குசெம்புனல தாவவாலுதகமெவையுமே. சஅ

அவ்வெகிப்திடை மாத்திருற்சமைத லானபத்தர்தொறு மடர்கலின்
செவ்வியவள்ளமவை சோருமோரரிய செய்யசோரியது வேயுறும்
வெவ்வடற்படைகொள்வேந்தகோர்திடயனவின்னைநீயெனவிளம்பினுன்
இவ்வுரைப்படி யெழுந்துசென்றவ ரியற்றசீருதிரமாயதே. சகூ

சலசரங்கள்மடி தன்மையால்நறிய சலமனைத்துமிகு புன்மணம்
உலவியுண்ணவுதவாமலுற்றதக லுள்ளமாயைசெறி விஞ்ஞையோர்
பலகலாதிபரு மங்ஙனப்படி பயின்றசாலமுறை யிற்செய்தார்
இலகுவெம்படை யடற்கரர்தாச னிருதயங்கடின்மானதே. ருo

நெஞ்சகங்கடினமானதாலிவர் கிசழ்த்துசொற்செவியிலேற்றிலான்
வஞ்சவாணிருபனன்றெழுந்து தனிவாழ்மனைக்குமுக நோக்கினுன்
விஞ்சுதாசமற வத்தலத்தவர்கள் வேறுவேறுதுரவாக்கினுர்
இஞ்சிசூழெழி லெகிப்த்திலேழ்பக லிறந்தவிங்கிவையியன்றபின். ருக

மேலவன்றனது சொற்கொள்வள்ளலை விழித்தெகிப்துநகர் காவலன்
பாலடைந்தெனது சனமெனக்குவழி பாடியற்றவிடு பன்னுசொற்
போலவிட்டிடுதெ லொழியிலுன்னகர் பொருந்துமெல்லைகளனைத்திலும்
சாலமிக்கனுகு தவளையேவிநனி தண்டமேபெரிது தருகுவேன். ருஉ

வண்டுகண்படு தடந்துறைக்கணலை மல்குமாநதி வழங்கவே
மண்டுகங்களளவின்றிவந்துனது மனையினுஞ் சயனவறையினும்
எண்டகுந்தகைய மஞ்சமாமவை யிடத்துமேவல்புரிதொண்டினேர்
அண்டுமில்களினு மடருமின்சன மமர்ந்தசாரினுமடுப்பினும். ருங

பிண்டிகொண்டுபிசை வள்ளமேலுநனி பேரிடம்பெறுதலரியவாய்
மண்டியேறிடுவவாருமன்னவைகள் மன்னநின்னுடலில் மற்றனை
யண்டிநின்றசன மீதிலும்பணிசெ யனைவர்மேலுமிவர் தருவவே
கண்டிடென்னவெனதுரையைப்பொழுதகனுவாய்கடுகியவன்முனே

நின்னருந்துணைவனக்கரத்தினை நெடியதண்டமதை நீட்டியே
பன்னலர்த்தட மனைத்தின்மீதுமலை பாயுமாநதியின் மேலுமீன்
துன்னிடுங்குள மனைத்தின்மீதுமெதிர் தொடரவோங்கிவள நாடெலாம்
உன்னருந்தொகைகொ ணேகமல்கிட வுஞற்றவேசொலெனவோதினுன்.

உவமையற்றபர னுரையையிவ்விளவ லுரைசெயத்தகைகொள் முன்னவன்
தவலருந்திரு வெகிப்தினீரிலே தமக்குமேனடிய தண்டினை
நவலுமன்னபணி வழுவுறாதரச னோக்கிநிற்கவெதி ரோங்கினுன்
தவளையின்குல மெழுந்துவந்தநகர் தன்னையெங்கணு மறைத்தவே. ருசு

சான்றமாயையுணர் வோருமாய்ந்தமசாலவித்தையி னெகிப்தினுஞ்
ஞான்றுகர்வர விதங்களேறிமிசை நண்ணிடப்புரிதலுற்றனர்
ஊன்றுவேனிருப னேற்றுரைக்கவிறை யுய்த்தவீரரையழைத்துநீர்
கான்றதேரையை விலக்குமாறுமது கடவுளைப்பரவமென்றனன். ருஎ

பூசனையென்பா லண்ணிப் புரியவென் சனத்தையுய்ப்பாய்
நேசமோ டனுப்பிலாயேல் நின்னினின்றெழும்பர் மேற்சூழ்
வாசமார் சனங்கள்மேனின் மனைகளில் மருவிமல்க
மூசினியினங்கடம்மை முந்துற வனுப்புவேனால். ௬௮

மண்டெழிலெகிப்துநாடர் வாழ்மனைநாளுமுற்றும்
வண்டுகளொருக்கமுற்று வைகுவயானேயிந்த
தெண்டிரைவளாகந்தன்னிற் றேறவெனீகாணற்கா
விண்டவென்சனம் வாழ்சாரில் விசேடமொன்றியற்றுவேனே. ௬௯

விரவுவெம்படையாயாள்செய் விசேடமக்கோசேனாட்டிற்
சரகமெய்திடாது காத்தென் சனங்களின்றிரட்கு முனையாற்
பரவுமச்சனங்களுக்கும் வேற்றுமைபண்ணுவேனால்
அரசவிக்கருமம் காலையாமென வறைகவென்றான். ௭௰

அவனஃதறைந்தான் மேலோனப்படியியற்றினான்சொற்
றவலறத்தும்பியீட்டஞ் சால்வளநாட்டிற்புக்கு
துவலருங்கேடுண்டாக்க நோன்புயவரசனுள்ளக்
கவலொடவ்வொற்றர்தம்மை விளித்தனன்கடிதுநோக்கி. ௭௧

நீங்களுற்பலியையுங்கணிருமலன்றனக்கிந்நாட்டே
பாங்குறச்செய்திரென்று பணித்தனன்மோசேவேந்தே
யாங்களெம்பெருமானுக்கா விடும்பலியெகிப்துநாடர்க்
காங்குளவெறுப்பைநல்கு மாமெனவறிதியன்றே. ௭௨

அவ்வகையாகநல்கும் பலிகளையவர்கள்கண்டால்
செவ்வகையாயெம்மேற்கல் லெறிகுவர் தேவன்சொற்போல்
வெவ்வனமதனில்மூன்று தினங்களில் விரவியாங்கே
செவ்வியமுறையேநல்குவோமெனச் செப்பலுற்றான். ௭௩

கானவனருள்சேர் மோசே வழங்கிய மாற்றங்கேட்டுக்
கோனவன்றன்னைநோக்கிக் குறுகிநீர்வனத்தினூடே
யானவப்பலிகணல்க வனுப்புவல[illegible]லப்போகீர்
கானவண்டினத்தைநீக்கக் கடவுளைப்பரவுமென்றான். ௭௪

நாளையவ்வாறுசெய்வேன் நாதநீவஞ்சஞ்செய்யுங்
கோளையுட்கொள்ளேலென்றக் கோமகன்சமூகநீங்கிக்
காளையங்கிறையைவேண்டக் கழிந்தனசுரும்பர்யாவும்
ஆளையுமடுமால்யானை யவனுளக்கடினமானான். ௭௫

பரம்பரன் மோசேதன்னைப் பார்த்துநீ பார்வேந்தன்பாற்போய்
நிரம்புமென்சனமெற்போற்ற நீவிடாயேனீடென்
கரம்பரியினம்வாவேபங் கனைசதமர்த்தையானும்
வரம்பெறுமிருகசாதி வர்க்கமேல்மன்னுங்கண்டாய். ௭௬

நின்பெருநாட்டினுங்கே நிறையுமவ்விலங்குகட்குத்
தொன்பெறு கொடியநோயுண்டாகுமக் கோசேனாட்

என்பெருஞ்சனங்களுக்கு மெகிப்தியர் தமக்கும்பேதம்
முனபுறவரதொன்றும் முடிக்கிடாவண்ணங்காப்பேன். ௭௭

இன்றுபோய் காலையேகா னெகிப்தினிக்கருமஞ்செய்வேன்
என்றமவ்வியற்றுங்காலங் குறித்துளேனெனவுமின்னே
சென்றநீயானிப்போது தெரித்துளேனெனவுந் தெவ்வை
வென்றறும்படைக்கையாற்ற லின்னொனவினம்பினனே. ௭௮

வகுத்தவப்படியே தேவன் மறுதினத்தியற்றலுற்றான்
எகிப்தியர் மிருகவர்க்கம் யாவுமன்றொழிந்தவம்மா
மிகுத்திடுமிசிரவேலின் விபன்குலத்தவரவாகத்
தொகுத்தவவ்விலங்கினொன்றுந் துறந்திலதுவிரைமன்றோ. ௭௯

ஆயவப்புதுமை நோக்க அடுதிறற் படைக்கை வேந்தன்
வேயரையனுப்பிக்கோசேன் விபன்கரகத்துமல்கி
மேயவவ்விசிரவேலர் விலங்கழியாமைகண்டான்
தீயனெஞ்சுரமதாகச் செயப்படலுற்றதன்றே. ௮௦

விட்டிலன்சனத்தையேக வேந்தனைக்கண்டபோதே
மட்டிலெம்பெருமானுற்றார் மாமுகநோக்கிச்சுள்ளை
சுட்டிடுமடலைதன்னைத் துணைக்கரநிறையவாரி
வட்டவொண்குடைக்கைவேந்தன் வைகுமச்சமுகஞ்சேர்மின். ௮௧

மருவியபோதுமோசே வைத்திடுமடலைதன்னை
யிருவிசும்பினுக்கு நேரே யிறைக்கவிவ்வாறுசெய்தாற்
றிருவிளங்கெகிப்தினெங்குஞ் செறிதருந்துளியாகி
வெருவுறவவண்வாழ்மாந்தர் விலங்கினத்தொகுதிமெய்யில். ௮௨

வீக்கமுமெரிவுமிக்க கொப்புளம்விளைக்குமென்றான்
ஊக்கமோடெழுந்துமோசே யொப்பிலானுரைபோற்செய்தான்
தாக்கமாம்வருத்தமீந்து சார்ந்தகொப்புளமவ்வாறே
மாக்களும் விலங்கும்நொந்து வருந்திடமலிர்தவம்மா. ௮௩

மல்குகொப்புளங்கள் மாயை வல்லவர் தங்கள்மேலும்
பல்வளமிகுமக்காட்டின் பால்நாரனைவர்மேலுஞ்
சொல்லரு மெரிவுநல்கித் தோன்றலும் பற்பல் மாயம்
வல்லவர் மோசேமுன்னர் நின்றிடும் வலிபற்றாரே. ௮௪

தனக்கிணையற்ற மேலாந் தற்பரனெசிப்து வேந்தன்
மனத்தினைக் கடினமாக மன்னுவித் தனனம் மேலோன்
வனப்புறு மோசேக்கன்று வகுத்த சொற்படியே யந்தச்
சனத்தினை விடுநீயென்று சாற்றிடக் கேட்டிலானே. ௮௫

தூதுசெல்பவனை யையன் துயிலெழுந்தெழுந்தவைகற்
போதுநீ பார்வோன் முன்னர் போந்தநீன் வளத்தெவக்கா
ராதனை புரியும்வண்ண மனுப்புக சனத்தையென்பாய்
காதினை யதற்கியோர்தக் காவலன் மறுக்குமென்றால். ௮௬

மன்னனின் மேலுமற்றுன் பணிவிடை மாக்கள்மேலும்
நின்னது சனங்கள்மேலும் சேருமெவ் வாதைதானுந்
துன்னிட விடுவலன்ன தொழிலினா லிப்பார்மீதில்
என்னெதிர் நிற்கவல்லா ரிலரென வுணர்வை யென்பாய். ௮௭

நானில மேனியின்றி நாசமாய்ப் போகுமாறே
யானென தங்கையோங்கி யீண்டுநின் சனத்தோடுன்னை
ஈனமிக் குறநோய்செய்யு மிடர்புரி கொள்ளைநோயால்
வனவேற் படைக்கையோனே யுற்றுவாதிப்ப லன்றே. ௮௮

மன்னநின் றனக்கு மற்றென் வல்லபங்காட்டு மாறும்
என்னது நாமம்பூமி யெங்கணும் விளக்குமாறும்
நின்னையா னிறுத்தலுற்றேன் நீயெனதடியராகத்
துனனுமென் சனங்கடம்மைத் துயருற விரோதங்காட்டி. ௮௯

மீட்டுமென் னுரைபோலேக விடாமலுன் னகங்காரத்தைக்
காட்டுதல் புரிகின்றாயிக் கவினுய ரெகிப்து தோன்றும்
நாட்டொடுத லில்லாததீமை கண்ணுகன்மழையை நாளை
வாட்டுற விந்நேரத்தில் வரும்படி புரிவிப்பேனே. ௯௦

வீட்டினிற் சேர்த்துறாமல் வெளியுறு மனிதாயாரும்
நாட்டுறு மிருகம்யாவும் கண்ணுகன்மழையாற றேகக்
கூட்டுறு முயிர்வீவுண்மை கூறியவிதனால நீநின
ஆட்டினமுதல சேர்க்க அனுப்புக ஆளிப்போதே. ௯௧

என்றெபிரேயர் தேவனியம்பின னென்பதாக
வென்றிவெஞ் சிலைக்கையாற்கு விளம்பென விளம்பலுற்றான்
அன்றவேர் தடியர்தம்முள் அமலனுக கஞ்சினோர்கள்
சென்றுதம் மடியர்தமமை விலங்கினை யகத்துட் சேர்த்தார். ௯௨

தேவனன் றுரைத்தமாற்றஞ் சிந்தையால் மதித்திலாதோர்
யாவருந் தமக்காஙகேவ லியற்றுகின் றவர்களாய
சேவகர் தமையுமுற்ற திரள்விலங்கினையுஞ் சேர
மேவுற வெளியிலன்று விட்டுவிட்டனர்களன்றே. ௯௩

மானவர் விலங்குவர்க்கம் வளர்பயிர்த் தொகுதியென்ன
ஆனவெவ் வெவற்றின்மேலு மடர்ந்த கன்மழையே வீழ
வானம தெதிராய் நின்று வன்கரமுயர்த்துகென்று
ஞானவெம் பரமன் மோசே நன்முகநோக்கிச் சொன்னான். ௯௪

முடியுடை நிருபன்காண முன்னுற மருவியன்னோன்
நெடியதன் கைக்கோல்வான நேருறவேந்தி நின்றான்
இடிமுழக் குடனங்கெங்கு மிழிதரக் கல்லின்மாரி
படியினி லுய்த்தானன்று பரஞ்சுடர் முதல்வன் மன்னோ. ௯௫

வெங்கனல் புவியின்மீது வேகமாய்ப் பரந்ததெங்கும்
அங்கழல் கலந்தகல்லின் வருடமிக் கதிககோரம்

பொங்கிட வீழ்ந்ததம்மா புகுந்தவிக் கொடுமைபோலச்
செகதலங் கட்டோர்போதுந் தெறிந்தில திதன்முன்னமைமை. ௯௬

பொழிந்தகல் மாரிதன்றுற் புக்கில்புக் கொதுங்குஞ் செய்யுமை
யொழிந்துமை தானந்தன்னி லுற்றன வுயிர்களெல்லாம்
அழிந்தன விருக்கசால மாமெலா முறிந்தவம்மா
இழிந்தகன் மழையின் வெம்மை யியம்பல மளவிற்றேமோ. ௯௭

அங்கட லிசிரவேல ரமர்ந்தவக் கோசேனாட்டிற்
பொங்கடற் றொழிற்கன்மாரி பொழிந்தில திறைபோன்பால்
வெங்கடக் களிற்றினேன்மை மெலிந்தட லொற்றர் தம்மைச்
செங்கடற் சேர்ப்பன்கோக் கிவினையன செப்பலுற்றான். ௯௮

புரிந்துளேன் பாவமின்னே புங்கவன் நீதியுள்ளான்
பரிந்திடும் வெய்யவாய தீவினைபயிற்று மாற்றால்
விரிந்தவிவ் வெகிப்துநாட்டில் மேபவென் சனமும் யானும்
தெரிந்திடும்படியேயான தீவினை யாளர்க்கணமர். ௯௯

உற்றது போதுந்தேவ னுருமுறு முழக்கமோடு
துற்றகல் மாரிதானுந் தொலைந்திடப் புரியுமாறே
மற்றவற்பணிந்து கேண்மின் வருத்ததுஞ் சனதனை நீவிர்
சொற்றவாறேகவுய்ப்பேன் சொலுந்தடை யினியின்றென்றான். ௪௦௦

வேந்தனை மோசேபார்த்தில் வியனகரொரீஇயானின்று
போந்திடு மளவிற்கைகயைப் புங்கவற் கெதிர் விரிப்பேன்
வேந்தழ லுருமினோதை விலகிடுக கல்லின்மாரி
பூந்தலத் தினியின்றையன் புவியிதென் றதனு லோர்வாய். ௪௦௧

ஆயினும் நீயுமுன்பா லமர்ந்துள வடியார யாரும்
தூயனுக்கஞ்சிராங்கு மென்பதா துணிந்து தேர்ந்தேன்
தீயினை யனையாயென்று செப்பியன் றவன்பானிறு
போயினன் பெருமானன்பு பொலிவுறப் பொருந்தினோனே. ௪௦௨

குறித்தவிப் போதினீள்வாற் கோதுமை குரல்களீன்றும்
நெறித்தகை சணல்கள்பூத்தும் நிறைதலினழிந்த வாகே
தெறித்த கோதுமையுங்கம்புந் திருத்தக முளையாவாற்றாற்
பொறித்தழற் கல்லின்மாரி பொழிந்தழி யழிந்திலாவே. ௪௦௩

பொற்புறு மோசேயந்தப் புரவலன் சமுகந்தன்னில்
நிற்புற வொழிந்தேயந்த நீணகரொருவித் தன்கை
அற்புத னெதிரேசென்று விரித்தன னம்முழக்குங்
கற்பொழி மழையு மோய்ந்த கனமழை புவியிலோய்ந்த. ௪௦௪

இத்துய ரொழிந்தபோதே யிறைவனும் குடிகள்யாரும்
மெத்திசை யிறைமோசேயால் விண்டவம் மாற்றம்போலத்
தத்தமதுளத்தைச்சாலக் கடினமதாக்கிச் சார்ந்தார்
கொத்துறுஞ் சனமன்றேகக் கொடுத்திலன் விடையக்கோவே. ௪௦௫

(வேறு) மொய்ந்தபுகழ்ப் பரஞ்சோதி மோசேயை முகநோக்கி மொழிப்பா
ரவேகனன்றுன்
மெய்ந்தபல வடையாளம் விளக்குதற்கும்வியன்மேலோன் யானேயென்ன
டய்ந்துளத்தி னீருமுணர்ந்தறிவதற்கு முற்றெகிப்தி லுஞற்றுகின்ற [௧௦௬
பொய்த்தலிலெவ் வினைகளைப் புலையறையான் அவர்நடுவிற் புரியாநின்ற.

அற்புதங்க டம்மையுநின் அரியமக்கள் அவர்புதல்வ ராஞேர் காதில்
உற்றுறநீ விரமதா வுணர்த்திவைக்கு மாறுமம்மன் றுள்ளந்தனை
மற்றவன்றன் பணிபுரிவோர் மனத்தைமிகக்கடினமதா வகுத்தேனின்னுங்
கொற்றமிகு மவ்வடிவாட் கோமான்முன் உறுகவெனக் கூறினனே. ௧௦௭

தூதுரைப்போன் றுணைவனொடுஞ் சுடர்மகுட வயவேந்தன் சூழல்நண்ணி
மோதுமடற் படையோயென் முன்னிலையி லெதுகாறு முனைச்தாழ்த்தாத
தீதுமிகப் பொருந்துவையென் சனமெனக்கு வழிபாடு செய்யுமாறு
போதறநீ விடுதலிலுன எல்லையெங்கும் நாளைவிட்டில் புகச்செய்வேனே.

உன்றந்தை யாதியவுன் குலமுதலோ ருலகிலுற்ற வதுமுன்னாக
இன்றளவுங் கண்டிலாங் கதற்கிணையா விருநிலத்தை முழுதும்மூடித்
துன்றியடற் கனமழைக்குத் தப்பிமுனே துற்றவைதுய்த துறலுமன்றிப்
பொன்றளிர்கொள் மரங்களெல்லாம் புகுந்தவைகள் தின்றழிவு புரிவ மா
தோ. ௧௦௯

மன்னவநின் வாழ்மனையும் மற்றுனது பணிசெய்வோர் மனையுமிந்தப்
பொன்னகரத் தவர்மனையும் புகுவவட ரினப்பதங்க மென்னவின்னே
பன்னரிய பெருஞானப பரஞ்சுடரா மெபிரேயா பரன் யேகோவா
சொன்னனனென் றுரைதொகுத்துத் தொடுகழலோன் முகமகன்றத் தோ
ன்றல் மீண்டான். ௧௧௦

அவ்வுழிநின் றவனகல ஆங்கணுறும் பணிபுரிவோர் அரசை நோக்கித்
தெவ்வடும்போ ரடல்வேந்தே செப்பிடக்கேள்சிக்குகண்ணியாகவெம்முன்
எவ்வளவு மிம்மோசே யிருந்திடுவான் இச்சனந்தந் தேவை யேத்தச்
செவ்விடை யல்குகவெகிப்து சேதமுற்ற துணர்ந்திலையோ செப்புகென்
றார். ௧௧௧

தூதுவந்தோர் தம்மையந்தத் தோன்றலழைத் தும்பரனைத் தொழுதற்காகப்
போதுகநீ யார்யாராங்கேகுமவர் யானறியப் புகன்மி னென்றான்
ஓதுமிறைக் குற்சவநா முஞற்றுவதால் மந்தைநிரை பொருள்களோடெங்
கீதத்வி ரிளைஞர்முதி யோர்சிறுவர் சிறுமிகளுஞ்செல்வோமென்றார். ௧௧௨

வேந்தனவர் தமைநோக்கி விழித்திருமின் உமைத்தீங்கு மேவுங்கண்டீர்
போந்திடுதற் கும்மையுமும் புதல்வரையும் எவ்வாறு போக்கு வேன்யான்
ஆந்தகைமே லவனுமும்மோ டவ்வாறே யமர்கமற்றவ் வாறேவன்று
ஈந்திடுவ லாடவர்களே யேகவிடை இதுவேநீர் விழைந்ததென்றான். ௧௧௩

துன்னுமடல் வேந்தனிவை சொல்லிமுன்னின் றுற்றார்தமைத் துரத்திவிட்
டான்
பன்னுதனை யேகோவா மோசேயைப் பார்த்தருளிப் பதங்கமற்றிம்

## ௫. பஸ்காவிரதப்படலம்.

ஊதுசென்றே சிருவரையுந் தோல்லெகிப்துவளநாட்டிற் றூயோன்பார்த்
திம்
மாதமிருவிசேடமதாம் வருடத்து முதல்மதியாம்வகுத்துக்கொண்மின்
மேதகுமித்திங்களிடை மேவியபத் தாந்தினத்தில் விழைவினோடும்
நீதகுமீசுரவேற் செனமியற்றுஞ் செயலுனது தெரிக்கக்கேண்மோ. ௧

வீடுதொறுந்தலைமையினராயிருப்போர் வீடொன்றுக் கொவ்வோர்குட்டி
ஆடுதெரிந்தேகொள்கவோர்மனையிலான்குறையிலதனை யுண்ணக்
கூடுமயலகத்தவனோ டொன்றெடுத்துக்கொளக்கடவர் குறித்தவாளின்
நீடுதொகையுணுவளவுக் கணவேயாய் நிகழ்த்துபரன் கோரவேண்டும். ௨

அப்பறள்கள் பழுதறுமோராட்டை யிளங்கடாக்களேயாகவேண்டும்
செப்பமுறுஞ்செம்மறியில் வெள்ளாயினிலேனுமதைத் தெரிந்தேகொள்க
கைப்படுத்திப் பதினான்காந்தினங்காறுங் கட்டிவைத்துக் களறுமொவ்
வொன்
றெப்பெரியசபையினரும் அந்தியினிற்சேதித்த லியற்கையர்மால். ௩

சேதிக்கும்போதுதிரஞ் சிறிதெடுத்துத்தாமமுது செயுமில்வாயிற்
போதுற்றநிலைக்கால்களிரண்டினிலும் பொருந்தியமேற்படியின்கண்ணும்
மீதுற்றுவிழத்தெளிக்க மென்றசையை யங்கியிடை வெதுப்பியல்லித்
தீதற்றபுளிப்பிலடை கசப்புறுகீரையினோடுந் தின்கமாதோ. ௪

பச்சையதாயன்றுகறும் பானீயத்தவித்துமன்று பறள்கடத்தம்
உச்சிதமாஞ்சிரமுதலாமுறுப்புகளை யனலகத்தே வெதுப்பியுண்க
மிச்சமதாயவற்றிலொன்றும் மிகுமிரவுவிடிவளவுமேவொணாது
அச்சவையூண்சேடமுறில் அனலகத்திலதுதகனமாகவென்றே. ௫

அன்றியுநும் இடைக்கச்சை யரைக்கசைத்தும் மடியினையிற் றொடுதோ
லாக்கித்
துன்றியகைக்கோல்பிடித்தே சீர்தன்னிலிருக்கிவுணத் துய்ப்பீராக
மென்றிடும்போதினிலதனை விரைவாகப் புசித்திடுதல் வேண்டுமண்டர்
என்றுமுறுர்தனிமுதலா மெங்கோமான் பஸ்க்காவீதெனத்தேர்வீரே. ௬

அவ்விரவிலெகிப்துணிநாட்டகத்திலெவ்கும் யானணுகியாக்காக்குற்ற
ஒவ்வொருவன்றலைச்சனுட னுறுவிலங்கின் றலைப்பேறெவ்வொன்றுமா
ய்த்தே
இவ்விதமாய்ப் பிரபுக்களெவர்களையுந் தண்டிப்பல் யானே தேவன்
செவ்விரத்தம்பொழுதஞ் செழுமனைக்கணடையாளமாகச் சேரும். ௭

அக்காமவ்வடையாளமதனைக்கண் டெக்கணைவிட்டப்பாலாவேன்
கொக்காருமலர்ப்படப்பை சூலவுமக்காட்டகர்மேலாக் கொடியதாம்ச்
சங்காரவாதையும்பாற் சாராதென்பதைபதிவீர் சாற்றுமித்த
மிக்காதினமுமக்கு ஞாபகமாக் குறிபாக வகுத்துக்கொண்மின் ௮

மத்தினத்திற்றலைமுறைக டோறுமக் குல்விரத முறவேசெய்மின்
நித்தியமாகியமமதா கீரதனையாசரித்தல் நெறியேயாமால்
சுத்தமுறும் புளிப்பிலப்ப மெழுநாமூர்துய்க்கமுதற்றினத்திக் கண்ணும்
வைத்தபுளிப்புறுமாநும் வளமனையினகத்தினில் நீர் வைக்கொணுதே. ௯

ஓதுற்றவித்தினங்க ளூடுபுளித்திடுமப்ப முண்போர்யாரும்
தீதற்றவிசிரவேற் சபையினின்றுஞ் சேதிக்கப்படுதல்வேண்டும்
போதுற்றமுதற்றினத்து மேழாநாட்போதினுமே புரிகுவீரால்
பேதற்றவுணுக்கரும மலாதவற்றிற் பிறிதியற்றல் பெற்றியன்றே. ௧௦

உங்கள்பெருஞ்சேனையையா னுயரெகிப்துநாட்டினினின் றொருங்குசெல்ல
இங்குபுறப்படுவிக்குமித்தினத்தி லியற்றுவதா லியம்புமிந்தப்
பங்கமில்சீர் விரதமுறல் பான்மையதாஞ் சதாகால நியமமாகத்
தங்குறுநுந் தலைமுறைகடொறுமிதனைத் தவறுமற் றகக்கைக்கொள்வீர். ௧௧

முதல்மாதம் பதின்மூன்றுந் தினத்தந்தி முதற்றொட்டு மொழியத்திங்க
ளதின்மூவேழாந்தினமட்டாகவே புளிப்பிலப்பமருந்துங்காலம்
இதமாகப்புளித்தவுணவெதுவுமுண்ணும் பரதேசியெனினுமிக்க
சுதமாகச் சுதேசியேயெனினுமிதச் சபைநின்றுந் தொலைததல்வேண்டும். ௧௨

புளித்தவுணவெதுவெனினும் புசியாமற் புளிப்பறவே புரிந்தவப்பம்
களித்திருக்குஞ் சகலமனைக் கண்ணுமுணல் நுமர்யார்க்குங் கடனென்பாயென்
றளித்தபெருந்திருக்கருணை யமலனுரைத்தனனவ்வாறன்றுமோசே
விளிதகிசிரவேலரினுண் முதியோரையோரிடத்தே விழைந்துகூட்டி. ௧௩

(வேறு) உங்கள்குடும்பப் படியேநீ ருற்றவாட்டுக்குட்டிதெரிந்
திங்கப்பசுக்காவினைச்சேதித் திசோப்பதனின் கிளைத்தண்டை
அங்கைப்படுத்திக் கிண்ணமதிலந்தவுதிரமதிற்றோய்த்துத்
தங்கும் மனையின் வாயிலின்மேற் சாரும்விட்டத்தனின்மேலும். ௧௪

இரண்டுநிலைக்கால் மீதினுமே யெய்தும்படியாத் தெளித்திடுமின்
இரண்டுகுடும்பமொடுநீவிர் சேரின்மனைவாய் வெளியில்வரா
திருண்டகங்குல் விடிவளவுமெவருமிருமினயேகோவா
மருண்டமனஞ்சே ரெகிப்தியர்பால் மருவியவரை வதைத்திடுங்கால். ௧௫

மற்றப்பொழுதம் மனைவாயில் மருவுமுதிரங் காண்டோறுஞ்
செற்றங்கணுகுமவனிவிர் சேருமனைக்கண் சேரவிடா
தற்புற்றிரவிற் றனிமுதல்வனுங்கும் மில்வாய் கடந்துசெல்லும்
உற்றுங்குலத்தோர்க்கிஃதென்று மோவாநியமமெனக்கொள்வீர். ௧௬

விள்ளவரியபெருமகிமை விரவுந்தகைசேர் பெருமுதல்வ
னுள்ளக்கருணையதனாலே யுரைத்ததிருவாக்கின்படியே
கொள்ளநுமக்குத்தருநாட்டிற் குறுகியதியும் போதினில்நீர்
தள்ளவரியவிவ்விரதந் தனைக்கைக்கொள்வீர் தவறுதே. ௧௭

இன்னபடிநீர்புரிகவில் இதநீரியற்றலென்னையென்றும்
பின்னக்குலிக்குழக்குலத்தோர் கேட்பாரென்னிற் பெருமுதல்வன்
முன்னரெகிப்தையழித்தழியேம் மூதில்கடந்து புரந்தளித்தான்
அன்னகருணைக்கதிருதியீதாமென்றறைவீரவர்க்கென்றான். ௧௮

பன்னவரிய தனிமுதல்வன் பணியைக்கடவாவெழில்மோசே
சொன்னமொழிகேட் டெதிர்தாழ்ந்து தொழுதாங்கிசிரவேல்மரபோர்
அன்னபரனங்கிருவருக்கு மறைந்தமொழிபோல்வழுவாமற்
றன்னியயற்றிமுடித்தார்கள் துயரமனைதநர் தொலைக்கிடவே ௧௯

இருள்சேர் கங்குல்மத்தியினிலெம்மானெகிப்துநகர்புரக்கும்
மருள்சேரரசனுசனமேல் மன்னுக்தலைச்சன்முதலாகப்
பொருள்சேரங்காட்டெவ்வெவர்முற் புதல்வர் விலங்கின்முதற்பறளும்
அருள்சேர்பவரைப் புரந்திடுவானடித்தானெவருந் துடித்தெழுந்தார். ௨௦

புல்லாருறையுமந்தகெடும் புன்மாநாட்டினிடைகுணைய
மில்லாதிருந்த மனையில்லையிதனு லங்காட்டெல்லையெங்கும்
எல்லாவில்லத்துறவோரும் இரங்கிப்புலம்புமாறதனுல்
சொல்லாவடங்காப் பெரும்புலம்பல் துன்னிற்றந்தத் துன்றிரவில். ௨௧

பலகாவிரதப்படலம் முற்றும்.



## ௬. மீட்சிப்படலம்.

துற்றிடுகெங்குலி னன்ன துணர்ந்திடு தொல்லை யெகிப்திறைவன்
ஒற்றரையங்ங னழைத்துமர் தம்முட னெல்லையி னிவ்விருவண்
உற்றிடுமென்சன மத்தியி னினறெழ வற்று நடக்தொருவிச்
சொற்றுளவப்படி பூசனைநீர்தொழு தாயவனுக்கிடுமின். ௧

மன்னிய மந்தை யினத்தையு முந்தொறுவர்க்க மனைத்தையுநீர்
பன்னியவப்படி கொண்டு படர்ந்திடுபாதையை நோக்கிடுமின்
என்மிசை யாசியு மோதிடுவீரென இம்முறை யவ்விறைவன்
துன்னிய வீசிர வேலவனின்று தொலைந்திட வோதினனே. ௨

இன்னகர் வாழ்பவ ரெம்மவர்யாரு மிறந்தன ராமெனவே
புன்னின ரீசிர வேலரைமிக்க பதைப்பொ டனுப்பிவிடற்
குன்னி யெழுப்பினர் முன்பிசைபிண்டிபுளிப்பிலையொன்றுவதன்
முன்னுடை யிற்கொடு தோளிடை யிட்டவர் முந்திநடந்தனரே. ௩

முந்துற வொற்ற னுரைத்தது போலவ ருதுககோத்தவர்பாற்
றந்திடு வீருயர் வெள்ளி பொனின்பணி தருமுடை யென்றிவர்கள்
புந்தியுடன் பரவுற்றன ரெம்மிறை புரிதயை மற்றிவர்மேல்
உந்திட வுய்த்தனி னல்கவி வாறவ ருடையன வெனவினரே. ௪

(வேறு.) வீறிலங்கு மிராமசே சகன்றிசிர வேலரினஞ் சிறுரேயல்லால்
ஆறிலக்கம் புருடர்கடர் தப்போது சுக்கோத்தி லணுகினரால்
வேறுகிலத் தன்னியர்பல் லோராடு முதலான மிருகவர்க்கக்
கூறிலக்க மிருத்தவையுங் கூடகூடத் திடவங்கே குழுகினரே ரு

ஆங்கவர்கள்கொடுபெட்ர்ந்த அரிசிச்சுண்ணம்புளிப்படையாதிருந்தவாற்றால்
வீங்குபுளிப் பிலாதவடை வேவித்தா ரவரெகிப்தை விரைவினோடும்
நீங்கிவழிச் சென்றதனால் நெறிக்குணவு பிறிதொன்றும் நேர்ந்திலாரால்
ஓங்குமெகிப் தினிலிவர்வாழ வுற்றாண்டுநானூற்றி னொடுமுப்பானே. சு

இவ்விரவி லெங்கோமா னெகிப்தினினின் றீசிரவேல் மரபினோரை
அவ்விரைவி னகலுவித்து நடத்தலுற்றா னச்செயலா லினையகங்குல்
இவ்வியனுமவற்கெனவேயாசரிக்குஞ்சிறப்புடைத்தாய்ச்சேர்ந்ததின்னோர்
செவ்விதினிற் றலைமுறைகடொறுங்கைக்கொள் தேவதிசிசிறந்தவீதே. எ

சொல்லரிய பரனெகிப்திற் றாதுசென்றோ ரிருவரையுந் தோகுத்துநோக்கி
வல்லபசுக் காவிதியை வகுத்துரைக்கக் கேண்மினுங்கள் மரபின்கண்ணோ
ரல்லவரா மந்நியரு ளெவனெனினு மதனையுண்ண லடாதேயாகும்
கல்விருத்த சேதனஞ்செய் தன்றியுண லடிமைகளும் நண்ணொணாதே. அ

உற்றபர தேசியுமூலங் குறும்பணிசெய் பவனுமதை யுண்ணொணாது
துற்றமனை யகத்துவைத்துத் துய்ப்பதன்றி வெளியினிடை சொற்பமேனும்
மற்றனையபசுக்காவாம்மாமிசத்தைக்கைக்கொண்டுவரவொண்ணாது [மின்
சொற்றவதனென்பினொன்றுந் துணிசெய்தலடாதென்றுந் தொகுத்துத்தேர்

மன்னியநுங் குலத்தெவரும் மற்றிதனை யாசரிக்க வழுவொணாது
அன்னியனொ மொருவனுன்பா லமர்ந்திதனை யநுசரிக்க மவாவுற்றானேல்
துன்னியதன்புதல்வரொடுஞ்சொல்விருத்தசேதனத்தைத்தொடர்ந்துசெய்த
பின்னிருந்து சுதேசியைப்போற் பெட்பினுடன் கைக்கொள்ளப் பெறுவ
ன் மாதோ. க0

துற்றவிதிப் பிரமாணஞ் சுதேசிகட்கு மும்பாலிற் றொடர்ந்து நண்ணி
யுற்றபர தேசிகட்கும் விகற்பமின்றி யொன்றேயா யிருத்தல் வேண்டும்
மற்றிதுபோற் புரிமினென வானவனிம் மாற்றமெலாம் வகுத்தஞ்ஞான்று
சொற்றனனப்படியவர்கள்சோர்வின்றியனைவோருந்தொடர்ந்துசெய்தார்.

கொத்திலகுமலர்ச்சினைக்காக் குலவெகிப்து நாட்டினின்றுசுறித்தவாறே
ஒத்திருக்குமுயர்புடையோரொருவருமற்றுயர்ந்தருளுமொருநங்கோமான்
மெய்த்துபுகழீசிரவேல் வியன்மரபைச் சேனைகளாய் விழைவினோடும்
அத்தினமே புறப்படுவித்தனனமலற் காரொப்பா ராயுங்காலே. கஉ

மற்றதன்பின் மோசேயை வானவன்பார்த் தீசிரவேல் மரபினுள்ளும்
உற்றபல விலங்கினுள்ளுங் கருவினிலூற் றுதித்தமுதற்பேறியாவும்
பற்றினுடனேயெனக்குப்பிரதிட்டை புணல்வேண்டும் புகரக்கேண்மோ
துற்றவையனைத்துமென தாமெனவே தன்றருளாற் சொல்லினனே. கங

ருதிலனன்றிசிரவேற்றொருதிமுன்போய் சுமரக்கள்சொல்லக்கேண்மின்
நீத்துறநீர் செறிந்தசிறை வீடாகு மெகிப்தினின்று நேசனும்மை
மீதுயர்தன் கைப்பலத்தால் மீட்டகலச் செய்தனனால் விட்டநீங்கிப்
போதுருநீ ரித்தினத்தை மறவியின்றிப் புகழ்செய்தல் புரிகுவீரே. ௧௪

இவ்வாபீ பெனுமதியி லித்தினத்தே புறப்பட்டீ ரியப்பக் கேண்மின்
எவ்வாறு மனக்கரியோ னின்பாலுந் தேனுமல்கு மெழில்சேர் நாட்டைச்
செவ்வாறு நினக்கருள்வ லென்றுனை செய்ததுகா னுளாரதி
தெவ்வாழ்வு பெறுகதுமாந் தேயமதிற்சேரவுனைச் செயயும்போதே. ௧௫

அம்மதியிலாசரிப்பீ ரெழுநாளும் புளிப்பிலப்ப மருந்தல் வேண்டும்
எம்மகிமைத் தனிமுதல்முன் னேழாநா ளனுட்டிப்பொன திருக்குமன்றே
அம்மபுளிப் படைகாணப் படுதலுமப்பா லாகாது புளித்தமாவும்
உம்மணிநாட்டெல்லையின்க ணெவ்விடத்துமுறுதபடி யொழிக்கமாதோ.

அத்தினத்துன்புதல்வனைப்பார்த்தன்றெகிப்துநாட்டினையானகன்றபோது
நித்தியநின் மலனெனக்கு நிகழுவித்த அச்செயலி னிமித்தமாக
இத்தினத்து மியற்றலென்க இறைவன்விதிப் பிரமாணமெனறு முன்வாய்
வைத்திடவு முன்கையிலோர் அடையாளமாகவுமே மருவுமாறும். ௧௭

உன்னிருகண் களுக்கிடையே யுற்றிஃதோர் ஞாபகமாங் குறியேயாயும்
மன்னிடுக கைப்பலத்தால் வானவனின் றெகிப்துவளம் பதியினின்றே
நின்னையெழுந் திடப்புரிந்தான் நீயதனாலாண்டுதொறும் நிகழ்சதுங்காலத்
துன்னுகிரமப்படியே சோர்வின்றி இந்நியமந் தொடர்ந்துசெய்வாய். ௧௮

முன்னிறைவ னுனக்குமுன்றன் குலத்தினர்க்கு மாணையிட்டு மொழிந்த
வாறே
உன்னையடற் கானன ருறைநாட்டிற் சேர்த்ததனை யுனக்கேதந்த
பின்னுதரத் துதித்தமுதற் பேறனைத்தும் விலங்கின்முதற் பேறியாவும்
பன்னரியபெருங்கருணைப்பரம்பொருட்குப் பிரதிட்டைபண்ணுவாயே

அவற்றிலுறு மாண்களெல்லா மனவில்லாத் தனிமுதல்வ னுடையவாகும்
கழிற்றுகின்றகத்தவத்தின் முதற்பேறாய் நண்ணுமோவ்வொன்றினையுமாடி
இவற்றினையொவ் வோராட்டுக்குட்டிகொடு மீட்டிடுகவின்றேலன்ன
வெற்றினையுங்கழுத்தொடிப்பாயெம்மனிதமுதற்பேறும்மீட்டல்வேண்டும்

பின்னுவரி னுங்குலத்துப் பிள்ளைகளீ தென்னையென்றாற் பெருமைமூர்த்தி
அன்னுவரி னுமடிமைத் தனவீடா யமர்ந்தவக்நாட் டகத்தினின்று
தன்னருங் கைப்பலத்தாற் புறப்படச்செய் தனனெம்மைத் தாணியாளும்
மன்னுதிமுதல்வனருள் வாசகம்போ லெமக்குவிடை வழங்கானுமி. ௨௧

நிலைத்தமன வலிகாட்டி நின்றதனால் நிமலனந்நாட்டவர்க்கு னெல்லாத்
தலைப்புதல்வர் தமையுமிரு கன்களுக்குட் டலைப்பேறு தமையுமுற்றுக்
கொலைத்தனன்மற் றதனால்யான் தோன்றுமுதற் பேருமாண் டொகுதியெ
ல்லாம்
அலைத்துவமாந் திருமகிமையமலனுக்குப் பலியாக அளிக்கின்றேனே. ௨௨

மிக்கவென்றன்புதல்வருக்குள் மேவுதலைப்பெறவிணைந்து மீட்டின்றேனல்
தக்கபுகழ்யேகோவா வெகிப்துநகர் தனையழக்கள் தணக்கச்செய்த
ஆக்கருணைக்கிதுவுன்னைக் கடையாளமாகவுகின்னிருகண் ணூடும்
மிக்கநுதற்குறியாவும் மேவுகவென்றவனிடத்தில் விள்கவென்றான். ௨௩

வெங்கடலம்பெருந்தானை விறல்வேந்தனிவர்க்குவிடை நல்கிமீண்டும்
இக்கடல்வெஞ்சமரில்வந்தா லிவர்கலங்கியெகிப்துறவுங் கூடுமென்றுப்
பொங்கடல்சொல்பெலிஸ்த்தர்தலவழியணித்தாய்ப் பொருந்தினும்போ
க்கிலாது
செங்கடலந்துறைவனத்திற் றேவவரைச்சுற்றிவழி செலச்செய்தானே. ௨௪

அணியணியாயனையோர்களங்கர்நின்றெழுந்தனராங்கனையகாலை
திணிபுயயோசேப்புமுன்னாட் டேவருளாற் காணுனீர் சேருங்காலை
அணிபெறவென்னென்பையுங்கொண் டடைகிரென ஆணைசெய்வித்திரு
ந்தவாற்றால்
தணிவறுசெம்புகழ்மோசே தானதையுங்கொண்டுவழி சார்ந்தானன்றே..
௨௫

சுக்கோத்தினின்றெழுந்து சுரமதன்பாலெல்லையினிற் றெருகுமேதாமிற்
புக்கார்கள் பாளயத்திற் புங்கவனங் கவர்க்கிரவும் பகலும் போத
மிக்காமெல்லிடைநடத்த வியன்மேகத்தறியிலொளி விளக்கியல்வில்
அக்காலைவழிநடத்த அக்கினித்தூணிலுமாகி யவர்முன்சென்றான். ௨௬

இகலுடைய கடியமனத் தெகிப்திறைவன் சிறையிடைநின்றிசரவேலைப்
புகலரியவல்லமையால் மீட்டுவழிநடத்துமுயர் புனிதமூர்த்தி
பகலிடையுற்றங்குவழி படருவிக்கப் பணித்தமுகிற்றம்பமோடு
மிகலுறுகாரிருளிரவில் விதித்தவங்கித்தறியினையும் விலக்கிலானே. ௨௭

(வேறு.) மேலவன் மோசேதன்னை விழித்துநீர்மீண்டுசென்று
கோலமார்மிக்தோலுக்குங் கொள்கடலினுக்குமூடே
சீல்மார்பாகால்சிபோன் செழும்பதிக்கெதிரதான
பாலமர்பியகிரோக்கிற் படர்ந்திறுக்கதனிற்பாங்கே. ௨௮

பரவையங்கரையின்கண்ணே பாளயமிறங்குமாறு
விரவுமிசிரவேலர்க்கு விளம்புக வெகிப்துநாட்டின்
புரவலனவரிக்காட்டி னகத்துளார் புறஞ்சூழ்வெங்கான்
மருவுறவடைத்துக்கொண்டதென்னவே வருப்பானன்றே ௨௯

அப்பொழுதிவர்கடம்மைத் தொடர்தர அவனுள்ளத்தை
வெப்புறுகடினமாக்கி மேலவன் யானேயென்ப
தப்படைவேந்தனுமவன்படையனைத்தினுலும்
இப்பதியவர்க்கென்மேன்மை தெரிதரவியற்றுவேனே. ௩0

என்றுரைசெய்தானிவ்வாறவர்களுமியற்றலுற்றார்
சென்றனரென்னுஞ்செய்தி செவிப்படலோடும்வேந்தும்
நின்றுளசனமுந்தமனைஞ்சகம்பேதித்தன்றோர்
இன்றெம்பணிசெய்யாம லேகாவிடலென்னென்றார். ௩௧

